உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவான்மியூர்ப்புராணம்.



இஃது

தசாவதானம்

பேறை - ஜெகநாதப்பிள்ளையவர்கள் மாணாக்கர்

அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரால்

இயற்றப்பட்டு,

மெ - அ - ரு - அ - ரு.

## இராமநாதஞ்செட்டியாரவர்கள்

பொருளுதவியால்,



ஷை முதலியாரவர்களான்மார்த்தநண்பராகிய

## பிருங்கி-இராமசாமிமுதலியாரவர்களது

சென்னை

இந்து யூனியன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

மன்மத௵ - வைகாசி௴

1895.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவான்மியூர்த்தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ
ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே. (க)

சந்துயர்ந்தெழுகாரகிறண்புனல்கொண்டுதெஞ்
சிந்தைசெய்தடியார்பரவுந்திருவான்மியூர்ச்
சுந்தரக்கழன்மேற்சிலம்பார்க்கவல்லீர்சொலீ
ரந்தியின்னொளியின்னிறமாக்கியவண்ணமே. (உ)

கானயங்கியதண்கழிசூழ்கடலின்புறந்
தேனயங்கியபைம்பொழில்சூழ்திருவான்மியூர்த்
தோனயங்கமராடையினீரடிகேள்சொலீ
ரானையங்கவ்வுரிபோர்த்தனலாடவுகந்ததே. (ங)

மஞ்சுலாவியமாடமதிற்பொலிமாளிகைச்
செஞ்சொலாளர்கடாம்பயிலுந்திருவான்மியூர்த்
துஞ்சுவஞ்சிருளாடலுகக்கவல்லீர்சொலீர்
வஞ்சநஞ்சுண்டுவானவர்க்கின்னருள்வைத்ததே. (ச)

மண்ணினிற்புகழ்பெற்றவர்மங்கையர்தாம்பயி
றிண்ணெனப்புரிசைத்தொழிலார்திருவான்மியூர்த்
துண்ணெனத்திரியுஞ்சரிதைத்தொழிலீர்சொலீர்
விண்ணினிற்பிறைசெஞ்சடைவைத்தவியப்பதே. (ரு)

போதுலாவியதண்பொழில்சூழ்புரிசைப்புறந்
தீதிலந்தணரோத்தொழியாத்திருவான்மியூர்ச்
சூதுலாவியகொங்கையொர்பங்குடையீர்சொலீர்
மூதெயில்லொருமூன்றெரியூட்டியமொய்ம்பதே. (சு)

வண்டிரைத்ததடம்பொழிலின்னிழற்கானல்வாய்த்
தெண்டிரைக்கடலோதமல்குந்திருவான்மியூர்த்
தொண்டிரைத்தெழுந்தேத்தியதொல்கழலீர்சொலீர்
பண்டிருக்கொருநால்வர்க்குநீருரைசெய்ததே. (௭)

தக்கில்வந்ததசக்கிரிவன்றலைபத்திறத்
திக்கில்வந்தலறவ்வடர்த்தீர்திருவான்மியூர்த்
தொக்கமாதொடும்வீற்றிருந்தீரருளென்சொலீர்
பக்கமேபலபாரிடம்பேய்கள்பயின்றதே. (௮)

பொருதுவார்கடலெண்டிசையுந்தருவாரியாற்
றிரிதரும்புகழ்செல்வமல்குந்திருவான்மியூர்ச்
சுருதியாரிருவர்க்குமறிவறியீர்சொலீ
ரெருதுமேல்கொடுழன்றுகந்தில்பலியேற்றதே. (௯)

மைதழைத்தெழுசோலையின்மாலைசேர்வண்டினஞ்
செய்தவத்தொழிலாரிசைசேர்திருவான்மியூர்
மெய்தவப்பொடிபூசியமேனியினீர்சொலீர்
கைதவச்சமண்சாக்கியர்கட்டுரைக்கின்றதே. (௧௦)

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ
ராதியெம்பெருமானருள்செய்யவினாவுரை
யோதியன்றெழுகாழியுண்ஞானசம்பந்தன்சொன்
னீதியானினைவார்நெடுவானுலகாள்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - கௌசிகம்.

---

திருச்சிற்றம்பலம்.

விரையார்கொன்றையினாய்விடமுண்டமிடற்றினனே
யுரையார்பல்புகழாயுமைநங்கையொர்பங்குடையாய்
திரையார்தெண்கடல்சூழ்திருவான்மியூருறையு
மரையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௧)

இடியாரேறுடையாயிமையோர்தம்மணிமுடியாய்
கொடியார்மாமதியோடரவம்மலர்க்கொன்றையினாய்
செடியார்மாதவிசூழ்திருவான்மியூருறைய
மடிகேளுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௨)

கையார்வெண்மழுவாகனல்போறிருமேனியனே
மையாரொண்கணல்லாளுமையாள்வளர்மார்பினனே
செய்யார்செங்கயல்பாய்திருவான்மியூருறையு
மையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௩)

பொன்போலுஞ்சடைமேற்புனறுங்கியபுண்ணியனே
மின்போலும்புரிநூல்விடையேறியவேதியனே
தென்பால்வையமெலாந்திகழுந்திருவான்மிதன்னி
லன்பாவுன்னையல்லாலடையாதென தாதரவே. (௪)

கண்ணாருந்நுதலாய்கதிர்சூழொளிமேனியின்மே
லெண்ணார்வெண்பொடிநீறணிவாயெழில்வார்பொழில்சூழ்
திண்ணார்வண்புரிசைத்திருவான்மியூருறையு
மண்ணாவுன்னையல்லாலடையாதென தாதரவே. (௫)

நீதிநின்னையல்லாநெறியாதுநினைந்தறியே
னோதிநான்மறைகண்மறையோன்றலையொன்றினையுஞ்
சேதிசேதமில்லாத்திருவான்மியூருறையு
மாதியுன்னையல்லாலடையாதென தாதரவே. (௬)

வானார்மாமதிசேர்சடையாய்வரைபோலவருங்
கானாரானையின்றோலுரித்தாய்கறைமாமிடற்றாய்
தேனார்சோலைகள்சூழ்திருவான்மியூருறையு
மானாயுன்னையல்லாலடையாதென தாதரவே. (௭)

பொறிவாய்நாகணையானொடுபூமிசைமேயவனு
நெறியார்நீள்கழன்மேன்முடிகாண்பரிதாயவனே
செறியார்மாமதில்சூழ்திருவான்மியூருறையு
மறிவேயுன்னையல்லாலடையாதென தாதரவே. (௮,௯)

குண்டாடுஞ்சமணர்கொடுஞ்சாக்கியரென்றிவர்கள்
கண்டார்காரணங்கள்கருதாதவர்பேசநின்றாய்
திண்டேர்வீதியதார்திருவான்மியூருறையு
மண்டாவுன்னையல்லாலடையாதென தாதரவே. (௧௦)

கன்றாருங்கமுகின்வயல்சூழ்தருகாழிதனி
னன்றானபுகழான்மிகுஞானசம்பந்தனுரை
சென்றார்தம்மிடர்தீர்திருவான்மியூரதன்மேற்
குன்றாதேத்தவல்லார்கொடுவல்வினைபோயறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்
### திருவாய்மலர்ந்தருளியது.

### திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

விண்டமாமலர்கொண்டுவிரைந்துநீ
ரண்டர்நாயகன்றன்னடிசூழ்மின்கள்
பண்டுநீர்செய்தபாவம்பறைந்திடும்
வண்டுசேர்பொழில்வான்மியூரீசனே. (௧)

# திருவான்மியூர்த்தேவாரம்.

பொருளுஞ்சுற்றமும்பொய்ம்மையும்விட்டுநீர்
மருளுமாந்தரைமாற்றிமயக்கறுத்
தருளுமாவல்லவாதியாயென்றலு
மருளறுத்திடும்வான்மியூரீசனே. (௨)

மந்தமாகியசிந்தைமயக்கறுத்
தந்தமில்குணத்தானையடைந்துநின்
றெந்தையீசனென்றேத்திடவல்லிரேல்
வந்துநின்றிடும்வான்மியூரீசனே. (௩)

உள்ளமுள்கலந்தேத்தவல்லார்க்கலாற்
கள்ளமுள்ளவசிக்கழிவானலன்
வெள்ளமும்மரவும்விரவுஞ்சடை
வள்ளலாகியவான்மியூரீசனே. (௪)

படங்கொள்பாம்பனைப்பான்மதிசூடியை
வடங்கொண்மென்முலைமாதொருகூறனைத்
தொடர்ந்துநின்றுதொழுதெழுவார்வினை
மடங்கநின்றிடும்வான்மீயூரீசனே. (௫)

நெஞ்சிலைவர்நினைக்கநினைக்குறார்
பஞ்சின்மெல்லடியாளுமைபங்கவென்
றஞ்சிநாண்மலர்தூவியழுதிரேல்
வஞ்சந்தீர்த்திடும்வான்மியூரீசனே. (௬)

இணங்குநூலயன்மாலுமறிகிலாக்
குணங்கடான்பரவிக்குறைந்துக்கவர்
சுணங்குபூண்முலைத்தூமொழியாரவர்
வணங்கநின்றிடும்வான்மியூரீசனே, (௭)

ஆதியும்மரனுமயன்மாலுமாய்ப்
பாதிபெண்ணுருவாயபரமனென்
றோதியுள்குழைந்தேத்தவல்லாரவர்
வாதைதீர்த்திடும்வான்மியூரீசனே. (௮)

ஓட்டைமாடத்திலொன்பதுவாசலுங்
காட்டில்வேவதன்முன்னங்கழலடி
நாட்டிநாண்மலர்தூவிவலஞ்செயில்
வாட்டந்தீர்த்திடும்வான்மியூரீசனே. (௯)

பாரமாகமலையெடுத்தானைச்
சீரமாகத்திருவிரலூன்றினா
னார்வமாகவழைத்தவனேத்தலும்
வாரமாயினன்வான்மியூரீசனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# சூசிபத்திரம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவான்மியூர்ப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### திருமுடிவிநாயகர்.

ஒருமுடிவின்னமுமறியாதுயர்மறைகள்புகழனந்தமோதிநிற்க
விருமுடிவின்மௌலியனுமெழிற்சரோருகத்தேவுமேத்திவாழ்த்த
வருமுடிவில்லுவமணியுமிறைமகனுப்பிரணவத்திஞகமான
திருமுடிவிநாயகனுரிருபோதுமுப்போதுஞ்சிந்தித்துய்வாம். (க)

### நடேசர்.

சஞ்சிதமாதியசஞ்சலத்துழலுமானவரின்சழக்கறுக்கு
மஞ்சிதமாஞ்சிவகாமியம்மைநிதமருங்கிருந்துமனங்களிப்பச்
சிஞ்சிதமேவியசிற்றம்பலத்துப்பேரானந்தத்திருநடஞ்செய்
குஞ்சிதபாதத்தழகைக்கண்குளிரத்தரிசித்துக்கொள்ளுவாமால்.

### மருந்தீசர்.

முருந்தீசவிநயவிளர்நகையுமையாமெய்ப்பொருட்குமுதல்விகூந்த
லிருந்தீசந்ததமிசைக்குநயமனைத்துஞ்செவியாரவின்பங்கொண்டு
பெருந்தீசவிதாமதிமுக்கணனுகியாவரையும்பெட்பினுளு
மருந்தீசன்மலரடியைமுடிபுனைந்துகொடியவினைமாசுதீர்வாம். (ங)

### சொக்கநாயகியம்மை.

மிக்கவாகமமறையின்பொருளுணருமடியர்மனமேவியென்றுந்
தக்கவாறுடனிருந்துமலமொழியுங்காறுமருட்சத்தியான
நக்கனுர்புடைமருவியைந்தொழிற்குங்காரணமாய்நண்ணிவாழுஞ்
சொக்கநாயகியம்மைசெஞ்சரணநெஞ்சாரத்துதித்துவாழ்வாம். (ச)

பால்வண்ணர்.

மால்வண்ணமாலயனுதியவமரர்முனிவரர்கண்மயங்கிவேத
நூல்வண்ணமேயுணராதாகமத்தின்வழியேத்துநோன்மைக்காகச்
சேல்வண்ணவிழியுமையாளோடமர்ந்துநாளுஞ்சீர்த்திமல்கும்
பால்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனியனைப்பரவுவாமால். (ரு)

திரிபுரசுந்தரி.

அரிபுரமோடயனரியாதியர்புரமுமதிக்கேமென் றரியவெண்மைக்
கிரிபுரமேதருகவெனவொருகணத்துமுன்னயந்துகிளக்கஞானப்
பரிபுரவொண்சீறடியைப்பன்னுமவர்க்களித்தருளும்பண்புவாய்ந்த
திரிபுரசுந்தரிதாளைத்தரித்தாளவெஞ்சிரஞ்சிறக்குமாமால். (சா)

தட்சிணாமூர்த்தி.

பொருந்தியநால்வருக்கன்றுகயிலைதனிலுரைத்தவகைபோதாவென்றே
யருந்தகையவத்துவிதப்பதிபசுபாசத்துண்மையருமையாகத்
திருந்தியநற்பெருந்துறையின் மணிவாசகர்க்குமுனந்தெரித்துவேதக்
குருந்தடியிலெழுந்தருளுங்குருவடியைமுடிதிருந்தக்கொண்டுவாழ்வாம்.

விநாயகர்.

வேறு.

தேம்படிந்துளருந்திங்கட்சேகரற்சேர்ந்துவிண்ணிற்
றும்படிந்தென்றும்விண்மீன்றங்கிவாழ்தகைமைமானுங்
கூம்படிக்கோட்டைச்சூழ்ந்தபொறிமுகங்கொளுமுன்னோனை
நாம்படிந்துய்வாமென்றுநலமெலாநண்ணப்பெற்றே. (அ)

அறுமுகக்கடவுள்.

வேறு.

மகமாறுடையவிமயவர்கண்மகிழுமுலகையழற்கிந்த
வகமாறுடையவசுரர்களையணிவேலதனுக்கிரையாக்கிச்
சுகமாறுடையகுஞ்சரியின்றுணைத்தோடமுவிமணந்திட்ட
முகமாறுடையபெருமான்றன்முளரித்தாளைமுன்னுதுமே. (கூ)

வயிரவர்.

வேறு.

ஏமநிறத்திசைமுகவனைந்தலையிலொன்றுபறித்தினிதங்கேந்தி
வீமமுறவொருகோடிவிண்டுவின்செந்நீரேற்றுவிபுதர்வேண்ட
வாமனன்வெண்கங்காளம்வாங்கியவற்செருக்கொழித்துவாகைபூண்ட
தாமரணிவயிரவனங்கடவுளிருபாதமலர்கருத்துட்கொள்வாம். (௧௦)

நந்திதேவர்.

முந்தியவல்வினைநழுவவிமையவர்வெண்கயிலைதிருமுன்னஞ்சார்ந்து
வந்திசெயமிடைதலினாலவரவர்தமுறைமையினைவகையிற்சூழ்ந்து
பந்தியுறக்கொளுவித்துப்பயனிரப்பவேத்திரத்திண்படைமைத்தாங்கு
நந்திதிருத்தாண்மலர்கணஞ்சிரத்துக்கணிகலனாடுவாமால். (கக)

தமிழாசிரியர்.

வேறு.

சகத்தினைவளைதருகடலுமூந்தளவுறச்சமைத்துமாந்தியே
யிகத்தினிலானருளின்பொருங்கமயவரென்றுமேத்துவான்
மகத்துவமுளவொருதமிழ்ப்பயிர்நிலைத்தலைவளர்த்ததென்மலை
யகத்தியமுனிவராடியிணைமுடிவயினமைத்திட்டாமரோ. (கஉ)

ஆளுடையபிள்ளையார்.

வேறு.

அரசமயத்தவர்நோன்சமண்பூடொழித்தன்றுகண்ணன்
றர்சமயத்தெனத்தன்னுருத்தந்துதமிழையொன்றி
முரசமயத்தரளச்சிவிகைப்பொலிமுதியஞானப்
பரசமயக்கோளரிப்பிள்ளையார்பதம்பற்றுதுமே. (கங)

ஆளுடையவரசு.

வேறு.

அழலாறுநீற்றறையிற்றென்றலுறச்செய்ததன்மீதமர்ந்துநின்றுஞ்
சுழலாருங்கருங்கடல்வாய்க்கன்மிதப்பக்கடந்துவளத்துறையிற்சேர்ந்துந்
தொழவாருமாலமதையமுதமெனவுட்கொண்டுந்துளங்கிவாய்ந்த
வுழவாரப்படையேந்தும்வாகீசப்பெருந்தகையையுள்ளங்கொள்வாம்.

ஆளுடையநம்பி.

கந்தரத்திற்கடுவடக்கிக்கடவுளாக்காத்தாண்டகருணைத்தேவை
மந்தரத்தினிகர்மாடநிரைவீதியாரூரின்மங்குற்போதி
லந்தரநேரிடைப்பரவைபாலனுப்பியூடறணிந்தமர்ந்தவெங்கள்
சுந்தரமூர்த்தியின்மணநற்கோலமதைமனமாரத்தொகுத்துட்கொள்வாம்.

ஆளுடையவடிமை.

ஆணிப்பொனம்பலத்திலானந்தத்தாண்டவஞ்செயானார்நீள்செய்
வேணியிற்சென்னியின்மண்ணைப்பிட்டுக்காச்சுமப்பித்துமீனவன்றன்
பாணிப்பிரம்புகொடுவடிப்பித்தும்பானருளைப்பாவவித்த
மாணிக்கவாசகனாரடியவருக்கடிமைகளைமகிழ்ந்துவாழ்வாம். (கசு)

சண்டேசுரர்.

வேறு.

தந்தையேயாதியதமர்களாயினுஞ்சங்கரன்றன்னை
நிந்தையேசெய்திடிற்றடிந்தவர்தம்மினநீங்குகபாவப்
பந்தமேயில்லைபுண்ணியமாகுமிப்பாரினிலென்னுச்
சிந்தையேதந்தசண்டேசர்வண்பூங்கழற்சோறுவாமரோ. (கஎ)

அறுபத்துழவர்.

வேறு.

மின்போலொளிருஞ்சடைப்பெருமான்விழியின்மணியுந்திருநீறு
மன்பாற்போற்றியனவரதமஞ்சக்கரத்தைக்கொண்டாடிப்
பொன்பாற்பெண்பாற்புவியின்பாற்போந்தபாசப்புணையொழித்த
வொன்பானேழுமுனிவரையுமுறைப்பாம்வினையைக்களைப்பாமே.

ஒன்பதின்மர்.

என்பதிபாம்பணிபூண்டுசிவைகளிக்கமன்றின்டமியற்றும்பெம்மான்
றன்பதியாதியபணிந்துமனங்கசியவுடல்குழையத்தனித்தமோன
வன்பதிகமாநிலவவருண்மயமாந்திருவிசைப்பாவருளுந்தெய்வ
வொன்பதின்மரொண்கமலச்செஞ்சரணநெஞ்சரணத்தொளிருமாமால்.

சந்தானகுரவர்.

இந்தானனவம்மைபாகர்வேதாகமத்தினியைந்தஞான
முந்தானசுத்தாத்துவிதவுண்மைதமிழ்மொழியிலுலகமோங்கத்
தந்தானசிவபோகத்தேதிளைக்கும்பெருஞ்செல்வஞ்சார்ந்தவெங்கள்
சந்தானகுரவர்திருத்தாள்கடமைநங்கடமைதலைக்குக்கொள்வாம்.

சேக்கிழார்.

வேறு.

இருண்மலமொழிவித்தெம்பெருமானேடிரண்டறக்கலப்புவித்தொளிருஞ்
தெருண்மிகுஞானத்தொண்டர்தஞ்சரிதைசெவ்வியவொளிதிகழ்கனகப்
பொருண்மலிமன்றத்திறைதருமொழியாற்புகல்வித்தபுண்ணியநாம
வருண்மொழித்தேவரழகியகமலவமலவொண்ணடியடைக்கலமே.

திராவிடமகாபாடியமுனிவரர்.

வேறு.

பித்தாந்தப்புறச்சமயப்பிணக்கறுத்துப்பேருவகைபிறங்கிமல்க
முத்தாந்தமீதெனவேமெய்கண்டார்சாத்திரத்துமுடித்துக்காட்டி
நித்தாந்தமியாவருக்குமூட்டுவிப்பான்றுறைசைவயினிலைத்தவெங்கள்
சித்தாந்தபானுவெனுஞ்சிவஞானமுனிவரர்தாள்சிந்தைசெய்வாம்.

போதகாசிரியர்.

சகவாதவற்போலவியலிசைநாடகக்கலையிற்றன்னேரின்றி
யிகவாதபரஞானச்சோபானவகையனைத்துமெற்கிங்கூட்டி
யகனுதனப்போதகாசிரியனாகியெனுளமர்ந்தபேறைச்
செகநாதநாவலனற்பெருமான்றனிணையடிகள்சிந்தைசெய்வாம்.

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

---

# அவையடக்கம்.

தன்னிகரிற்றிருவான்மித்தலமான்மியத்தகைமைசதிரினாய்ந்து
மன்னுபுகழுயர்தமிழிற்புராணமுறைகூறுகெனமகிமையுற்ற
மின்னொளிருஞ்சடைப்பெருமானடியவர்களன்புடனேவிளம்புமாற்றாற்
றுன்னுமனத்தெழுவிருப்பமுளைந்திடவுமீதுரைக்கத்துணிந்திட்டேனால்.

நிதிக்கிழவனளகையினில்வைசியர்செய்வாணிபத்தைநிகரவந்தப்
பதிக்குலவுமொருமிடியன்விறகுவிற்றுப்பயனடையும்பான்மைபோலுந்
துதிக்கவருதொண்டைமண்டலாதிப்புலவர்முனந்துணிந்துநின்று
மதிக்கிலாச்சிறியேனும்புராணமெனவொன்றியற்றிமகிழ்ந்ததாமால்.

தேவர்முதலுயர்திணையோர்புரிந்திட்டதிருத்தொண்டின்செய்கைமான
வாவலுடனஃறிணையும்விதியறியாதேயியற்றவாண்டபெம்மா
னாவலர்கள்கற்பனையோடலங்காரநயமேவநவினூல்போன்று
கூவலின்மண்டூகத்துக்கத்துமெளியேன்றமிழுங்கொள்கிற்பாரால்.

அவையடக்க முற்றிற்று.

---

# சிறப்புப்பாயிரம்.

பட்டாங்கிலுளபுலவர்வியந்துதமிழ்நயமனைத்தும்பண்பிற்றேறச்
சுட்டாயவான்மியூர்ப்புராணமதுநவரசமுஞ்சுரக்கவுண்மைத்
தெட்டார்ந்தஞானநற்கலைபலவுநனிதேர்ந்துதிகழும்பூவை
யட்டாவதானகலியாணசுந்தரக்கவிஞனறைந்திட்டானால்.

ஆகச்செய்யுள் - உ௭.

---

# திருநாட்டுப்படலம்.



கங்கை தங்கிய சடைமருந் தீசக் கண்ணுதல்
மங்கை சொக்க நாயகி யாருடன் மருவித்
தங்கும் வான்மியூர்த் தலத்தினைத் தழீஇத் தவத்தின்
பொங்கு தொண்டை மண்டலத் தணிநலம் புகல்வாம். (க)

துண்ட மாமதிக் குழவியை மிலைச்சிய துன்னிருட்
கண்ட னீறணி மேனியி னழகினைக் கடுப்ப
விண்டனிற் பற்பல படலையை மானவே விளக்கிக்
கொண்டல்கள் ளெழுமிர்ந்தன விரைவினிற் கீட்டிசை குணித்தே.

வெண்டிரை யலைத்து மணித்திரள் கொழிக்கும் வியன்பல
கொண்டிடுந் தரங்க வார்கலி முகட்டினைக் குறித்தே
தொண்டலம் வைத்துக் கரிபல வுரினுறு தோற்றத்
துண்டன நீரினை யெழிலிகள் வயின்வயி னூர்ந்தே. (ங)

துங்க நாயகி கருநிற மேனிபோற் றோன்றித்
தங்கு நந்தியம் பொருப்புழை விருப்பொடு சார்ந்தே
யங்கண் சூல்கொடு பொம்மென வெழும்பியே யார்த்து
மங்குல் விண்ணிடை யெங்கணுங் கெழுமின மதர்த்தே. (ச)

அறிவினை யாணவ மலமது மறைக்குறு மாங்குச்
செறிதரு வான்சுட ராதிய தேசினைக் கவித்து
வெறிகொளும் வல்வினைத் தொடர்பினுந் தொல்லருள் விளங்கி
மறிபடு மாறென மின்னின வாங்கங்கு மங்குல். (ரு)

அசுத்த மாயையி னெவியெனு மடவிடி யுறுக்க
நசித்துப் போம்வகை தீதுசெய் நகர்வன வொழித்து
விசித்திடு வில்லினிற் பூட்டிடு மம்பென விரைந்து
வசித்திடு முலகினின் மழையினைப் பெய்தன மாரி. (சா)

ஐந்திணை நானில மடங்கலு மளியுறப் புயலாற்
றந்திடு நீர்வளம் பற்பல தகைமைய வாயின
பந்தம துற்றிடு முயிர்களின் பக்குவம் போன்று
வந்திடு மோர்மல மாயையின் வகைகளை மானும். (எ)

இன்னவா றகில மாண்புற விருமழை பெய்து
மன்னிய மேக முன்னிற வெண்மையை வாய்ந்த
துன்னிருட் சத்தி மலமயத் தொடருருச்சுமந்தும்
பின்னருந் தன்வடி வாயுறு பெருமையே போலும். (அ)

குளிர்பெயல் மாரி தீர்ந்திடக் குவடுக டோறு
மொளியுறு மருவித் தாரை யொண்மையி னடருவ
வளிபெறு புவிமா தேவி யணிமுலை யதன்மேல்
வெளிறிய நாலி மாலை விளங்குவ நேரும். (கூ)

விரையுறு சந்தன நல்லகில் வெண்ணிற மருப்புப்
புரையறு நித்திலமாதன மாதிய பொதிந்து
வரைபெறு வளனெலாங் கவர்ந்து வழங்கிய வொலியின்
றரையினை நாடிவந் திழிந்தன தனித்தவெண் ணீத்தம். (கo)

வேறு.

அருவிக ளென்ன வந்த வவையெலா மொன்றுக் கூடி
மருவிய பாலி யாறு மண்மிசை யோடா நிற்கும்
பெருகிய சமயத் தோர்கள் பேணுறும் வழிபா டெல்லா
மொருவருஞ் சைவஞ் சொற்ற வொருவனை யடைதல் போன்றே.

நீற்றொளி வெண்மை காண நிலவிடு மணிக ளால
வேற்றிடு மடிய ரார்ப்ப வெழிலுறுஞ் சடைமே லாடச்
சாற்றிய தலத்தி னுடிச் சாருநந் தியின்மேற் றங்கிப்
போற்றிட வரலாற் பெம்மான் போன்றிடும் பாலி யாறே. (கஉ)

உயரகில் களபஞ் சந்த மொண்மணம் வீசுமாலை
வியனுறு தயிர்நெய் பாறேன் மேலுற வாயை மூடி
யியனுரைக் கலையைப் போர்த்தங் கெழிலுடன் வருநற்றூற்றும்
பெயர்சிவ பூசை யாற்றப் பெயரடி யார்போன்ம் பாலி. (கங)

மலைதர வந்து தோன்றி மகிழினைச் செய்து நாளு
மலைகட லுலகின் மாக்கட் கழகிய சுத்தி செய்து
தலைமை கொடெய்வப் பெம்மான் றன்னிட முறையப்பெற்றே
யுலைவரு வடிவேற் கண்ணு ளுமையினை மானும் பாலி. (கச)

தேனினை யுண்டு தேக்கித் திகழணி யாரம் பூண்டு
கானிணர் வேங்கைத் தூசு கவினுற நன்கு சுற்றிக்
கூனிய சிலையா யானைக் கோட்டினைக் கொண்டங் கேந்திக்
கோனிவ னென்ன யாருங் குலவவந் ததுவண் பாலி. (கரு)

வேறு.

இந்த வகையி னெங்கணு மோடி
முந்தக் குறிச்சியின் முழங்குபு சென்று
சந்த விதனைச் சவாரை வாட்டிக்
கந்த வெட்சியைக் கவினுறச் சூடி. (கசு)

முல்லையைக் கண்டு முளிதயி ருண்டு
நல்லவர் கற்பை நைய்ய வழித்தங்
கெல்லையி லானிரை யீர்த்துடன் கொண்டு
மெல்லவர் வஞ்சியை மிலைந்து நடந்து. (கஎ)

வயலுள மருதம் வந்தவண் மள்ளர்
செயலுறு கரைகள் சிதைந்திட நொச்சி
வயனுற மோதி வளர்நெலை வாரி
யியமுறக் குதும்பை யினிதி னணிந்தே. (கஅ)

நெய்தலை நண்ணி நீடிய சேப்பர்
செய்திடு மளனைச் செவ்வை மழித்தே
பெய்திடு முடையின் பீழையைப் போக்கி
யெய்திடக் கடலு மெதிருற வந்தே. (ககூ)

அலையுமென் கரத்தா லாசிறை யேந்தி
நிலையுறு பயத்தா னிறைந்து நிற்கத்
தலைமைகொள் பாலி தானு முவந்து
கலந்துற வாடிக் களித்ததை யன்றே. (உ0)

திருப்பயி றெண்டை தெய்வநன் னாட்டுப்
பருப்பத மாதி பாற்பெருஞ் செல்வத்
திருப்பினு மதிக மீந்து புரந்து
விருப்புடன் செங்கோல் விழைந்தது பாலி. (உக)

வேறு.

ஆலிகொள் மழையதின்றி யருப்பம்வந் துற்ற ஞான்றும்
பாலியின் பெருக்கா லெங்கும் பயன்பல வோங்கிநாளுங்
கோலிய வறங்க ளெல்லாங் குறைவற நிலைத்து நிற்கு
மேலியல் புற்றதிந்த மேதகு தொண்டைநாடு. (உஉ)

வன்புறு மனத்தராகி வாழ்வுறுஞ் சமயத் தோரு
மின்புடன் சைவஞ் சொற்ற விறைவனே தெய்வமென்று
வன்புகொண் டேத்தயாரு மாளுடைப் பிள்ளையாரா
லென்புபெண் ணாகி வந்த திருந்தமிழ்த் தொண்டைநாடு. (உ௩)

நறவது கொப்ப ளிக்குநறுந்துழாய் மாலை யானும்
விறல்கெழுபிரமன் றானும் வீற்றிருந் தேத்தி யுய்யு
முறவுறுங் கயிலைப் பெம்மா னுடனுறை யமலை வந்திங்
கறமெலாம் வளர்க்கப் பெற்ற தழகிய தொண்டைநாடு. (உ௪)

முருக்கிதழ் நிறத்துச் சீரின் முதவடிக் கௌரி யோடு
மிருக்கினி லிருக்கு மெம்மா னீந்தவேதார் வேதத் துற்ற
பெருக்கமே யொருங்கு பூத்துப் பிறங்குநன் னீதிநூலிற்
றிருக்குற டந்த வெந்தை செனித்தது தொண்டைநாடு. (உ௫)

மறலியு முதுகு காட்ட மலரவன் படைப்பு நீங்கத்
துறவிகட் கெல்லா ஞானத்துல்லிய ராகிநின்று
பெறலருந் தேவதேவன் பேற்றினை யடைந்து வாழ்ந்த
மிறல்கெழுந் திருவெண் காடர் வீடது தொண்டைநாடு. (உ௬)

மருவிய வுலக மூன்று மண்ணுவான் சைவப் பேறே
பெருகுறச் செய்து செல்வப் பெருந்தமிழ் வேதஞ் சொற்ற
திருவளர் தொண்டர் சீர்த்தி தெரிக்கவந் தவத ரித்த
வருண்மொழித் தேவ ரன்பி னமர்ந்தது தொண்டைநாடு. (உ௭)

சிவப்பெருந் தேவன் வாழுஞ் சிவாலயச் சிறப்புந் தக்கோர்
பவப்பிணி போக்கச் செய்யும் பண்புறு பூசைப் பொற்பு
முவப்புற நாளுங் காணுமுயரிய விழாவி னோர்ப்பு
நிவப்புட னென்று மோங்கி நிலைத்தது தொண்டைநாடு. (உ௮)

ஊரெலாஞ் சிவால யங்க ளூரையெலா நால்வர் பாட்டு
நீரெலாந் தெய்வத் தீர்த்த நிலையெலா ஞான யோகம்
பேரெலாஞ் சிவநா மங்கள் பேறெலா முத்தி வேட்கை
யேரெலாங் கொண்ட திந்த வெழிலுலாந் தொண்டைநாடு. (உ௯)

அடுப்பது சைவர் கூட்ட மமைப்பது தெய்வக் கோட்டங்
கொடுப்பது கோடி கோடி குவிப்பது சொன்ன ராசி
யெடுப்பது சைவநூலே யேத்துவ தரனார் சீரே
தொடுப்பதுதமிழின்பாட்டேதொன்மையாந்தொண்டைநாட்டில்.

கற்பவர் சுத்தசைவங் கவினுறு முண்மை நூலே
நிற்பவர் மனுவாற் சொற்ற நியதியைக் கடைப்பிடித்தே
யற்பமென் றுரைப்ப தெல்லா மாயிழை யார்நு சுப்பே
பொற்பெலாம் வாய்ந்தவிந்தப் புண்ணியத் தொண்டைநாட்டில்.

எந்தநாட் டினுங்கா ணாத வெழிலுடைப் பொருள்க ளெல்லாஞ்
சந்தநம் வாய்க்கப் பெற்றுத் தன்னிகரின்றி யோங்கு
மந்தரத் தேவர் தாமு மாசைமேந் தொண்டை நாட்டி
னைந்திணை வளங்கள் சற்றே யறிந்தவா றுரைக்க லுற்றாம். (௩உ)

குறிஞ்சி.

வேறு.

விரும்பிய பொருளினை நாடியே வேட்கை யுற்றவர்
பெரும்பொருள் வேறதாப் பெற்றிடினுங்கொளா ரவர்போற்
றிருந்திய சந்தனங் காரகிற் சிதை வுறச்செய்து
பொருந்திய புன்பயி ரிறடியைப் போற்றுவர் வேடர். (௩௩)

படர்தரும் பைந்தினை வித்திடப் பாரினைத் திருத்துபு
சுடரிய வொளிவிடு மணிபல தோன்றினு மவைதமை
யடர்தரு கல்லுடன் வாரியே யகற்றுவர் குறவ
ரிடர்செயு முலகினை மதித்திடா விருந்தவர் செயல்போல். (௩௪)

பொருந்திய தினைக்கதிர் கொண்டிடும் புட்குலம் வெருவ
முருந்துறழ் மூரலா ரோட்டுபு மொழியினைக் கேட்டலு
மிருந்து கற்றிடக் கிள்ளைக ளெங்கணுங் கூடித்
திருந்த வுள்ளன குறிஞ்சியந் திணைப்புல மெங்கும். (௩௫)

மதிநுத லாடவ ரொயிலினை மகிழ்வுடன் காண்டலும்
வதிதரு மயிலின மேங்கியே வாட்டமுற் றசைதர
வெதிருற நின்றிடு மவைதமை யிவர்தாக் கடிந்திடார்
கதிதரு மங்கலக் கடவுளின் கரியென வெண்ணியே. (௩௬)

மலைவுறு சலசல வெனநீர் வருமொலி யதுகேட்
டலைதாக் கரியின மிரிதரு மணங்குற வவ்வயின்
மலைகளின் முழைகளிற் றவமுறு மாதவர் தமைவிட்
டுலைதரு மாணவ விருளின மோடுவ போலும். (௩௭)

விண்முகங் குடைபட வோங்கிய வேய்வளர் மலையின்
தண்ணறுந் தானுவிற் றிரிதருந் தந்தியூ தத்தைத்
திண்ணிய மழைமுகிற் கணமெனச் சிறைமயி லகவுவ
நண்ணிடும் வெயில்செறி வேனிலா ளினு மிகவே. (௩௮)

மான்விழிக் கொடிச்சியர் பணவைமேல் வயின்வயி னிருந்து
வான்விடு தழலினுற் குலைந்திடு வண்ணிறு வினத்தின்
றேன்வழி யாசினி யாதிய சிதறிட வசும்பினுற்
கான்வளர் யானையும் வழுக்கியே வீழ்வன கடிதே. (௩௯)

நுண்ணிடைக் குறிச்சியர் முலைகளுக் கெதிரென நுவலுந்
திண்ணிய கரிகளின் கோடவை தேய்வுற வேலியாப்
பண்ணிடுங் குறவர்க ளெங்கணு மேனலை விளைவித்
துண்ணுவர் நுவணை நுண் ணிழுதுட னுவப்பினிற் கூட்டி. (௪0)

அருவிகள் பன்றிசை விழநிமி ரடுக்கல் வேயின
மருவிய முத்தமு மதமா மருப்புறு மாரமு
மிருமெழின் மூரலை நிகர்ப்பன வெனமுனிந் தெங்கணும்
வெருவுறக் கொடிச்சியர் கவண் கொடு வீசுவர் வன்பால். (௪௧)

ஒள்ளிய சுடர்வடி வேலுடை யுயர்குகப் பெருமான்
வள்ளியெம் மன்னையை மணந்திட மகிழ்வுட னன்று
தெள்ளிய பலவிளை யாட்டினைச் செய்திடப் பெற்ற
வெள்ளருங் குறிஞ்சியின் பெருமையை யெவரிசைப் பவரே. (௪௨)

மூலம்.

வேறு.

மழவிடை யேற்றலான் மானினைத் தாங்கலா
னிழறரு மாத்தியு மிதழியு நீடலாற்
றொழவரு மாலுடன் றொடர்பு கொள்ளலா
லழகிய வன்புல மரனை மானுமே. (சங)

மல்லிகை வெட்சியோ டாதிய மலர்நிறை
வல்லிகண் மயங்கியே வனந்தனிற் படருவ
புல்லிய பன்னிற மயிரினாற் புரிந்திடு
மெல்லிய கம்பளம் விரித்தன போலுமே. (சச)

கயலினைப் பழித்திடுங் கண்ணுறு மிடைச்சிய
ரியலினுக் குடைந்தவ ணேய்ந்துறு முழையினங்
தயிர்கடை யோதையிற் றளம்பிப் பாடியிற்
றுயிலுறு தலைகுவ துறந்தவர் செயல்போல். (சரு)

குழைதரு கட்சியிற் குலவிய கோரகை
மழைவளர் நாளினில் வாய்மொதிந் துறையுமா
விழையிடைக் குடத்திய செழின்மண மகருடன்
விழைவுடன் கொஞ்சிடு மிழற்றலை விரும்பியே. (சசா)

ஆனின மேய்ந்திடு மமலையுந் துவரையாந்
தானியம் வித்திடு மாவமும் பெருகினைப்
பானிய மதித்திடு மோதையும் பான்மொழி
மானினி யார்செயுங் குரவையின் மடங்கும். (சஎ)

அவயவ முழுதினு மண்டர்கள் வாழ்ந்திடு
நவமிகும் பசுநிரை நாடொறுங் காத்திடுந்
தவமிக வாய்ந்ததாற் றரணியின் வாழ்பவ
ரவரையு மண்டரென் றழைத்திட் டாரரோ. (சஅ)

வேயலி னூற்செயு மென்குழ லேந்திடு
மாயர்சா தாரியி னுனிரை யாதிய
வாயசை யின்றியே மயங்குவ களியான்
மீயகத் தேயுறை மேலவர் போலுமே. (சகூ)

வெட்டிய மடுப்புனல் விரும்பிமாந் தாமலுங்
கட்டிய வேலியைக் கடக்கவெண் ணுமலு
நட்டிடு கூழினை நாடிமே யாமலு
மிட்டமொ டுலாவுவ வெங்கணு முயல்கள். (ருo)

தக்கவர்க் கணுப்பலன் றந்திடி லதனையே
மிக்கவா கொண்டுடன் மீநலஞ் செய்வர்போ
லக்குலக் கோவர்க ளளித்திடும் புல்லினை
விக்கவுண் டாத்தரும் வேண்டிய வமிழ்தமே. (ருக)

உலகினை வயினதி லொடுக்கு நாரண
னலமிகும் பாடியை நாடிவந் துதித்தே
யுலவிய முல்லையி னுயாணி முற்றும்
பலபல வாகப் பகருவ ரெவரே. (ருஉ)

மருதம்.

வேறு.

அரனடிக் கன்பு பூண்ட வடியவ ரருள்போ லோங்கு
மரநிரை சோலைச் சூழல் வயின் வயின்மல்கி நீடத்
தரமிகு ஞானமோனர் தம்மனத் தெளிவு போன்று
நிரன்மிகு வாவியேரி நிறைந்தன மருத வைப்பில். (ருங.)

அடியவர்க் கன்பி னீந்த வரும்பொருள் வளர்ந்து நாளும்
படிமிசை யனந்த மாகப் பலித்திடுந் தன்மை போன்று
முடியவும் பாலி நீத்த மொய்த்தபல் கால்க ளாகிக்
குடிவள மோங்க வென்றுங் குலாயது மருத வைப்பில். (ருச)

அங்கணுயிரமாம் வேந்த னவன்புக ழோது மோதை
துங்கமோ டொளிரும் பாலி துழைந்துபாய் கின்றவோதை
சங்கினங் குமுறு மோதை தண்ணுமை முழங்குமோதை
யெங்கணு மாகி வானத் தேகுவ மருத வைப்பில். (ருரு)

வயலெலாஞ் செந்நெ லோங்கும் வரம்பெலா முத்தமோங்கு
மயலெலா மரைகளோங்கு மவைகளி லன்ன மோங்குங்
கயலெலா மடையி லோங்குங் கருங்கவ ரிகளே யோங்கு
மியலெலாங் கொண்டதிந்த வெழிலுறு மருத வைப்பில். (ருசு)

சோலையில் மயில்களாடுந் துறைகளி லிப்பியோடு
மாலையிற் கரும்புகூடு மறலிடை மணிகணீடு
மாலையில் வண்டுபாடும் வதியிடை வாளைநாடும்
வேலையின் மூழ்கி யென்றும் வியனுறு மருதவைப்பில். (ருஎ)

காவினன் மலர்கடோறுங் கசிந்துசிந் தியநற் றேனு
மாவினின் வழிந்ததேனும் வருக்கையி லிழிந்ததேனு
மேவிய கதலித்தேனும் விரவியோ ராறு யோடி
வாவிய பாலி யொத்து வழங்குவ மருதவைப்பில். (ருஅ)

திறந்தரு கொண்டை நாட்டிற் செறிந்திடு மள்ளரியாரும்
புறந்தரா தடக்கி யைந்து புலன்களைக் காத்துவாழு
மறந்தரா மறைநூல் வல்லோர் மன்னவர் வணிகரோங்க
வறந்தரு வினையின் மூள்வ ரனுதின மருதவைப்பில். (ருக)

வேறு.

கந்தரத் திணைகுழல் காவியை யிணைவிழி
யந்தரத் திகலிடை யந்தளிர் நிகருடல்
சுந்தரி துணைமுலை தோயப் புல்விடு
மிந்திர னைத்தொழு தேத்தின ருழவர்கள். (சுo)

பொருந்திடு புனலினைப் புகழுடை மள்ளர்கள்
வருந்திடப் பலபல வரம்பினைக் கோட்டியே
திருந்திய கால்வழி செறிந்திடச் செய்தலா
விருந்தது பணைதொறு மீரமதாகவே. (சுக)

கலப்பையிற் பூட்டுவர் காளைகடம்மையே
யுலப்பற வவல்களை யுழுதிட முயங்குவர்
கலப்பறு விரையினைக் கரங்கொடு வித்துவார்
தலைப்பட வங்குரஞ் சார்ந்து களிப்பரால். (சுஉ)

யாத்திய நீரினை யாண்டு மள்ளர்கள்
கோத்திடு கால்களிற் குறித்துக் கவிழ்த்திடச்
சேத்துறு நென்முளை செவ்விதி னுடியே
காத்திடு மகவெனக் காக்க வுற்றனர். (சுங)

பானிறத் தொளிரிய பரந்த நென்முளை
நீனிற மரகத நீள்கொழுந் தாமென
வானினை நோக்கியே வளர்ந்த மென்பயிர்
கூனிய சங்கினங் குலவிய பணைகளில். (சுச)

வாரினர் நாற்றினை வயறொறு நட்டனர்
சீரிய விளைதருஞ் செம்மை நோக்கியே
யாருயி ரனைத்துமுற் றறிந் தவ்வவற்றினைப்
பாரினி னாட்டுறும் பரமற் போலுமே. (சுரு)

உத்தமச் சைவர்க ளுளுற்றிய செயலெல்லா
நித்தமு மோங்கியே நிலைக்கும் பான்மைபோல்
பைத்தபூம் பண்ணையிற் பயிரெலாம் வளர்ந்தன
வுய்த்தநற் பாலியி னெண் புனலூட்டவே. (சுசு)

அருளுடை மாந்தரு மாதியா கூழினன்
மருளது வாய்ந்திட மயங்குவ ரதுபோல்
மருவுபைங் கூழினிள் மலர்முதற் களைபல
வருகின விடையிடை யடர்ந்து மிக்கவே. (சுஎ)

பக்குவ நோக்கியே பாச மொழித்திடுந்
தக்கதி ரோதைபோற் சார்ந்த களைகளை
யொக்கவே யொழித்திட வுழத்தி மாரெலா
மிக்கவந் தெய்தினர் மென்பணை முற்றுமே. (சுஅ)

களைகளைப் பிடுங்குபு கரைக்கண் வீசலும்
வளைகள்வந் துழத்தியர் மலரடி முட்டிட
விளமுலை குலுங்கவே யிம்மென வேவெரீஇக்
களமர்க டேத்திடக் களித்து மகிழ்வரால். (சுகூ)

தங்கடஞ் சாயைக்கண் டண்வயற் றேன்றுங்காற்
செங்கய லென்றதைச் சிந்தையி னுடியே
பங்கயக் கரங்களாற் பற்றப் பதைத்தன
ரங்கதைக் காண்கிலா தயர்ந்து வெள்குவார். (எ௦)

ஆம்ப லெனத்திரி யாயிழை மார்முலை
தேம்படு மரையெனச் சேர்ந்து மூசுறக்
காம்பினைக் கண்டதோர் கருநிற வண்டெனப்
பூம்பணைச் சுரும்பினம் பொலிந்து மயங்குமால். (எக)

அன்னமென் னன்னடை யாற்றுக்கா லாட்டியர்
மன்னிய பற்பல மலர்களி னைப்பருஉப்
பின்னமுற் றுலர்தரப் பெயர்த்து வீசின
ரன்னவை தம்முறுப் பழகினைக் கவர்தலால். (எஉ)

கழனிவாய்த் தோன்றிய களைகளை நீக்கியே
யுழவர்கண் மாதரா ரொதுங்குபவ் வவரது
குழலுடன் சென்றன குவவுச் சுரும்பின
நிழன்மலர்ச் சேக்கைக ணீங்கப் பெற்றதால். (எங)

அடர்கொடும் பற்றெலா மகலப் பின்னரு
டிடமுட ஞேங்கிடத் திகழ்தரு நலம்போற்
படரிய களைபல பாற்றலும் பைங்கூழ்
மடலுடன் வளர்ந்தன வான்முக நோக்கியே. (எச)

வேறு.

கல்வியிற் சாலத் தேறுக் கவிஞரிற் றலைநி மிர்ந்து
வல்லநற் புலவர் மான வரவரச் சிரம்வ ணங்கி
நல்லவர் பழக்கந் தன்னு னுடொறு மனந்த மாக
வொல்லென நறுந்தண்சாலி யுயர்வன படுகர் தோறும். (எரு)

தலைதொறு நிவந்த சாலி தக்கநெற் கதிர்கண் முற்றித்
திளைதரத் தரையிற் சாய்ந்து திகழ்தரு மமயந்தத்தங்
கிளையுட னரிநரியாருங் கெழுமியே நன்னுளுய்த்து
வளைதருங் குயங்கை யேந்தி வந்தனர் வினையின் மூண்டோர். (எசு)

அரிந்தனர் நிரையாய் நின்றே யடுக்கினர் வேறு வேறு
வரிந்தனர் தலையிற்றூக்கி வைத்தன ரோட்டமாகத்
திரிந்தனர் களனை நாடிச் சேர்ந்தனர் மேரு மானப்
புரிந்தன ரரிகடம்மைப் புகழுறுங் களமரீட்டம். (எஎ)

நெற்பொலி போர்க டம்மை நீண்மலை யென்ன நோக்கிப்
பொற்புறு மேகயோகம் போந்தன வென்னு மாபோல்
பற்பல மேதிநேரப் பந்தியி னிணைத்தங் கோட்டிக்
கற்புய மள்ளர் வைக்கோல் கழித்தனர் நெல்லினின்றும். (எஅ)

பங்கமில் சுத்த சைவர் பகர்தரும் வாதிற் றோற்று
மங்குபுன் மதத்தரி யாரும் வயின்வயி னிரிவர் போன்று
பொங்குநெற் பொலியை வாரிப் பொள்ளெனக் காலிற் றூவத்
தங்கிய பதடி யெல்லாந் தலைத்தலை பரந்த வம்மா. (எகூ)

கொற்றவர்க் காறி லொன்று கூறுசெய் தீந்த பின்னர்
மற்றநெற் சகடமேற்றி மகிழ்வொடு மனைக்கட் சேர்த்து
முற்றுமஞ் சிகையிற்கூட்டி மொழிபிதுர்க் கடன்க ளாற்றிச்
சுற்றமொ டிருந்து வாழ்வர் தொல்குடிக் களமரென்றும். (அ0)

சிவனடி யாரைக் காணிற் சென்றெதிர் கொண்டு வந்து
தவிசினி லிருத்தி முன்னர்த் தக்கவா றிருந்து வேண்டு
நவமணி யாதி யீந்து நற்சுவை யடிசி லூட்டி
யிவர்தரும் வழிபா டாற்றி யின்புறுங் குடிக ளெங்கும். (அக)

செங்நெலின் வண்மை கண்டு செங்கரும் பிவையே யென்றுங்
கன்னலின் வளப்ப நோக்கிக் கண்டன கமுகே யென்றுந்
துன்னிய கோலத் தாரைத் தோன்றுவ தெங்கே யென்று
மின்னண மயரச் செய்யு மெழில்வள முற்று மெங்கும். (அஉ)

இந்திர போகந் தானு மிளைத்திட வில்லந் தோறு
மைந்தரு மாத ராரு மகிழ்வுட னெக்கற் பேணிச்
சந்திர சேக ரன்றன் றண்ணடி போற்றி மள்ளர்
சந்ததம் வாழும் வைப்புச் சாற்றலாந் தகைமைத் தேயோ. (அங)

நெய்தல்.

படிமிசை வேறு வேறுப் பரவிய சமய மெல்லா
முடிவினிற் றன்னைச் சார முயங்கிடுஞ் சைவம் போன்று
வடிவுறு நதிக ளியாவும் வயின்வயிற் றோன்றி யோடிப்
படிதர வேற்று நீடும் பயோதநி நெய்தறன்னில். (அச)

பகைவரிற் பகைவர் கூடிப் பண்புகொண் டமர்தல் போன்று
திகையினைக் கலையாக் கொண்ட திகம்பரற் கன்று நஞ்சு
மிகையுறத் தந்து நீடும் விரிகடற் கரையின் பாங்கர்த்
தகையறும் பொய்ம்மை சொற்ற தாழையும் வளர்ந்தவன்றே.

கடன்மருங் கணைந்து நல்ல காற்றினைக் கொள்வார் தம்மு
னுடனெழு மீனி னூற்ற மொழிதர நெய்த னூக
மடல்கெழு தாழை ஞாழன் மருவிய புன்னை கோங்கு
படர்தரு வாச மீயும் பன்னெடு நாளு மாங்கண். (அசு)

பெரியனைக் கேட்குமுன்னே பெரும்பொரு ளீவார்ப் போன்று
விரிதரப் பரதர் நாட வியன்றிரைக் கரங்க டம்மா
லரியதோர் சங்க முத்த மரதனம் பவள மாதி
பரிவுட னீவ தாகப் பார்ப்பரக் கடல்வா ரத்தே. (அஎ)

நிலமகிழ் நிதியந் தேடி நீள்கடல் சென்ற சேர்ப்பர்
பலதின மாகி யின்னும் படர்தர வில்லை யென்று
வலமுற விம்மு நெய்த லாயிழை மார்கள் சேணிற்
கலனுறு கூம்பைக் காணக் களிப்பினிற் றோய்வர் மாதோ. (அஅ)

பெருகிய சிவபோகத்தின் பெருக்கினிற் குளித்த மேலோர்
மருவிய வுலகந் தோன்று மகிழ்ச்சியின் வதிவர் போல
வரியதோர் திமிங்கி லங்க ளாதிய மீன்க ளெல்லாங்
கரியமா கடலுக்குள்ளே களிதுயில் கொள்ளு மம்மா. (அகூ)

உப்பினை யளங்க டோறு முமணர்க ளமைக்கு மோதை
கப்பலை யோட்டவெண்ணிக் கனவிதை விரிக்கு மோதை
வெப்புற வுணக்கு மீனை வேட்டுண வருநீர்க் காக
மப்புறப் படுத்துமோதை யார்கலி யொலியின் மேலாம், (கூ0)

பெருகிய கடலினீரைப் பேணிடார் பட்டி னத்தா
ரருகுறு கேணிநீரை யருந்துவர் தாகந் தீர
வுருவினிற் பெரியரேனு முதவிடார் தம்மை நீத்து
மருவிய சிறியரோடு மகிழுநர் குணத்தைக் கண்டே. (கூக)

கருநிற வமணர் மேனுட் கடலுழைக் கட்டி விட்ட
வருணிறை யரசைத் தாங்கி யருங்கரைப் பாங்கர்ச் சேர்த்த
வருணனைத் தெய்வமாக வாய்ந்திடு நெய்தன் மேன்மை
சருவமு மோர்ந்து நன்கு சார்ந்துரைக் குநர்க ளியாரே. (கஉ)

பாலை.

வேறு.

எயிற்றியர்க ளெழினலத்திற் கிரிந்திட்ட தூதுணங்கள்
குயிற்றியபற் குடிநிறைந்த குறும்பினிடை வாழாமே
வெயிற்றலையி லேயிருந்து வேறயினி வேண்டாமே
வயிற்றுணு வன்றியின்று வன்பருக்கை யுண்ணிடுமால். (கங)

பொரிகெழுவற் கலைநிறையும் புறவயிரக் கோங்காதி
சொரிமலர்கள் விரவிமிகச் சுரமுழுது மலருவன
வெரிதழலுக் காற்றும விடர்ப்பட்டுச் செலவழுங்குஞ்
சுரிகுழலார் மெல்லடிக்குச் சுகமதனை விளைத்திடவே. (கச)

நெருங்கிவள ரிருப்பையினி னிறைந்ததழை யிடையிடையே
மருங்கமரும் வெண்ணிறத்த மலர்களினத் தொளிர்நோக்கம்
பெருங்ககனத் தியங்குபல பெயரெழிலி னனந்தலையி
லருங்கதிரே யுடுவனைய வழகொருங்கு காட்டிடுமால். (கரு)

பலபாவை யளித்துவளர் பயில்குரவு தமைநோக்கி
மலடாகுந் தமதனை மாற்றிடுவான் மனத்தெண்ணி
நலனுருஞ் சண்டிகைமு னன்மலர்க ளினஞ்சொரிந்து
பலனுகத் தவஞ்செய்து பாடலங்கள் பல்கிடுமால். (கசு)

நல்லுதகப் பொருட்சிறிது நாடிடுதற் கரிதாகி
யில்லையிதற் கொப்பெனவே யெரியெறிவெங் கடத்தினுழைச்
செல்வுழி யங்கெய்திடுவார் தேக்கும்விடாய் தீர்தருவா
னெல்லிமரன் றந்திடுவ நெறிதோறு நற்கனிகள். (கஎ)

எத்தகைய கொற்றவரு மெழில்வென்றி வேண்டுநரே
லித்தகைய செம்புலத்தி லிருங்கோட்டங் கொண்டருளுஞ்
சத்தியினை யேபணிந்து தக்கவரம் பலபெற்று
மெத்தியநல் வாகையினை யேசூடி மேவுவரால். (கஅ)

கல்லாரிற் பயின்றுவிட்டார் கற்றாரின் குணமணைத்து
நல்லார்வத் தறிந்திடுவர் நானிலத்தி லலைதொப்பச்
செல்லாரு நானிலத்துச் சீர்மையெலா நனிதேற
வெல்லாரும் வெயிலெரிக்கு மிரும்பாலை யோங்குறுமால். (௬௬)

திணைமயக்கம்.

வேறு.

வயல்களிடைமிடைந்துயருஞ்சுவைக்கழைகடமையலைத்தவயமாதம்மை
வயன்களமர்க்கவையடித்தாட்பகடென்னுமிகமயர்வின்மறிக்கச்செல்வ
ரியல்வரைச்சானுவின்கதலியினிதயிலவந்தடுத்தவெருமைதம்மை
யயலுறையுஞ்சிற்றூரராம்பலெனவேநெருங்கியயர்வுதீர்வார்.

தங்கள்விழிக்குறழ்வென்னுப்பரத்தியர்கள்கயற்குழுவைத்தாமுணக்க
வங்கவைகள்குப்புறவேயடுத்தசுனையிற்பாயுமாங்கெஞ்ஞான்றுந்
தங்குமலர்த்தேன்ஞிமிறுமிகவெரீஇநுளைச்சியர்கடலையின்மொய்ப்பச்
சங்கையுறக்கொண்டவிடைசுமையாற்றாதரிதலங்கித்தளராநிற்பர்.

பாங்குபெறுந் திணைக்குரலைக் குரீஇயினங்கள் வாயிடுக்கிப் பறந்துசென்று
வாங்குமயற் சோலைகளிலிருந்து கொறித்திடும் பான்மை வயங்குமோர்பா
லோங்கிய செந்நெற்கதிர்க ணணிமுற்றித் திட்பமுற வுதிர்ந்த முத்தங்
கூர்ங்கவணில் வைத்தெறியக்குறிஞ்சிநிலக்கொடிச்சியர்கள்கொள்வரோர்சார்.

பொதுவியர்கள் கடைகின்ற ததியோதைக் கஞ்சுமுயல் புக்கு ஞாங்கர்
முதிர்பரன்மு ரம்பில்வளர் வரகாதி கறித்துண்ண முயங்கு மோர்பா
லதிர்கரும்பா லையினோதை கேட்டலும்பல் கருமந்தி யலமந்தோடி
வெதிர்வளர்மா வரைகளினிற் குடியிருந்து விளங்குவனவங்ங னோர்சார்.

நகரதனிலளவிலவா முயருபரி களினுலவு நல்லார் தங்க
ளகவிதழ்களலர்தரூஉம் வெண்முல்லை யமைந்திட்ட வணிகூந்தற்கு
மிகமலைச்சார்த் தம்மிறினம் விளைவிக்கு மகிலாதி கொன்றுதீயிற்
புகவியற்ற வெழுந்தபுகை மணம்வீசி யெந்நாளும் பொருந்துமாமால்.

செந்நெலினையளந்தீந்து வெண்முத்த மிகவாங்கிச் செருக்குற்றாரு
மன்னுமா லதிமலர்க ளுதவிமது வாங்கியுண மகிழ்கொள் வாருங்
கொன்னெயிற்றி யர்க்குணவைத் தந்தரசர் மைந்தர்புறக் கொள்ளுவாரு
மின்னபரி வருத்தனைக ளியற்றிவாழ் பவராக வெங்கு நீடும். (௧௦௫)

நானிலத்தின் பொருளனைத்து மிவ்வாறு நனிமயங்கி நண்ணுந்தன்மை
வானிலத்துப் புலவர்களு மெடுத்துரைக்க வியலாது மயக்குவிக்குந்
தூநிலத்துப்புகழ்த்தொண்டைமண்டலச்சிறொருசேரத்தோன்றுமென்றன்
பானிலைத்த வறிவதனுக் கெட்டுமள வேயீங்குப் பகர்ந்திட் டேனால்.(க0சு)

நிகரரிதா மெழிற்பாலி நாடதனின் வளமுழுது நீணிலத்திற்
பகரவலார் சிவஞான முனிவரரே யிவ்வுலகம் பரவு மேன்மைப்
பகரமனைத் தினுமோங்குந் திருவான்மி யூரென்னப் படர்ந்த சீர்த்தி
நகரணிக ளொரு சிறிதிங் கெடுத்துரைத்து விணைப்பாச நடலை தீர்வாம்.

திருநாட்டுப்படலம்
முற்றிற்று.

ஆகச்செய்யுள் - கநஎ.

# திருநகரப்படலம்.



கல்வி வல்லுநர்க் கருண்மருந் தீசர்தங் கருணை
செல்வி வாழ்தன்மற் றங்கவ ளெண்பயன் சிறப்புச்
சொல்வி ராவிய ஞானமிங் கிவையெலாந் துளங்கி
நல்விஞ் ஞாதமே நல்குமவ் வான்மியூர் நகரம். (க)

மறைக ளாதிய விஞ்சைக ளோதிடு மதிய
ரிறைக ளேற்றிடு மன்னவ ருதியத் தானே
நிறைவின் மேம்படு வைசிய ராதியர் நீடு
நறைத ருந்தருப் பொலிவது வான்மியூர் நகரம். (உ)

பான னேர்விழி மடந்தையோ டுறைதரு பரம
ஞான வன்சர ணனுதினம் போற்றிட வமர்ந்த
மோன யோகிக ணிலைபல நிலவுவ முற்றும்
ஞான மேயுரு வாந்திரு வான்மியூர் நகரம். (ங)

கல்வி வேண்டுநர் கனகம் வேண்டுநர் காதற்
செல்வி வேண்டுநர் சேய்கள் வேண்டுநர் தேர்ந்த
பல்வி தப்பொருள் வேண்டுந ரவையெலாம் பகுக்கு
நல்வி ழாத்தினம் வளர்திரு வான்மியூர் நகரம். (ச)

வஞ்சமுற்றவர் வறுமை பெற்றவர் மறந்து
மஞ்ச லாபவர் புன்றொழி லாய்பவ ரணங்கு
விஞ்ச வாழுநர் தேடினுங் காண்கிலா வியனூர்
நஞ்ச தாசிவன் வளர்திரு வான்மியூர் நகரம். (ரு)

வேறு.

வண்டு செய்வன வண்ண மிலஞ்சியில்
வண்டு செய்வன வண்ண மிலஞ்சியில்
விண்டு மேவுவ வீசுத ஞெச்சியில்
விண்டு மேவுவ வீசுத ஞெச்சியில். (சா)

அரிகள் கூடு மரிமண் டலத்தினை
யரிகள் பாடு மரிமென் றுடைவையி
லரிக ளோடு மரிகளை யீர்த்துமே
யரிக ணீடு மரிமலை யென்னவே. (எ)

கோவு லாவுமங் கூலத் தருகுவண்
கோவு லாவுமங் கூரரி தத்திடைக்
கோவு லாவுங் குளிர்தண் பணைவயின்
கோவு லாவும்வண் கொண்டல்க ளீட்டமே. (அ)

வேறு.

மாதங்க மேவிடு மாழையின் மாவணி
மாதங்க மார்தரு மாடங்க ளெங்கணு
மாதங்க மண்ணிடு மந்தண மாதிய
மாதங்க மார்சிரன் மன்விழா வோங்குமே. (கூ)

வேறு.

அன்பெனும் பூமிமாட்டிங் கழுத்திய வருள்காழ் வித்தே
யின்புற நாளுமோங்கி யிலகிடும் பான்மை நேர
வென்பணி யீசன் வேட்கு மெழிற்றிரு வான்மி யூரை
முன்புற யாண்டுஞ் சூழ்ந்து மொய்த்தன பொங்கர்ச் சோலை. (க0)

விரியலர் காவி னீழல் விளங்குறத் தம்முட் காட்டி
யரியவிண் சோலை நாண வமர்ந்ததண் பொய்கை தோறும்
பிரியமொ டன்னஞ் சார்ந்து பீடுற வாடுந் தோற்றம்
பெரியதொர் சிவவே டத்தர் பெட்புடன் குடைதன் மானும். (கக)

அயில்விழி மாத ரார்த மழகினைக் கவர வெண்ணாப்
பயிலும்பைஞ் சோலை யாவும் பைந்தளி ரிணர்த்து நோக்கும்
குயில்கிளி மறைந்து நின்று குளிர்மொழி கற்பானுடு
மயிலின மொயிலைக் கற்று மகிழ்வுற நடந்து பார்க்கும். (கஉ)

மல்லிகை முல்லை கொன்றை மருவுசண் பகமா மாதி
யெல்லையில் வாசம் வீச வியங்குபூந் தண்டலைக்கண்
மெல்லிய வாழை பூகம் வெள்ளிய தாழை வேழ
மல்கிய வேதிவின்ன வளனெலாங் காட்டா நிற்கும். (கங)

தேன்மலி கொன்றை யந்தார்ச் சிவபெரு மானுர் தங்கும்
வான்மியூர் நகர்க்கு நேரா வயங்குமோர் தலமுண் டென்பார்
பான்மலி காமதேனு பரவிய கலுழி பாயுங்
கான்மலி வயமாக் கொப்பென் றுரைத்திடுங் கயவர்ப் போலும்.

மருவியு காசி யாரூர் மன்னிய வருணை தில்லை
யிரும்பெரு வீட்டைச் சூழி விறந்திடி ற் பிறக்கி லுன்னி
லருள்பெறக் காணி லென்ப ரரியவித் தலத்தி லிவ்வா
றருகிய பேத மின்றி யளித்திடு மெவர்க்கு முத்தி. (கரு)

முகமனுச் சொல்வ தன்று முப்புவ னத்து ளாரு
மிகமலி செல்வங் கல்வி விரும்பிய ஞான மாதி
யகமகிழ் வுடனே வேட்டங் கடைகுவர் சாத மாகப்
புகழ்பல வோங்கு மிங்கப் புண்ணிய வான்மி யூரில். (கசு)

மறவியைச் செய்யும் பாச மலத்திடை மூழ்கி நாளும்
பிறவியங் கட்லிற் பட்ட பேதையர் பிணியைப் போக்கி
யுறவியைக் காக்க வேண்டி யுயர்மருந் தீசன் வாழ்த
றுறவிகட் காக்க மான தொன்மைய வான்மி யூரே. (கள)

## புறநகர்.

### யர்னைக்கூடம்.

வேறு.

விண்ணெறி யசைதரு மேக ராசிகண்
மண்ணிய மண்மிசை மதர்த்து லாவுவா
னண்ணிய வோவென நகர்ப்பு றம்பெலா
மெண்ணில கரியின மெங்குந் திரிவன. (கஅ)

ஐங்கர னெம்முறழ் வாஞ்சிரங் கொண்டனன்
சங்கரன் போர்த்தனன் சருமநீட் சியையெ
யெங்களுக் கிணையவா வெவ்விலங் குண்டெனாப்
பொங்கி னுலாவும் புகர்முகத் தும்பிகள். (கசு)

பைம்பொனிற் கிம்புரிப் பானிறக் கோட்டின
கும்பம திலகுறக் கொண்டிடு மோடைய
வம்பின் மதத்தன வளர்முழ மேழின
வும்பவி னுலைக ளோங்குவ வோர்சார். (உ0)

துதிரைப்பந்தி.

குரைகட லலையெழு குலங்க ளியாவுமே
தரையுழைப் பிறழ்வுறச் சார்ந்த வாமெனா
வரையறு தேத்துநல் வாசமாவின
நிரைநிரை சூழ்ந்தெதிர் நிலைத்து வாழ்வன. (உக)

ஒற்றையஞ் சக்கரத் தொண்கதிர்த் தேரிணைப்
பற்றியங் கீர்த்திட வேழெனும் பரியினுங்
கொற்றம தாமெனப் பல்லுருள் கொண்டதேர்
வெற்றியி னீர்ப்பன வியன்பரி தனித்தனி. (உஉ)

ஐங்கதி கொண்டிடு மாழியுந் தாண்டிடு
மெங்குள திசையினு மிமைக்குமுற் பாய்ந்திடு
மங்குரம் பங்கத்து மழுந்திடா தோடிடு
மங்கலக் குதிரைகண் மந்திர மோர்சார். (உஙு)

தேர்நிலை.

சுந்தரப் புரவிக ளணிவினங் கீர்த்திட
வுந்திய கொடிபல வுயர்வி னசைத்து
மந்தர மசைவுற வந்தென வான்றெடு
பந்தியிற் றேரினம் பற்பல வோர்பால். (உச)

வீரரிருக்கை.

தேர்கரி பரியுடன் றிகழுறு காலா
ளார்தரு பல்படை யாய வனைத்துஞ்
சீர்பெறச் செய்து சிறந்திடு மாக்கள்
சேர்தரு சேரியஞ் சேக்கைக ளெண்ணில. (உரு)

மார்புறத் தட்டுவர் வாட்களை வீசுவ
ரேர்பெறு மஞ்சுவ லேந்துவர் தூணிக
ளோர்வடு வேனுமங் குடற்கொ ளாதவர்
சீர்பெறு வீரர் சிலம்ப மளவில. (உசு)

வேறு.

அணிகிம் புரிவா ரதிகூர் கணைவாள்
மணிகல் லணைவின் மத்திகை புரசை
திணிகொள் படைக டிறமுள மற்றும்
பணிசெய் சேரிகள் பலவா மவணே. (உஎ)

இடைநகர்.

வேறு.

வெண்மை யாமணற் குன்றுகள் விளங்குவ வோர்சார்
வண்மை மாமல ரோடைகள் வயங்குவ வோர்சார்
தண்மை செய்யுமுய் யானனந் தங்குவ வோர்சா
ரொண்மை மாமணி மாடங்க ளோங்குவ வோர்சார். (உஅ)

வம்பவி ழுங்குழன் மாதரார் வண்டலாட் டயருங்
கம்ப லைத்தெழுஞ் சோலையிற் காளைகள் கூடியே
யைம்பொ றிக்கும் விருந்தளித் தானந்த மாகியே
யும்ப விற்றன் னிகரின்றி யோங்கி யுலாவுவர். (உகூ)

பொருந்து பற்பல பூவையர் புருடரோ டென்று
மிருந்து வாழ்தரு மாடமீ தெழிலுற விழைத்த
திருந்து மாமணி வொளியினிற் றினகரன் பரிகள்
வருந்த விழிகவித் திடருவ வண்சுடர் முட்டி. (௩0)

ஓங்கு மொண்விழி காதள வோடுறு மடவார்
தாங்கு குழலிருட் கனமெனச் சங்கை கொண்டானு
மாங்கு மாமணி மேடைக ளணிசெயுங் குன்றம்
பாங்கு மேவுறு மயிலினம் பரிவுட னென்றும். (௩க)

சந்த ணிந்திடு பூண்முலை துயல்வரத் தாங்குங்
கந்த வார்குழற் கொப்புகண் மண்மிசைக் கழல
முந்து மாமுக நீர்த்துளி முத்தெனத் ததும்பப்
பந்த டித்திட முயங்குவர் பைந்தொடி நல்லார். (௩உ)

நீங்க ளேசர ணுமெனு நேடிடு மாடவர்
தாங்கள் பூமியி லலைதரு தன்மையி தாமெனுத்
தூங்கு மாமணிப் பொற்குழை துணைச்செவித் தாங்கிட
வோங்கி யாடுவர் பூவைய ருஞ்சலாட் டதனை. (௩௩)

சாந்த மாமதி சாரலுந் தண்புனல் காலக்
காந்து சந்திரக் கல்லினிற் கட்டிய மேடைமேற்
காந்த ளேடிள மாதர்பொற் கட்டிற்கண் டுஞ்ச
லார்ந்த பாற்கடற் பின்னைசேர்த் துணைவனு மாமால். (௩௪)

சூட கம்புனை மாதரார் சுடர்விடு மணிசெய்
மாட மேல்வர வவர்முக மதியென வுன்னி
நேட ராகவர் நடையினை நீளுறச் சூழ்ந்தே
யோட வெண்ணுறும் பிணிமுக வொண்மயி லென்றே. (௩௫)

சொல்லுஞ் செல்வத்தே யளகையின் றுன்னக ராமால்
புல்லும் போகத்துப் போகிவண் பொன்னக ரேயு
மொல்லு நானிலத் தொண்பொரு ளியாவுமிக் கோங்கிக்
கல்லு மின்மையைக் கனவினுங் காண்குறு மிடியே. (௩௬)

காந்து மாமணிக் கதிர்விடு மாளிகை தோறுஞ்
சாந்து மான்மத வாசமுந் தமனியப் பொடியும்
பூந்து ணர்த்திர ளாதியும் பொலிதரக் காணாப்
போந்த விண்ணவர் தம்மனங் கவருமெப் போதும். (௩௭)

## உண்ணகர்.

### அகழி.

வேறு.

விரும்புற விண்ணின் வாவும் வியன்முகிற் படலை யாவும்
பெரும்புறக் கடலீ தென்னுப் பெரிதுவந் திறங்கி யார்த்துக்
கரும்புன னிரம்ப வுண்டு கறுத்திடு மேன்மை மிக்குத்
தருமொரு கிடங்கு சூழுந் தனிநகர் மதிற்புறம்பே. (௩௮)

கடற்க யங்கண் டிட்டாலுங் காளையர் மனங்க வர்ந்த
தடங்கணார் நெஞ்சி னுழஞ் சாற்றுவ ரிருந்திட்டாலு
மிடங்கர்க ளொன்றோ டொன்றங் கிகலுறத் தாக்கி யல்குன்
கிடங்கரி னமுவ நோக்கிக் கிளப்பெவர்க் காகுமம்மா. (௩௯)

நவநவ மலர்கள் பூத்து நாடுநீ ருள்ளேய் வானை
யுவள்வரால் முதலை ஞண்டங் குலவிடுங் கிடங்கைக்காணி
னவயவ வெழிலை மிக்க வணிபெறக் காட்டி யென்றுங்
கவர்படு நெஞ்சின் வஞ்சங் கண்டிடும வேசை போலாம். (௪0)

மதில்.

அண்டரி னுலகின் மட்டு மணிபெற வுடைத்தா யோங்கி
யெண்டிசை பரவு மேக மினிதுறச் சூழப் பெற்று
மண்டிய விரவி யாதி வலன்கொடு வருவானீளக்
கொண்டதோர் மதிலின் செம்மை குணிப்பிட வரிதே யாமால்.

சொக்கநா யகியாரோடுந் தோய்ந்தள விலாவு யிர்க்கு
மிக்கவே யருளை யீயும் வியன்மருந் தீச னார்தந்
தொக்கநற் புகழே போன்று தொல்விசும் பகடுகீண்டிங்
கொக்கவே போய தம்மா வொண்டிற லுறுச்சியிஞ்சி. (௪௨)

வந்தெதிர்த் திடுவ மென்று வளைந்திடுஞ் சேனைமீது
குந்தம்வார் வாளிசூலங் குயங்கதை பிண்டி பாலஞ்
சிந்திடுமவர்க டம்மைச் சிந்தறுமெண் ணிலமெய் யாய
வெந்திரங் காண்பார் நாக்கை யெண்ணகில் லாரே யென்றும்.

வேறு.

ஓங்கு மாமதின் மீதுமிக் கோங்கிய வெண்டுகிற் கொடிக
ளாங்கு வான்மிசை நிலவிய வணிநல முற்றுமே நோக்கி
யிங்கிவ் வான்மியூ நகரினை யிம்மியு மொவ்வுறு தென்றே
பாங்கு ளார்களுக் கசைவினூற் பதைா மளித்துறக் காட்டும். (௪௪)

பரத்தையர் வீதி.

வேறு.

பலபலநற் குறிபதித்தல் பாணிகொடு தட்டிடுத
லலமுறமெ யணைந்திடுத வனிசீலை புரிந்திடுதல்
கலவிநல முணராத காளையர்கண் முனமறிய
நிலவுசுவ ரோதியங்க ணீண்மணிமா டந்தோறும். (௪௫)

மாடகயா ழிசையோடு மணிக்குரலின் னிசையெழுப்பிப்
பாடகமென் சிலம்படியார் பயிலரங்கம் பலவற்று
நாடகஞ்செய் தாடவரை நயப்பிப்பின் னீயாத
காடரிய பொருளைற்று நாடிய வாழுவரால். (௪௬)

தல்முழுதுந் தந்தாலுந் தனஞ்சிறிதுங் காட்டாத
குலமகளிர் குறையதனைக் குவலயத்து ளாரறிய
நிலவுதன முழுவதூஉ நேர்பவர்க்கெ லாமளிக்கு
நலமுடைய கணிகையரி னன்கொடைக ளெவர்க்குண்டே. (சஎ)

தவமுடைய ரேனுமுடற் றசைதிரைந்தோ ரேனுமனத்
தவமொழிந்த வறத்தின்வழி யணைந்திட்டோ ரேனுநீர்க்
குவவுநோய் மிக்குற்ற கூடுடைய ரேனுமிங்
கிவர்விழியிற் பட்டார்க ளிவர்சரணே கதியாவர். (சஅ)

தங்குமாந் தர்கள்பலருந் தம்முடலம் பொருளாவி
யிங்கிவர்பாற் சரணமடைந் திடுவரெனி லக்கணமே
யங்கையினி லோடேந்தி யடியவர்பா லியாசிக்குஞ்
சங்கரனார் சாரூபந் தந்திடுவ ரிதுசரதம். (சகூ)

பலபுருடர் தமையணைவர் பரத்தியர்க ளென்றறியாச்
சிலபுருடர் வைதிழிவு செப்புவரேற் சுவர்க்கத்துத்
தலமருவு புலோமசையின் றன்மைபல வாவகுத்து
நலமருவ வதிகுவரோர் நாணமின்றி யெஞ்ஞான்றும். (ருo)

உள்ளவகத் தன்பிலரா யொளிநகைசொன் னயங்காட்டித்
தெள்ளியர்க ளேனுந்தமைச் சேரும்வரை மிகமயக்கி
யெள்ளாதி நெய்பொருட்போ லிரும்பொருளுக் கிசைந்தவகை
கள்ளநலங் கொடுக்கின்ற கணிகையரை மதிப்பர்கொலோ. (ருக)

ஆயிரமா டவர்கடித்த வதரமே யாயிடினும்
வாயின்வரு முமிழ்நீரை வளமறைய ராதியருந்
தூயவமு தாக்கொளலாற் சுந்தரநற் பொதுமகளி
ரேயவழற் கடவுளினை யெந்நாளு மொத்தனரால். (ருஉ)

திருமகளெஞ் ஞான்றுமிவர் தேகத்துப் பொலிகுவடு
மருமலர்வெண் டாமரையாள் வதிவளிசை தருநாவில்
வருபுருடர் மருங்கிருந்து மன்வேண்ட வ்திதருவர்
மருவியசு பாங்குமுள வரைவின்மா தர்களென்றும். (ருந)

### வைசியர் வீதி.

வேறு.

வெள்ளிய முத்தின் கோவை விளங்குமா ணிக்க வாரந்
தெள்ளிய பவளத் தொங்க றேர்மர கதத்தின் றாம
மொள்ளிய நீலக் கோதை யுயரிய வயிர மாலை
யெள்ளரும் பலவும் யாத்த விணையிலங் காடி பல்ல. (ருச)

வரைபடு பொருளி னீட்டம் வயங்கிடு மலையை மானுங்
குரைகடற் பண்ட மியாவுங் குலவுவ வீரை யென்னத்
தரைபடு செல்வ முற்றுந் தயங்குவ பரவி யெங்கு
நிரைநிரை பஃறா ரங்க ணிலவுவ கான மொத்தே. (ருரு)

பன்னிரு நாட்டி லுள்ளார் பலபல கூலங் கொள்வான்
முன்னுவ ரெங்கு மாக மொழிகுவர் தந்தந் தீஞ்சொல்
சொன்னிக ழுண்மை தேர்ந்து துலைதடு மாற்ற மின்றி
யின்னதிங் கில்லை யென்னா தியாவுமே நொடையின் விற்பார்.

ஒவ்வொரு நாய்கர் பாலு முண்டுபல் கோடி கோடி
யவ்வுழை வருவார்க் கெல்லா மளிப்பது கோடி கோடி
யெவ்வெவ ரொன்று கேட்கி னிகைப்பது கோடி கோடி
யிவ்வகை யீவ ரேனு மிம்மியு மனங்கோ ணாரே. (ருஎ)

இலையெனுஞ் சொல்லை யென்று மிவ்வுழி கேட்டதின்று
விலைதரு பவர்கட் கெல்லாம் வேண்டிய வீவர் நன்கு
மலைபல குவிந்தா லன்ன வயின்வயிற் பண்ட மோங்கி
யலையென மேலு மேலு மரும்பொருள் வந்து நேரும். (ருஅ)

வணிகர்பீ டிகைக டோறு மகிழ்வுட னிரிப்பர் தம்பால்
மணியுநன் முத்துங் காசு மாழையுங் குவித லானே
யணிபெறு தனத னென்ன வழகுடன் வதிவ ரென்னிற்
றிணியுறு வளனை முற்றத் தெரிப்பவர் யாவ ரேயோ. (ருகூ)

எந்நகர்க் கூல மியாவு மீண்டிட வெந்த ஞான்று
மன்னுவ குப்ப லாக மாடமார் வளங்கடோறு
நன்னரிற் கூர்ந்தி யார்க்கு நல்குவ பண்டம் பல்ல
விந்நகர் போன்று காண்ட லெங்கணு மில்லை யாமால். (கூ0)

முயறலின் ஞொல்கல் கொள்ளார் முனிவினை யென்றுங் காட்டார்
பயனில வார்த்தை வாளாப் பகர்ந்துகா லத்தைப் போக்கா
ரயலவர் பொருள்க டம்மி லதிகமுங் கொள்ளா ரீயா
ருயரிய வணிகர் சீரை யுரைப்பவர் முற்று மியாரே. (சூக)

## வேளாளர்வீதி:

### வேறு.

வருபல விருந்தைக் கண்டெதி ரோடி மனமகிழ்ந் தவர்வர வேற்றும்
பெருகிய வன்பான் முகமனுங் கூறிப் பிரியமொ டடிசிலை யருத்தி
யருகுமா துலர்த மவாக்கெட நல்கு மறம்வளர்த் தோங்கிடவாழுந்
தருபுக ழுயர்வே ளாளர்க ளென்றுந் தங்கிவாழ் வீதிகள் பல்ல. (சூஉ)

சாற்றருந் தமிழிற் றக்கநல் வினைவுந் தண்ணலம் பொருந்துறு வாழ்வு
மேற்றருந் தெய்வத் திருமுடி மிசையே யிலகிய கங்கைநற் குலத்துத்
தோற்றிய புகழும் புனிதமு மருளுந் துலங்கிடப் பெற்றனராகி
நீற்றையே பொருளாக் கொண்டிடுஞ் சைவ நிகரில்கா ராளர்களெங்கும்.

உழுதுணுந் தொழிலே யுரிமையிற் கொண்டிங் கொழிக்கினி விம்மியும்பிறழா
தொழுகிமற் றரைய ராதியர் நீட வுபகரித் தோங்கியே யென்றும்
பழுதறு தருமம் பல்வகை புரியும் பழையவே ளாளர்க ளெங்குங்
கெழுவுமோ கையினுற் பெருமையிற்க வின்று கிளர்ந்துறை வீதிகளெங்கும்.

ஓங்கிய மறைய ரரசர்களாதி யோரிரு கரநிரை நீட்டப்
பாங்குறு தருமந் திறைமுதற் றூணம் பண்பொடு மளித்துநூல் விலக்குந்
தீங்கினை யொழிக்குஞ் சிவனடி மறவாச் சிந்தனை யுடையவராகி
யேங்குறு றுலகைக் காத்திட வாழ்வ ரிணையில்வே ளாளர்களெங்கும்.

அதிதியர் வரவே தம்முணு வென்னு வங்கவர்த் தேர்ந்தள வளாவி
மதிநிலாக் கற்றை வார்சடை முடியார் மகிழ்மருந் தீசனென் றுன்னி
யதிப்சி யொழித்தங் கவரவர்வேண்டு மரும்பொருள் பலவுமே யீந்து
வதிதரும் புகழ்பூ வைசியர் மறுகு வயின்வயிற் காண்குறலாமே. (சூரு)

சைவர்தம் பேர்கா ரணவிடு குறியாச் சந்தத மிசைந்து மிக்கருளாந்
தெய்வநன் னீர்மை பொலிதரு மடத்துத் தேசிகவிறைமையைப் பூண்டு
முய்வகை யரசுக் கொருமுடி சூட்டு முயரிய தொழிலினை யேற்று
மெய்வகை தெரிந்த சைவவே ளாளர் மேம்படு புகழ்ச்சியே புகழ்ச்சி.

அரசர் வீதி.
வேறு.

எத்திசை தன்னி லேனு மிரும்பகை யுண்டென் றோரி
லத்தரு ணத்துச் சென்றே யடுசம ராற்றி வென்றி
பெற்றிடு சேனை வேலைப் பெருக்கென நிறையப்பூமி
முற்றுமோர் குடைக்கி ழாள மொய்ம்புடன் வாழ்வர் மன்னர்.

எத்தகை வலத்த ரேனு மிகற்களம் வந்து நேரே
பத்தியி னின்று நாட்டு பண்ணுவ ராயிற்றம்மை
நித்தமும் வீர சொர்க்க நிலைப்புறச் செய்வோர் தம்மின்
பத்திரு மாட னுள்ளல் பற்பல பிறங்கு மாங்கண். (௬௯)

காரிருளேய்க்கு மியானை கடிதுற நடத்து வாருஞ்
சாரியின் புரவி யேறிச் சதிர்பெறத் தாவுவாரும்
பாரினைக் கிழிக்குமாபோல் பல்லரி யோட்டுவாருஞ்
சேரிய வரசவீதிச் செழிப்பினைச் செப்பப் போமோ. (௭0)

மறையவர் வீதி.

அரன்றிரு முகத்திற் றோன்றி யநாதியிற்றீக்கை பெற்றுச்
சிரமறை யாகமங்கள் செப்புமுப் பொருளையாய்ந்து
வரன்றனைத் தொட்டுப் பூசை வகைபெறச் செய்துபோற்று
முரனுறு மாதிசைவ ருறைபல வீதி யாங்கண். (௭௧)

அறுதொழி லாள ரானின் றருமறை வளஞ்சிறப்ப
வுறுமக மோம்பி யென்று முயரிய வேள்வியாற்றி
மறுவறு தேவர் நாடு மகிழவி சிந்து வைகு
மறுகினி லோங்கு மில்லம் வானமு மகிழ நிற்கும். (௭௨)

முஞ்சிநா ணரையிற் றுங்கி முடிகொளு மயிணஞ் சேர்ந்த
பஞ்சின்முப் புரிநூ லுலப் பண்டைய முமம லங்க
மிஞ்சிய தென்னக் காட்டுந் தோற்றுமுக் கோலை யேந்து
மிஞ்சிய மறைவ லார்கள் மிடையுமா வீதி பல்ல. (௭௩)

சரணெனச் சார்ந்தார் தங்க டரத்தினை யாய்ந்து நன்கு
முரணறு சமய மாதி முறைபெறு தீக்கை யாற்றி
யரணெனும் பாச மாற்றி யரனரு ளின்பு காட்டுந்
தாணியிற் குரவ ரானோர் சார்வுபல் சிறக்கு மங்கண். (௭௪)

மடம்.

கல்வியிற் றேர்ந்து ஞானக் கடலினிற் றிளைத்து நாளும்
புல்லிய காம மாதி புன்சழக் கறுத்து மேலா
நல்லதோர் சைவ வேட நண்ணிய முனிவர் மல்குந்
துல்லிய மடங்க ளெங்குந் தோன்றிடும் பல்ல வாங்கண்.

கல்விச்சாலை.

துலக்கமுற் றிலகு ஞானத் தொடர்பினுக் கேற்ற தான
கலக்கமில் விஞ்சை தேர்ந்த கவியர சாய மேலோர்
நலக்கம்போற் பொலிந்து ஞான்று நண்ணுமாணவர்கடம்பா
லிலக்கண விலக்கி யங்க ளியம்பிடுங் கழக மெண்ணில். (எசு)

சத்திரம்.

கருப்பெனு மாற்ற மீண்டு கனவினு முன்னு வண்ணம்
பருப்புட னெய்பால் பண்டு பாயசம் பண்ணி காரம்
விருப்பமர் கறிக ளாதி விளங்கிட வடிசி லூட்டு
மிருப்பிட மென்ன வோங்கு மினியசத் திரங்க ளெங்கும். (எஎ)

தண்ணீர்ப்பந்தல்.

வெறிகமழ் வேரும் பூவும் விரவிய துடியுஞ் சுக்குஞ்
செறியெனு மிச்சஞ் சாறுந் தெளிதரு நன்னீ ரோடு
நெறிபெற மோர்வி ளாவி நேர்பவர்க் கெல்லா மீயு
மறிஞர்க டருநீர்ப் பந்த ரளவில வீதி தோறும். (எஅ)

மண்டபம்.

அண்டர்நா யகனு ராகு மருமருந் தீச னூர்தாங்
கெண்டையங் கண்ணியோடு கிளர்மணி மாட வீதி
கண்டிடும் விழாக்க டோறுங் கணப்பொழு தெய்ப்புநீங்க
மண்டபந் துறுமி யோங்கி மலிவன நியமமுற்றும். (எகூ)

திருமதில்.

அரியயர்க் கரிய வெங்க ளருமருந் தீச னாரும்
பெரிதுவந் தருளுஞ் சொக்க நாயகப் பிராட்டி யாரும்
பரிவொடு வாழுங் கோயிற் பருமதில் வளரும் பொன்னங்
கிரிமுடி காண்பானீண்ட கீண்முதற் றிசையி னம்மா. (அ0)

திருக்கோபுரம்.

வாபரத் துழைமே னின்று வானமே நிவந்து தாவுங்
கோபுரக் காட்சி தன்னை யாவரோ குணிக்கற் பாலார்
மாபலத் திருவர் நாப்பண் வன்னியி னுருவ மாகித்
தாபிதச் சோண சைலத் தாணுவாத் தயங்குமாதோ. (௮௧)

விடைக்கம்பம்.

கருணையின் படிவ மான கண்ணுதல் பாதங் காண்பான்
வருபவர் தங்கட் கெல்லாம் வழங்குநன் விடைக டம்மைத்
தருமொரு விடையைத் தாங்கிச் சந்நிதி முன்ன ரொன்று
முருவவார் கொடியொன் றேங்குமுயர்ககனத்தைக்கீண்டே(௮௨)

திருவிமானம்.

வெள்ளியங் கிரியின் ஞாங்கர் மிக்கொளி சுடரக் கானு
மொள்ளிய சிகரம் பொன்னு னுளைதர வோங்கிற்றென்னு
விள்ளருங் கலசப் பத்தி விரிசுடர் விட்டு நீட
மள்ளனுற் றுயர்வி மான மலிந்திடும் விசும்ப ளாவி. (௮௩)

யாகசாலையும், பிறவும்.

மண்டபஞ் சினக ரத்து ணிரானுற மலிந்து நிற்கு
முண்டிடற் கமுத மைக்கு முயர்மடைப்பள்ளி யோங்கும்
குண்டமுற் றவிரு மியாக சாலைகள் குலவ நீடு
மண்டரும் வேட்கை கொள்ளு மழகமர் தடமு முண்டால். (௮௪)

திருக்கோயில்.

வேதிய ரான வாதி சைவர்கள் விரும்பி வேதத்
தோதுமா கமங்க ளுண்மை யுணர்ந்தருச் சித்துப் போற்ற
மேதகு மக்கட் கெல்லா மிக்கருள் பொழிந்து காக்கு
நாதனும் வான்மி யூர னுளும்வீற் றிருக்குங் கோயில். (௮௫)

திருநகரப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௨௧௬.

---

# நைமிசாரணியப்படலம்.



கலைமக ளுறைநறு கமல மேயதா
மலைமகள் வாழ்தர வரங்க மாயதா
மலைமகண் ஞானமே மலியப் பெற்றதா
நலமனைத் தினுநிறை நைமிசக் கானமே. (௧)

வேறு.

வளங்கொண் மாமழை மண்ணிற் பொழிதர
விளங்கி யோங்குவ வேள்விக ளெங்கணுந்
துளங்கி விண்ணுழித் தூமம தேகுறு
நளங்கொள் வாவியி னைமிசக் கானமே. (௨)

விண்ணின் வாழ்நர் விழைந்துநன் ஞடொறு
மண்ணின் வந்தவி வாங்கி யருந்தியே
யெண்ணி லாசிக ளீந்திடப் பெற்றது
நண்ணி யோங்குறு நைமிசக் கானமே. (௩)

மந்தி ரம்பொலி மாமறை யாதிய
சிந்தை யிற்றினஞ் சீர்த்தியி னோதுறு
மந்த ணக்குல மந்தமி லாருறை
நந்த னஞ்செறி நைமிசக் கானமே. (௪)

கற்ப கஞ்செறி காமர்நன் ஞட்டையு
மற்ப மென்ன வருவருத் தெண்ணுறும்
பொற்ப கத்துப் புனிதர்தம் வாழ்வுறு
நற்பு கழ்ப்பெறு நைமிசக் கானமே. (௫)

வில்ல மாதுளை வேன்மகிழ் பாதிரி
குல்லை மாலதி கொன்றைவண் சண்பக
நெல்லி யாத்திதொன் னீபங்க ளாநிழ
னல்கி யோங்குறு நைமிசக் கானமே, (௬)

எடுத்த சன்மத் தெழுமின்பம் வாய்தாத்
தொடுத்த பாசந் தொலைந்தங் கொழிதர
வடுத்த யோக ரனேகருஞ் சூழ்தருங்
கடுத்த வில்லது நைமிசக் கானமே. (௭)

நீறு மெய்யினி னீடத் தரிப்பவ
ரேறு கண்மணி யோர்தரப் பூண்பவர்
வீர வக்கர மைந்தையும் விள்பவர்
பேறு பெற்றோர் பிறங்குமக் கானமே. (௮)

வேறு.

மன்னிய வேள்விச் சாலை மறைபல புகலுஞ் சாலை
பன்னரு மியோக சாலை பாங்குயர் பன்ன சாலை
துன்னிய யாகசாலை துதைந்திடும் பூசைச் சாலை
யுன்னருஞ் சாலை கோடி யோங்குறு மெங்கு மாங்கண். (௯)

வேதிகை தோறு மேவி வியன்மறை யோது வாருந்
தாதவிழ் மலர்க ளேவிச் சங்கரற் பூசிப் போரு
மாதவன் முன்னி ருந்தே யருஞ்சந்தி யாற்று வாரு
மோதரு மாக மங்க ளுரைக்குநர் பல்ல கோடி. (௧0)

இத்தகைக் கானத் துள்ளா ரெழிலுறு ஞான முற்று
ரொத்தவா யிரங்கண் வேந்த னுயரிய நாட்டு வாழ்வும்
வித்தகப் பிரமன் வாழ்வும் வேலையிற் றுயின்றோன் வாழ்வுஞ்
சுத்தமில் கான்ற வூணுத் தோன்றிடக் காண்ப ரன்றே. (௧௧)

இன்பம்வந் துற்ற ஞான்று மெட்டுணை வியப்புங் கொள்ளார்
துன்பம்வந் தடர்ந்த நாளுந் துயரினிற் சற்றுந் தாழா
ரன்பதே வடிவ மான வரனடி சதமென் றெண்ணி
வன்பகன் றளிய சிந்தை வாய்ந்திடு முனிக்கு ழாங்கள். (௧௨)

சங்கர னுருவே காண்பர் சங்கரன் கதையே கேட்பர்
சங்கரன் பெயரே சொல்வர் சங்கர னருளே கொள்வர்
சங்கரன் றனையே தேர்வர் சங்கரன் றொண்டே யேற்பர்
சங்கர னடியா ரோடு சதிருற வாழ்தல் செய்வார். (௧௩)

முப்பொரு ளுண்மை யோர்ந்து முதல்வனோ டிருந்து நாளுந்
துப்பம ரின்பந் துய்க்குந் தூய்மையா முத்திப் பேற்றை
யிப்படி யென்னு யார்க்கு மினிதுறக் காட்ட வல்ல
திப்பியர் வாழப் பெற்ற தெய்வமாக் கானந் தன்னில். (௧௪)

கண்ணுதற் கடவு ளுளுங் களித்தவி சேற்கும் வண்ணம்
புண்ணிய மகங்க ளாற்றிப் பொலிந்திடு ஞான்றங் கோர்நாள்
நண்ணிய பிறவி மாய்த்து நம்பனு ரடியைக் காண
வெண்ணிய சூழ்ச்சி யாதென் றியம்பினர் தம்மு ளாங்கே. (௧௫)

யாகமென் றிசைத்தார் சில்லோர் யாணர்நல் விரத மென்றார்
யோகமென் றுரைத்தார் சில்லோ ருண்மையாம் ஞான மென்றார்
மோகமென் றறைந்தார் சில்லோர் முன்னிய விரத்தி யென்றார்
பாகமென் றதிர்த்தார் சில்லோர் பற்பல பேசி யாங்கண். (௧௬)

இவ்வண முடிவொன் றின்றி யெண்ணுறுங் காலைத் தூய்மைச்
செவ்விய நீறு பூசிச் சிவசிவ வென்று பேசித்
திவ்விய மணிகள் பூண்டு தேறுமா ணுக்கர் சூழ
வவ்வயின் வந்து சேர்ந்தா னருந்தவச் சூத மேலோன். (௧௭)

வலிந்துவந் தாளப் போந்த வள்ளலே வருக வென்று
மலிந்தவா னந்தம் பொங்க மகிழ்ந்தெதி ரோடிப் பாடிப்
பொலிந்தவஞ் சலிய ராகிப் புகழ்பல வெடுத்துப் பேசிக்
கலந்தனர் முனிவ ரியாருங் களைந்தகம் விரைந்து வந்தார். (௧௮)

தருப்பையா சனத்தி ருத்தித் தண்ணருக் கியங்கைக் கொண்டு
விருப்புட னருச்சித் தேத்தி விதிவழா தடியின் வீழ
விருப்புவந் திருமி னென்று விருந்தவ முனிவன் சாற்ற
வருப்பமில் லடிக ளியாரு மமர்ந்தன ரறைத லுற்றார். (௧௯)

எண்ணருங் கலைக டேர்ந்த விருந்தவ முனிவ கேண்மோ
வண்ணனம் பரசி வன்ற னடியுறு முபாயந் தன்னை
நண்ணிட வாய்ந்து நாளு நலனுறு சூழ்ச்சி தேரா
தெண்ணமுற் றிருக்கு மேல்வை யெம்முனர்க் காட்சி தந்தீர் (௨௦)

எந்தவம் பலித்த தென்றே யிருமையு மகிழ்வு கொண்டேங்
கந்தரம் புரையுங் கூந்தற் கன்னியைப் பாகங் கொண்ட
வெந்தையார் பாதங் காணற் கேதுவை யெங்கட் கிற்றைச்
சிந்தையி னுவந்து சொற்றி திகையெலாம் புகழுந் தூயோய் (௨௧)

என்றலுஞ் சூத மேலோ னிருடிகண் முகங்க ணோக்கி
நன்றுநீர் கேட்ட மாற்ற நாரியெஞ் ஞான்றும் பாகந்
துன்றாற் பதவி கேட்டீர் சொல்லுவ முறையிற் கேண்மின்
பொன்றலில் சிவத லத்துப் புகழினைப் புகலல் கேட்டல். (௨௨)

அன்றியு மத்தலத்தி லமைவுற வைக லாங்குத்
துன்றிய தீர்த்த மாட றாயனற் சிவலிங் கத்தை
நன்றலர் கொண்டு ஞான்று நவையறப் பூசை யாற்ற
லென்றயா தானு மொன்ரு லெய்தலா மென்னச் சொற்ருன் (உ௩)

உண்மைய தாகு மென்ன வுறுவர்க ணயந்து ஞானத்
திண்மைசேர் முனிவ மூன்றுஞ் சிறந்ததோர் தானந் தன்னின்
வண்மையை யெடுத்துக் காட்டி வையக முய்யு மாறு
நுண்மைக ளனைத்து நாடி நுவலுதல் வேண்டு மன்றி. (உச)

கண்ணினுற் காண்டுற் ருலுங் காதினிற் கேட்டுற் ருலு
நண்ணிய திசையை நோக்கி நாடியே பண்ணிவுற் ருலு
மெண்ணமுற் றியம்பி னுலு மினைத்தொரீஇ வசித்திட் டாலும்
புண்ணிய முத்திப் பேறு புரிதலம் வேண்டு மென்ருர். (உரு)

கேட்டபோ துவகை பொங்கிக் கிளர்மனத் தெண்ணி யெண்ணிப்
பாட்டளி ருாலுங் குல்லைப் பண்ணவன் முதலோர் போற்று
நாட்டமூன் றுடைய வெங்க ளுயகற் கினிய தானம்
வாட்டமில் வான்மி யூரே மற்றிதற் கிணையே தென்ன. (உசு)

பிணையறு கணியல் சூடும் பெருந்தகைப் பிள்ளை யானை
யணைகடந் தருட்பெ ருக்கூற் றறுமுகக் கடவு ளாளைத்
துணைமருந் தீச னுரைச் சொக்கநா யகியாந் தாயை
யிணையறு வியாதன் ருளை யேற்றுபு நவில்வான் சூதன். (உஎ)

நைமிசாரணியப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் உசசு.

# புராணவரலாற்றுப் படலம்.

வேதா கமங்க ளின்றளவும் விசாரித் துணர வொண்ணுது
நாதா நாதா வென்றாற்றி நண்ணற் கரிய சிவபெருமான்
மாதா முமையாள் பொலிவுறவே மன்னு மடியார்க் கருள்சுரக்க
மீதா யுறைய வெழுச்சிகொளு மேன்மை யுற்ற துயர்கயிலை. (க)

உலக மியாவு நனியொருங்கி யுள்ள போது தனியாக
நில்வி வாழு நம்முதல்வ னிலையை நிகரக் காட்டுதல்போற்
சுலவு முவரி யாதியவாஞ் சுவறிச் சாம்புங் கடைநாளி
லிலகு நெடிய வுருவாகி யெழுந்து வளரு மெழிற்கயிலை. (உ)

தூங்குந் தெய்வந் தனைநம்பிச் சுமந்து வாழப் பெற்றதனு
லேங்குஞ் சிசுவின் வாய்ப்புகுந்து மெழிலார் மலையின் மதிக்குற்றுந்
தீங்குபெற்றே னினிவாழே னென்னத் திருப்பாற் கடலதுதா
னோங்கு மலையா யானடிக்கீ ழுதித்தாலன்ன துயர்கயிலை. (௩)

முன்னம் வேயின் முளைத்தெழுந்த முத்தந்தன்னைத்தாங்குவமேற்
பின்ன மடையோ மினிமாந்தர் பிறங்கு கரத்தா லெனவுன்னி
மன்னு முலகிற் பஃறிசையில் வதியு முத்த மெலாமொருங்கே
துன்னு முருவாத் தோன்றுவபோற் றுலங்கு மந்தச் சுடர்கயிலை.

வெண்மை யாய பூதிமெயின் விளங்கப் பூசு மடியாரி
னுண்மை காட்டி நாளுமுயரு மவர்த மருள்போன்று
வண்மை காட்டி யழியாது வாழு மவர்க ணிலைநோ
வுண்மை காட்டிநிலைத்தொளிர்ந்தேயொப்பற்றுறையுமொண் கயிலை

வேறு.

இன்ன மாமலை முடியினி லிருங்கதிர் விளங்கு
மன்னு மாவொளி சினகரத் தொருபுடை மதிக்குந்
துன்னு மாயிரஞ் சோதியர் துதைந்திடு மாபோற்
பன்னு மெண்ணில தூண்செறி பளிங்குமண் டபத்தே. (௬)

சண்ட பானுவு மதியமுந் தபனனு முறையு
மண்ட லம்புரா மிகுவொளி வயங்கிடு பொலனாற்
கொண்ட மாபுலிப் பிடரினிற் குலவிட நிலவு
மண்டு மாமணி பற்பல மருவுமா சனத்தே (எ)

பின்னை பாரதி சுந்தரி பிறவுள மாதர்
துன்னி யொவ்வொரு புடையினுந் துதிபல கூறி
மன்னு பேரருள் பெற்றிட மலரடி வருட
வன்னை யாகம தம்பிகை யமர்தர வொருபால். (அ)

தும்பி மாமுகக் கணபதி சூருயிர் குடித்த
தம்பி வேலவன் றன்னொடுந் தக்கனீள் சிரசு
வெம்பி வீழ்தரச் சாடிய வீரபத் திரனும்
பம்பி யேத்திடு கணங்களும் பயிறர வொருசார். (௯)

கற்றை வெண்கதிர் வீசிய கலைமதித் திங்கட்
பெற்றி யொத்ததோர் வெண்குடை பெருநிழல் செய்ய
வுற்ற தெண்கடற் றிரையன வுழையுழை சாந்து
சுற்றி மாமணிச் சாமரை சூழ்ந்துட னிரட்ட. (௧0)

தேவர் தானவர் சாதரர் சித்தர்கள் கருடர்
மூவர் முப்பத்து மூவர்கள் முறைமுறை வணங்கிப்
பாவ மாகிய தம்வினைப் பகுதிகள் பாறத்
தேவ தேவவென் றறைந்தவர் திசைதிசை நிற்க. (௧௧)

ஆரண வாகம மாதிய வருங்கலை யனைத்தும்
பூரண மாவுணர் நந்தியம் புண்ணியன் முன்னர்த்
தோரண வாயிலி லியாரையுந் தொகையுற விடுங்கால்
காரண காரியங் கடந்தநங் கண்ணுத லிருந்தான். (௧௨)

அந்த வேளையி லனைவரு மவரவர் கருத்தை
முந்த வோதியே வரம்பல முயங்கிடப் பெற்றுத்
தந்த மாவுல கேகினர் தையல ரோடு
மெந்தை யாகிய சங்கர னிருந்தனன் றமியே. (௧௩)

அன்ன செவ்வயி னரன்றிரு வடியிணை யேத்திக்
கன்னி மாமயி னடைநிகர் கன்னியா மன்னை
மன்னு மையம தகன்றிட மனதிலொன் றுன்னி
யின்ன வாறவண் கேட்குற வின்புகொண்டிசைந்தாள். (௧௪)

வேறு.

தண்ணிய மதியும் பாம்புந் தரித்திடு தலைவ மேனா
ணண்ணிய முருகற் காக நகைவடி வேலொன் றேற்கப்
புண்ணிய தவத்தை நானே புரிதிரு மயிலை தன்னி
னண்ணிய புகழை யெல்லா மினிதுற வறைந்த போழ்து (௧௫)

அப்பெரும் பதிக்குப் பாங்க ரையநின் றனக்கே யொப்பாச்
செப்பிய பெருமை வாய்ந்து திகழ்தரு முத்தி தன்னைத்
துப்புற வளிக்கு மங்கைத் தோன்றுமா மலக மென்று
வொப்புறச் சொற்ற வந்த வுயரிய தலத்தின் மேன்மை. (கசு)

அன்புடன் கேட்க வெண்ணி யாவல்கொண் டுற்றே னென்று
வென்பசை மாலை நால வெளியவ ருள்ள மேவி
வன்பமர் மனத்தி னூர்க்கு வலியனு வாழு மெந்தை
யின்புட னம்மை யார்க்கங் கிசைத்தன னுள்ளங் கொண்டே. (கஎ)

இத்தகைத் தூய காதை யிணையறு காந்த மென்னு
முத்தம புராணந் தன்னி லுள்ளகைத் திரகாண் டத்துண்
மத்தியி லுளது கேண்மின் வான்முறை சொல்வே மென்னுப்
பத்தியிற் குரவற் போற்றிப் பகருவன் சூதன் றானே. (கஅ)

புராணவரலாற்றுப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் உகூச.

---

## வான்மீகர்பூசித்தபடலம்.

புரிமுறுக்க முடைந்துறப்பாய் புதுமதுவ நறைவாய்ந்த
விரியிதழின் மலர்த்தவிசின் வீற்றிருக்கும் வேதாமுற்
றெரிதாவீன் றிடுகாலிற் சிறந்துமறை தெளிந்துற்ற
வரியபுகழ்த் தொன்மையவி யாகிருதித் தவத்தனியோன். (க)

தந்தவத்துத் தருபிரசே தசுவென்னு முனிவான்றான்
முந்தவத்தை யிலனுகி மும்மலமு முனிந்திறைவ
னந்திரிய விணைமலர்த்தா ணுளு மேயிறைஞ்சிப்
பிந்தலிலா மையவானப் பிரத்தனுச் சஞ்சரித்தே. (உ)

வேறு.

பெற்றதோர் புத்தி ரன்றான் பிதாச்சொலைக் கேளா னுகிக்
கற்றிடுஞ் சால்பங் கின்றிக் கதிர்நுழை யாத வோதி
யுற்றிடுங் கட்சி வைகி யூறுசெய் மறவர் ரேயம்
பெற்றன னவரு ளுற்றும் பிழையெலா முற்றுந் தேர்ந்தான். (ங)

சந்திவந் தனைம றந்தான் றக்கமா மறைக ளோதப்
புந்தியிற் சற்று முன்ஞன் புண்ணியஞ் சிறிது மெண்ணு
னந்தியும் பகலு மின்னு வாற்றிடு நியமம் பூண்டா
னந்துல காயு தப்பேய் நச்சிட முயங்கி னுனல். (ச)

வேடுவர் குவவிற் சூழ்ந்து வேட்டமே வியங்கி னுள்ளென்
றேடுவ னெல்லைச் சேய்மை யுயரிய மான்க ளெஃகி
நாடுவன் மிருக வீட்ட நண்ணிய போக்கிற் கண்ணி
போடுவ னதனுட் சிக்கிப் பொறியுறும் புள்ளிற் செல்வன். (ரு)

வழிகொடு கானின் மீளு மாந்தர்மேல் வரிபோற் ருவிப்
பழிசிறு வரையு முள்காள் பறித்தவ ரியாக்க முற்றுங்
கழிபெறக் கொண்டங் குற்றுர் களிப்புற வாழ்தல் செய்வ
னிழிதொழி லிழைக்க வல்லா ரிவன்றனக் கிணையிலாரே. (சு)

இவ்வணம் வாழு மெல்லை யிருமட வியினு ளோர்ஞான்
றெவ்வம துஞற்றும் பாய்மா வொன்றினை யீர்த்து மீளச்
செவ்வழி விடபி மேற்றற் சிரங்காலு முராண தாகக்
கவ்வியே யொருவ னுலக் கண்டிறும் பூதங் குற்றே. (எ)

பாதவ ஞாங்க ரிந்தப் படியிவ னிருந்த தென்னே
சாதக வாடல் போலுந் தக்கண மாய்ப்ப னென்னுக்
காதகன் விசுகம் பற்றிக் கடுகென வோச்சி நிற்க
வேதம துற்ற வேவு மிரண்டெனப் போழ்ந்த தன்றே. (அ)

பிளந்திடக் கறுவு கொண்டு பின்னுமா சுகங்கள் தூண்ட
வளம்பெறு மவைய னைத்தும் வலியநுண் பூழ்தி யாக
விளம்புறு தேவன் கொல்லோ வியன்முனி வரன்றுன் கொல்லோ
வுளந்தனி னுறுத்தக் காணே னேவோயிஃ தென்னேயென்னே.

என்றுபல் வகையான் மெச்சி யிவனுயர் வாகை கொண்டோன்
கன்றிய வென்கைக் கோல்கள் கடுவள வேனு மின்னு
வின்றிவன் பாலிற் காட்டா திரிந்தன வின்னுன் றன்னேக்
கொன்றிட வுன்னி னேனுன் கொடும்பாவி யானே யென்றுன்.

தவத்தினின் மிக்க தாய தன்மையிங் கொன்றுங் காணே
னவத்தினிற் கொன்னே போதை யழித்தியான் கெட்டேனந்தோ
பவத்தினில் வந்த விந்தப் பழிபடு தோற்ற நீக்கிச்
சிவத்தினிற் காணப் பேதை செய்வதிம் ஙனமே தென்றான். (கக)

விப்பிரர் குலீனந் தோன்றி வேடவ னாகி யேழை
யிப்பெரி யோன்றன் ஞான வெழிற்றனு நோக்க நோக்கச்
செப்புசை தன்ய மென்னுட் சிறிதிவண் டோன்றிற் றம்மா
திப்பிய விலோச னங்க டிறந்தெனைக் காண்டற் செய்யின். (கஉ)

என்னிடப் பிறவிக் கிற்றை யெல்லைவந் துறுத றிண்ண
மின்னவன் விழிக்குங் காறு மிவ்வுழிப் பேரே னென்னா
மன்னிய காண்ட மாதி மண்மிசைச் சேய்மை வீசி
யன்னவ னருளை நேடி யமர்ந்தன னங்கண் பன்னாள். (கங)

மாத்தினைப் பற்றுக் கொண்டு வளர்தவ முனூற்று மன்னோன்
பரத்தினில் வாய்ந்த நோக்கைப் பகிர்முகப் படுத்தித் தன்பால்
வரத்தினைச் சிவண வைகும் வயனுறு வேடற் கண்டு
சிரத்தினை மிசையெ டுத்துச் சிறிதரு ளாற்றிச் சொல்வான். (கச)

முனிபிர சேத சென்னு முதிர்மறைப் பூசு ரன்பாற்
கனிவின்கான் முளைய தாகக் கவினுல கலைதிற் றோன்றி
யினிதெனத் தாதை யாற்று மிருந்தவ வுழப்ப தின்றிச்
சனியென வாழ்ந்தி யார்க்குஞ் சழக்குகள் கோடி செய்தாய். (கரு)

நல்லவர் தம்மை ஞான்று நடுக்குறக் கண்டாய் தீயப்
புல்லர்க ளோடு புல்லிப் புன்விடக் குய்த்துத் தேக்கி
யல்லவை தாமே யாற்றி யடவியி னழுங்கிக் கெட்டாய்
சொல்லரு மபவ ருக்கஞ் சோரகீ யெங்ஙன் சேர்வாய். (கசு)

அறத்தினைப் பயக்குஞ் சாகை யந்தணர் குடிவந் தூற்று
மறத்தினை வலிவிற் கற்றாய் மாமிச மலைய மாகித்
திறத்தினின் மதுகை வாய்ந்த தீயருட் டலைமை கொண்டா
யிறத்தலைச் செய்யா தென்னே யிருக்கிறாய் பாவி பாவி. (கஎ)

என்றபற் பலவும் பன்ன வெழினுறு சவர னேடி
யன்றவன் சாணங் தாழ்ந்தே யையநீ யாள்க வேண்டு
நன்றல முற்று மாற்று நாயினே னவைபொ றுத்திங்
கின்றுநா னுய்வதற்கே யியம்புவாய் சூழ்ச்சியென்றான். (க௮)

வேதியர் விழுப்பத் துற்ற வேடுவ விளம்பக் கேணீ
யாதியி னோர்ந்த வூழி னருமையாற் சிறிது போத
நீதியிற் பயந்தா யிற்றை நின்மல னுன ஞானச்
சோதியைத் தரிசித் தேத்தத் துணையது யோக மாமே. (க௯)

யோகத்தி லுழக்கு முன்னர் யூகித்தங் கறியக் கேட்டி
யாகத்தி லுறுவ தாகு மைம்பொறி யடைவிற் சுற்று
மோகத்த புந்தி தன்னை முனமடக் குதலோ டென்றும்
போகத்தில் வேட்கை நூக்கும் புவியினை யயர்த்தல் வேண்டும்.

பின்னர்தத் துவத்தின் கூற்றைப் பிரித்திட விகிர்தந் தம்மை
யுன்னிநன் கோர்ந்து நாடி யுறுமிவை துணைக ளென்று
மின்னவற் றினுங்கும் வேறு விருப்பதொன் றுளது காண
வன்னதங் கான்மா வென்னு வரிதர னியதி யாகும். (உக)

அத்தகை யான்மா தேசி னுமல கத்துப் போன்று
நத்திடு மதனுன் ஞான்று நண்ணுசார் போத னுகி
யொத்திடு மலத்தைப் போக்க முன்னுவன் வேறு மொன்றைச்
சுத்தவப் பரமான் மாவைச் சொற்றிடிற் சோதி யாமே. (உஉ)

சோதியா வவிரு மந்தச் சுயம்புவைக் கூர்ச்ச நோக்கப்
பேதியா மூலம் வைகிப் பிறங்கிடு மூரிப் பாம்பை
வேதியா வனலைக் கொண்டு மெல்லென வெழுப்பிச் சென்னி
யாதியா மதியிற் றாக்கி யவண்சொரி யமுதந் தேக்கி. (உ௩)

கோடிய யுகங்க ளேனுங் குறுகிய நொடிப்போழ் தாக
நாடிய வோரொண் சித்தி நண்ணுகை வல்ய மாகத்
தேடிய யார்க்குங் கிட்டாத் திருவருட் டன்மை பெற்றுக்
கூடிய யோகத் தென்றுங் கொள்ளுவர் பெரிய ரென்றான். (உச)

என்றவன் சொற்ற வீத மிசைந்ததா ளாண்மை யாற்றி
யொன்றிய வகத்து ணூநல் லுயர்திரி பதகை வாசத்
தன்ஞெரு வாசிர் மத்தை யணியுற வகுத்து வேட
னன்றெனக் குணக்கு நோக்கி நாடின னியோகந் தன்னை. (உரு)

ஆயிரம் வற்ச ரங்க ளரியயோ கத்துக் கூடக்
காயம்வன் மீக மூடிக் கனத்ததங் கூக்க மாக
வாயதன் ஞாங்க ரால மனேகமா விழுது நாற்றுப்
பாயவிண் முற்று மொய்த்துப் பாவின நியக்கு ரோதம். (உசு)

தொன்மரன் மீது சாலத் துணையுட னண்ட சங்கள்
மன்னின தொகுதி யென்னு மாத்தின தடியி னூளுந்
துன்னின வயமா பாய்மா துடியடி யூக மாளி
மின்னிய விகர்த்த னன்வான் வெயிலணு வேனுமின்றே. (உஎ)

இவ்வண மீறி யோக மிவனுளுற் றிடுஞான் ஞென்றிற்
றிவ்விய மாட கத்தைத் திரிகிதந் திரிகண் மீட்டிச்
செவ்விய யாழை யேந்திச் சிலைமா முருகப் பாடு
நவ்வியின் மிக்க நல்ல நாரத முனிவ ரன்ருன். (உஅ)

சத்தியப் புவனம் போந்து சரோருகத் தவிசின் ஞாங்கர்
வித்தக வாக்காள் வாக்கின் வீற்றிருந் தருளும் வேத
கத்தனங் கிரியிற் ருழ்ந்து கைகுவித் தஞ்ச வித்துச்
சத்தவின் னிசையின் கானத் தௌத்தியஞ் செய்து நின்ருன்.

பாரதி கொழுந ஞேக்கிப் பண்ணிசை மிழற்றி நின்ற
நாரத முனிமே லோனை நலனுற வாசி கூறிச்
சீரதங் குற்ற விண்ணின் மண்ணினிற் சிறப்ப தான
நீரதி ரேகந் தானு நிகழ்ந்திடக் கண்ட துண்டோ. (ஙo)

என்றவே தாவின் முன்ன ரின்னிசை மகதி யாழோ
ஞென்றிய வியப்ப தென்று முயரிய வுலக வைப்பி
லின்ஞென் றுங் கண்டே னில்லை யினிவரும் விம்மிதங்க
ணன்றென நிகழ்வ துண்டே னூரதி தாச்செய் கென்ரு. (ஙக)

வேறு.

இசையேழில் வல்லநா ரதவறிந வென்மாற்ற நவில்வல் கேட்டி
வசையில்கோ தாவரியின் கூலத்துக் கௌதமனூர்மன்னி முன்னர்த்
திசைமகிழுஞ் சிவபூசை யேபுரிந்து வீற்றிருக்கும்வைக லாங்கு
நசையுடனே நாரணன்வந் தெதிர்போந்து பலவாறு நன்குசாவி.

முனிவாநீமிகவெய்த்தாயெத்தேயத்துழையிருந்துமுடுகிப்போந்தாய்
கனிவுடனேயெங்கெங்குத்தளிகளினைத்தரிசித்தாய்கதுமெனப்பாய்
நனிகுளிர்நீர்த்திர்த்தங்களெவ்வெவற்றிற்படிந்திட்டாய்நாளுமாங்கே
யினிதுறவேகண்டவிம்மிதங்கடமையென்பாலினிசைக்கென்றுனல்.

மன்னுமோரதிரேகங்களைகுன்றிலச்சுதனேவழுத்தக்கேண்மோ
துன்னுகூவிளமாதிமுறிபறித்துமேனியெலாந்துலங்கப்பூதி
மின்னவிரச்சண்ணித்துவானரங்களுன்கவைதாம்விமலன்றன்னைச்
சென்னியினுற்பாவிவலஞ்சூழ்போந்துவைகிடுமால்சிறக்கநாளும்.

இவ்விதமாக்கடுவன்கள்பஃறினமுஞ்சிவபூசையுஞற்றியாா
வவ்வதரிற்போந்தவனசரனெருவன்வலையெற்றியவைகடம்மை
யெவ்வமுறவேபிணித்துப்பாசத்தாலேயிறுக்கியேகுங்காலிற்
கவ்வியெழுந்தீயவனைநோக்கியொருமந்தியதுகழலுமன்றே.

எங்களினுனினக்குவருமாக்கமதுசிறிதேனுமில்லையில்லை
சங்கரன்றனின்மாலியக்கொண்டேயெம்மில்விற்சார்ந்தபின்ன
ரங்கதனைப்பருகியபின்குழவிகளுமுலையுண்ணுமவற்றையீன்று
தங்குறுமம்மனைமாருமுணுவுண்பர்சரதமிதுதயைசெய்யாயேல்.

வழிபார்ப்பர்பாணித்திங்கிருத்தலினுன்மிகவுயங்கிவல்சியின்றி
யழிந்திடுவொன்செய்வேமளியுறநீயெமைவிடுத்தியையவென்றுப்
பழிதொழில்செய்வனசரனுமனமிரங்கிநீத்தவனிற்பரிந்துபோந்தான்
கழிசெறிதாபரமொன்றிற்கவிநான்குமேயுறைந்துகளாயுந்தம்முள்.

இக்கும்பாவியின்வருமுதற்றிங்களாயிலகுமெழினன்னுளிற்
றக்கசிவநிசியென்றுமற்றைநாட்சிவலிங்கந்தனைப்பூசிக்கின்
மிக்கபுண்ணியமென்றுஞ்சின்முனிவரிக்கானில்விளம்பத்தேர்ந்தேம்
புக்கம்பாற்றுயருறுநாமென்செய்வமெனத்தம்முட்புகலக்கேட்டேன்.

என்றுரைத்தகவுதமன்சொல்லழகியநாரணன்செவியேற்றிறும்பூதுற்று
நன்றுநன்றுநாம்வல்லேபோந்தந்தக்காட்சியினைநாடுவாமென்
றன்றிருவருஞ்சென்றங்கம்பினுலற்றமுறுமவற்றைநோக்கி
வென்றியுறக்கடைக்கணித்துமாயவனக்கேதமதைவிலக்கினுனல்.

வலிமுகங்கள்வலியேற்றுவிளங்கிடலுஞ்சிவசிசியும்வந்துநேரப்
பொலிவுடனேயெழிற்கோதாவரிக்கூலநீராடிப்பூதிபூசி
மலிவாசக்கூவிளமாதியதளிர்கண்மிகப்பறித்துமகிழ்விஞேடு
புலியனைசேர்நின்மலனைச்சந்நிதியிற்பூசிக்கப்போந்தவன்றே.

முன்னரோசினகரத்தினுண்ணுழைந்துபொற்புதவைமூடிக்கொண்டு
பன்னரியசிவலிங்கநற்பூசைபுலத்தியன்றன்பண்ணுமேல்வை
முன்னதனிற்கிசகங்கண்முச்சாமம்பாணித்துமுனிவுவாய்ந்தங்
கன்னகதவம்பேர்த்துப்பூசைசெயச்சினகரத்துளணைந்தவன்றே.

புலத்தியனம்மற்கடங்கடமைநோக்கிமிகச்சினவிப்பூசைநாப்ப
ணலத்தலுறப்புரிந்ததனுனீவிரெலாம்வீந்திடுவீராகவென்று
வலத்தசாபம்பேசமுனிவரனையவைதெரிந்துமறுமைநீயுங்
குலத்துடனேயெந்தம்மால்மாய்வையெனக்கொடுமொழியைக்கூறிவீந்த

சிவபூசையிடையதனிற்கடுத்திட்டவின்னலினுற்சினமிக்கூறு
மலமுடையவரக்கர்குலவிராவணனுப்புலத்தியன்றனவனிப்போந்து
தவமியற்றிமனிதர்குரங்காதியனைமதிக்காமற்றக்கதேவ
ரெவராலுந்தபுதலுறுவரங்கள்பலபெற்றிலங்கையிருப்பானன்றே.

அத்தனையிலவ்வசுரன்வீதற்கேயிணையிலியாமரியநந்தி
வித்தகமாவழங்கியதோர்சாபத்தாற்சீதரனும்விளங்குஞானச்
சுத்தனெனமானிடனுக்கோசலத்துத்தசரதற்குச்சுதனுத்தோன்றி
யெத்தகையவிடுக்கணையுமேகளைந்தங்கியாவருக்குமினியனுவன்.

அந்நான்குபிலவங்கஞ்சின்னுளென்னுலகதனிலமர்ந்துவைகிக்
கன்னுடும்வாலிசுக்கிரீபனனுமந்தனங்கதனுத்தோன்றி
முன்னுளிற்பெற்றவுபகாரத்தாலிராகவற்குமுற்றுனேயம்
பன்னுளுங்கொண்டுதசக்கிரீவற்குமீளாதபகைஞராவர். (சரு)

என்னநான்முகன்கூறமிகப்பரவியஞ்சலித்தங்கினிதுநோக்கிப்
பன்னுமேழிசைக்குரியநாரதனேர்பனிவுடனேபரிந்துவாழ்த்தி
யன்னநாரணன்றனக்கங்கருங்கயிலையோம்புடைகொளண்ணனந்தி
சொன்னவச்சாபவகைதெள்ளுதலோடுரைத்தியெனத்தொகுப்பான்வேதன்.

பிருகுமுனிபுவனமனைத்தினும்போந்துதிரிதருநாட்பேர்வைகுண்ட
மருகினில்வந்தச்சுதனின்மந்திரத்துட்செல்லுதலுமாங்குகாத்த
கருடன்கண்டனன்முனியேயிற்றைஞான்றெம்மண்ணல்கமலக்கண்ணன்
றிருவுடனேசுரதலீலைக்கலவிவிழைகின்றான்செல்லேலென்றான்.

பிரதோடவமையத்துமகளிருடன்முயங்குதுற்பேதையோரை
யரகரசிவசிவகாவெனவ்வயினுங்கேட்டதில்லையச்சோவச்சோ
நரர்களுமிவ்வின்னலினைப்புரியார்கள்பலதேவர்நாடிமிந்த
வரமாயனயர்குவனேலவன்மதியையென்னவெனமதிக்கற்பாற்றே.

என்றுமனச்சீற்றங்கொண்டக்கணமேயப்பதம்விட்டிரிந்துபோந்து
மன்றலமொழிற்குமரிமணுளியுடனம்முதல்வன்வதிவதான
தொன்றுநீளராசலத்துத்துவிதியசம்புவைப்பணிந்துதுணைத்தாளேத்தி
யின்றொருசார்நேர்ந்தவொருவிபரீதம்விளம்புவல்யானேற்கவென்றே

இந்தவுலகடங்கலுமேசஞ்சாரமாச்சூழ்ந்தேனெவரும்பெம்மான்
சிந்தனையாச்சிவலிங்கநற்பூசைபேபுரியுஞ்செல்வமுற்றார்
வந்தபிரதோடத்திற்சுகிர்தமுறுமமையத்துவைகுண்டத்தே
நந்தனிலக்குமியோடுஞ்சையோகமேபுரிந்துநலம்விழைந்தான்.

இவ்வாறுபுரியுமவற்கென்னகதிவாய்ந்திடுமெற்கியம்புகென்ன
வவ்வார்த்தைகேட்டநந்தியம்பெருமானருள்புரிவனறிகேட்டி
தெவ்வோடவாற்றுமொருபிரதோடவமையத்திற்றெரிவையோடுஞ்
செவ்வேசெய்சிவபூசையுஞற்றுதுமுயங்கியதோர்சீதான்றான்.

மன்னியவொர்நரனுருவையேவாய்ந்துவையமதில்வாழ்தல்செய்வா
னன்னவன்றன்மனைவியினையரக்கனொருவனெடுத்தங்கடவிசெல்வா
னின்னனிலையோடுமஞர்மிகவுற்றங்குழன்றபினரிணையில்வேதம்
பன்னரியசிவலிங்கவர்ச்சனையால்வைகுந்தம்படர்வனன்றே. (௫௨)

அன்றியுமப்பிரதோடகாலந்திலெவரேனுமரியின்பேரை
வென்றியுறவேயுரைக்கின்ரகடைவரவ்வமையம்விமலற்கேயா
மென்றலுமேபெரிதுவந்துபிருகுமுனியெழினந்தியிணைபொற்றாளை
நன்றுநன்றெனப்பணிந்துமிகவாழ்த்திப்பிறவிடங்கண்ணினானால்

வேறு.

இன்னவிரா மன்காதை யியம்பிடலு மான்மகனை
யன்னநா ரதன்றாழ்ந்தங் காசியொடு மீண்டபின
ரென்னசெய்வ விச்சரித மெவர்க்கேனும் விளம்பேனே
லென்னுடைய சிரமதுதா னிரிந்திடுமோ லெனநெகிழ்ந்து. (௫௪)

அடவியினி லோர்புற்றை யாலவிருக் கத்தடியின்
றடமதனி லேநேர்ந்து தன்வாயை யவண்வைத்து
மடவானற் கலைவாணி மணவாளன் சொற்றதனை
யடைவாக வேபகர்ந்தங் கவனடைவு பெயர்ந்தனனால். (௫௫)

புற்றதனு ளேவைகும் புளிஞன்றவ நாரதன் சொல்
கற்றறிந்தான் வெளிவருமோர் காலமெணி வதிந்தனனா
லற்றைநா ளவன்யோகத் தணலதனான் மூவுலகி
னுற்றசரா சரமாய வொண்பொருள்க டந்தனவே. (௫௬)

இவன்றவத்திற் காற்றாமை யெல்லோரு மெண்கணன்முன்
தவவுலக மேநாடித் தாஞ்சாற்ற வவ்வெல்லை
யவன்விபுலை தனிலிழிந்தங் கடவியினி லேபோந்து
நவமிகுத்த மயன்றன்றா னண்ணுபுத ரொலாநாறி. (௫௭)

வன்மீகத் துள்ளுறைந்த வான்மீக மாதவநீ
யுன்மோனத் தியோகனி லுற்றதிது காறமையும்
பொன்மாகத் தமரரெலாம் புகழ்ந்துன்னை யேத்திடவே
மன்மேதி னிவயின்வந்து மகிழ்ந்தினிதிங் குறைவாயால். (௫௮)

என்றலுமவ் வேடவுரு விளிதொரீஇ முனிவானுக்
குன்றெனநீள் வன்மீகக் குவியலினின் றெதிர்போந்து
நின்றுபோ தன்றாளி னேர்பணிந்தங் கேயெழுந்து
நன்றுபல தோத்திரங்க ணலமுறவே வழுத்தினனால். (௫௯)

அயன்முனிவன் முகங்குறித்தங் காசிபல வேகழறி
யுயர்வுறுநல் லியாழ்க்கிழவ வுன்றனக்கிங் கேயுரைத்த
நயமுடைய சீர்க்காதை ஞாலமுற விரித்துரைத்துச்
சயமடைவா யென்றுசொலிச் சத்தியலோ கம்புக்கான். (சூ0)

அற்றைநாண் முதலாக வரியவான் மிகமுனிவன்
மற்றையோ கியரோடு மகிழ்வெய்தி யாழிருடி
சொற்றதோர் காதையினைச் சுவையினலங் காரமுடன்
கற்றவர்க ளெலாமகிழக் கட்டுரைத்து வாழ்பொழ்து. (சூக)

அந்தகனை வெரிக்கண்ட வரியமார்க் கண்டேயன்
வந்திடலு மெதிரோடி வந்தித்துப் பஃறாமு
முந்தியடி யுழைவீழ்ந்து முறையாக வேவழுத்தி
யெந்தையிவ ணெழுந்தருளு கென்றுருபீ டிகைநல்கி. (சூஉ)

எழுந்தருளச் செய்தபின னெதிரிருந்து சிவஞானக்
கொழுந்தெனவே யுறைகின்ற குணக்குன்றே யடியேன்றன்
றொழுந்தெய்வ மாவந்த துரியமே மாயையினி
லழுந்தியவென் றனையெடுத்தங் காதரிக்க வருபெரியோய். (சூங)

ஆயிரமா மாண்டளவு மாற்றியவென் யோகத்தாற்
பாயிருளைச் சீத்தெழூஉம் பகரெழுநா ழுவுலகும்
போயினதங் கேயுற்ற பொன்னுலக ரேமுதலோர்
நாயகமா மலரோற்கு நன்குரைக்க வவர்போந்து. (சூச)

வயப்புற்றி னின்றெழுப்பி வன்மீக முனியென்னு
வுயர்நாம மிட்டழைத்திட் டொருமகதி கரத்தேந்த
னயமுடனே சொற்றிட்ட நல்லிரா கவன்காதை
செயச்சொல்லிப் போயினன் றேவரீர் காணு கென்றான். (சூரு)

னோகத்தான் வருளுமனை நூறியநன் முனிசொல்வா
னுகத்தோ டுள்ளிருந்தங் கயுதயுக மாயுளுற்றும்
யோகத்தாற் கல்வியினு லூகித்த லோஞான
மூகத்தாற் கோடியுக முதிர்மலையா தியு முளவால். (சூசூ)

கோடியா யிரமாண்டு குறித்தயோ குற்றிடினு
நாடியே மகநூறு நலம்பெறவே யிழைத்திடினுந்
தேடிவா னவர்பூசை செய்திடினு மறைபல்ல
பாடியே புரியுமெங்கள் பரன்பூசைக் கொவ்விடுமோ. (சுஎ)

அரியபசுக் கதைகட்மை யாயிரமா யிரமாகத்
தெரிவுறவே பாடிடினுந் தேர்ந்தடைவ திலையொன்றுங்
கரியமிடற் றுக்கடவுட் கண்ணுதலாம் பதிசரிதம்
புரிபவருக் கேற்றவொரு புண்ணியந்தா னுண்டுகொலோ. (சுஅ)

குடங்கையினீ ருறக்கொண்டு கூவிளநற் றழையொன்றுற்
றடங்கலந்த சிவலிங்கந் தனைப்பூசை புரிபவரோ
மடங்கொன்று மறலிபய மகிதலத்தி லேயொரீஇ
நடங்குலவு நம்பரம னல்லடியைச் சாருவரால். (சுகூ)

எவரேனுஞ் சிவபூசை யியற்றுமே யூணயர்வார்
பவங்கோடிப் பிறப்பேற்றுப் பசியாந்தீப் பிணியுழன்றங்
கவமானத் துடனிறந்தங் கருநரகத் துள்ளழுந்தி
யவமேறுந் தீமைகளை யம்மம்ம வனுபவிப்பார். (எo)

மன்னுசிவ பூசையிலா மனையனைத்தும் புலைச்சேரி
யன்னவர்க ளுழையிருந்தங் காதரவாச் சலபான
மன்னமுத லயின்றவர்க ளாழுநர குழைக்கிடந்து
மன்னுபுலை யர்களாக மகிஞாங்கர்ப் பிறந்திடுவார். (எக)

பவமாற்றுந் திருநீறு பகாரிய வக்கமணி
யுவமான மற்றிலகு முயர்பஞ்சாக் கரவொண்மனு
தவமீயுஞ் சிவலிங்கத் தயாளுவினல் லரும்பூசை
புவனியினிற் புனையாரும் போற்றாரும் புலையர்களே. (எஉ)

கண்ணுதலார் சிவலிங்கங் காண்டலொடுங் காதலிப்போ
ரண்ணல்சா தனமாதி யன்புமிகப் பூண்டிடுவா
ரொண்ணரிய வடியவரை யெதிர்கொண்டங் குபசரிப்பார்
விண்ணவரும் போற்றிடவே விமலனடி மேவுவரால். (எங)

சங்கரனார் சிவலிங்கந் தன்பாலி லெஞ்ஞான்றும்
பொங்குவிழி நீர்சொரியப் பூசைபுரி யடியவரா
மங்களமா ரவர்வடிவை வண்மையுறத் தரிசிக்கி
னிங்குலகிற் சென்மவலை யிடைப்புக்கு வாழ்வர்கொலோ. (எச)

மறைநான்கும் புகல்பூதி மணியக்க மேபூண்டங்
கிறையவனை வில்லுலகத்தா னிறைநேர மாயிடினு
நறையாரு பூந்துடவை நண்ணுசிவத் தலநாடித்
தறைமீது பூசித்தார் தம்பேற்றைச் சாற்றரிதே. (எரு)

மூர்த்திதலந் தீர்த்தங்கண் முறையாக வேநாடிச்
சீர்த்தியுற வாங்காங்கே சிவலிங்கப் பெம்மானைக்
கீர்த்திபெறப் பூசித்தார் கேண்மையினைக் கொண்டவருந்
தீர்த்தரெனத் திகழ்வரெனத் தெய்வமறைச் சொலுமென்றான்.

வேறு.

மாதவமார்க்கண்டேயனிவ்வாறங்குரைத்திடலுமகிழ்ந்துபோற்றிச்
சீதமதிமுடித்தமுடிச்சிவபெருமான்றிருவருளிற்றேக்கிநாளு
மோதரியசீர்த்தியுறுமொண்முனிவவெனையாளவுவகைகொள்வா
யேதமுளேனென்செய்வலெனவிறைஞ்சிவான்மீகியியம்புகின்றான்.

ஐயவெனக்குன்கடைக்கணருட்பார்வைநல்கியெனையாதரிப்பாய்[னே
வெய்யதுயருறற்றிண்ணம்வெண்ணீறுங்கண்டிகையும்வெறுத்தேனந்தோ
துய்யசிவலிங்கவருச்சனைபென்றுமுளுற்றுதுயருழன்றேன்
செய்யவருந்தீர்த்தங்களாடிலனேதிருத்தளியுஞ்சேர்ந்திலேனே.

சிவனுருவாகியபஞ்சாக்கரமனுவையொருஞான்றுஞ்சிந்தியேனே
தவமாகுநின்மால்யவமுதமதைப்புசியாதுதவிர்வுற்றேனே
பவமாற்றுநம்முதல்வன்விழாப்பொலிவைத்தரிசியாப்பாவியானே
னவமானமறவெனைக்காத்தற்கிங்காஞ்சூட்சியினையறிகிலேனே.

யோகமதைச்சாதகமென்றெண்ணுதுசாத்தியமாயூகித்தேனே
மூகமதேஞானசோபானமெனவேயுன்னிமூகனானேன்
போகமொருவியநானேபெரியனெனவெவர்முன்னும்புகழ்ந்திட்டேனே
சேதகமெலாமொழிக்குறநற்பதிபோற்றேன்பசுக்கதையேசொல்லுகேனே.

இனியேனுமெளியனானிருக்கதனிலிருக்குநம்மிறைவற்கேற்ற
நனியருட்சீர்சிவலிங்கப்பூசையினையேயியற்றிநன்மையெய்தக்
கனிவுடையநினதுள்ளஞ்சிறிதென்பாலருளுடனேகசிதல்வேண்டு
முனிவரனேயெனமார்க்கண்டேயமாதவனடியின்முடிவைத்தானால்.

வான்மீகமாமுனிவனீயடையும்பேற்றினுக்குவகையைக்கேட்க
கான்மேவுமலர்க்கூந்தற்குழன்மடவாளொருஞான்றங்கர்காணச்சில
வான்வெரிநில்வருமெங்களரற்போற்றியமரரெலாமாக்கமுற்று
றூன்வடிவநிலத்தவருஞ்சிவபூசையேயுஞற்றியுயர்வுற்றாரால். (அஉ)

சிவலிங்கப்பூசையொன்றேயிம்மைக்குமம்மைக்குஞ்சீர்த்தியாகுஞ்
சிவசின்னமிலைச்சுதலேயாக்கத்தெலாஞ்சிறந்தசெல்வமாமால்
சிவனடியார்தமைச்சிவமாநனியுன்னிப்பணிவதுவேசெம்மைஞான்றுஞ்
சிவகதைகடமையெழுதிவாசித்துச்செப்புதலேசெப்பங்காணே.

ஆவினொருவடிவனைத்தும்பாலதுவாநிறைவாகவமைந்திட்டாலுந்
தாவுமதன்செருத்தலுறுஞ்சுரையிடத்துச்சுரந்துவருந்தன்மைமான
மேவுமொருமுதல்வன்றான்சருவவியாபகனாகிவிளங்குற்றானுஞ்
சீவர்பொருட்டொவ்வொருநற்றலங்களிருந்தருள்சுரந்துசிறந்துவாழ்வன்.

அத்தகையதிருத்தலங்களுட்புக்குமுறையாகவரனைநாடிப்
பத்தியுறச்சிவபூசையாதிசெயவொன்றொருபான்பலனையீயுஞ்
சித்திபெறக்காசினியைச்சவ்வியமாவருவாயேற்சேண்வாக்கங்க
ணித்தலத்திலிருப்பலெனவெவண்கேட்பையவ்வுழைவாழிறைவன்றன்னை.

ஆகமத்துச்சொற்றாங்குநீயேத்திப்பூசித்தங்கணுகுவாயேற்
றேகத்தைவாய்ந்ததனாலாயபயனனைத்துமுறச்செவ்வனுற்றுச்
சோகத்தைத்தவிர்க்குமொருபரஞானமுற்றிடலாஞ்சோர்கலென்றங்
கேகத்தையேபணியுமிணையின்மார்க்கண்டேயனிசைத்துப்போனான்.

வான்மீகமுனிவரனுமனமகிழ்ந்திட்டங்ஙனமேவலைமேவித்
தான்ஞாலமனைத்தினையும்பிரதக்கணஞ்சூழ்ந்ததறுவாயோர்சார்
வான்மேவுமசரீரிகேட்டலுமானந்தமுடன்மகிழ்வுபூத்து
நான்பெற்றேன்பெற்றேனல்விபவமெலாமெனப்பாடிநாடினானால்.

அதுதக்கணத்திசையாக்கிரனதியான்வளங்களழகின்மேவக்
கதுமெனவேமணியாதிகொழிக்குமலைசெறிகின்றகடலின்கூலம்[ன்
விதுமுடியோன்றிருமயிலைக் கொருகடிகையெல்லையினில்விளங்கும்வைப்பி
மதுகரமார்வன்னிமரனடியதனின்வேதபுரிவரனைக்கண்டான். (அஅ)

கண்டவுடனாடினானாடினான்பாடினான்கணக்கில்லாது
தண்டமெனவீழ்ந்தெழுந்துதொழுதுபுலனைந்தறுத்ததக்கார்போற்று
மண்டர்நாயகவென்றானடியேனைக்காவாதிங்களவில்கால
மண்டனிலேயெங்கிருந்தாயிக்கணத்தோதிருவருடான்வந்ததென்றான்.

இவ்வாறங்காராமைமிகப்பெருகவேயேத்தியிறைஞ்சிப்போற்றிச்
செவ்வேசென்றருநீரினுறவாடிப்புலர்வெண்டேய்ச்சீலைசூடித்
துவ்வானசுடர்ப்பூதியெண்ணிடத்துமாகமங்கள்சொற்றாங்கிட்டாங்
கவ்வாதிவிழிகளெனுமக்கமணியாங்காங்கணன்பிற்பூண்டு. (கூ0)

செய்யபதுமாசனத்திலேயிருந்தங்கனுட்டானஞ்செவ்வேயாற்றித்
துய்யநாற்சுத்திகளைச்செய்திதயப்பூசையினைத்துலங்கச்செய்து
பையவெளிப்பூசனையைப்புரிதற்குமிருசுத்திபரிவாயுன்னி
யையனைநம்முடையவனையாசனத்திலெழுந்தருள்வித்தருக்கியங்கள்.

தூபதீபம்புரிந்துபின்னர்நின்மாலியநற்சுத்திகண்டு
சோபமறவட்டபுட்பஞ்சாத்திமணவபிடேகஞ்சுகமாவாட்டி
மாபதமாங்கலையுடனேவாதனநற்பணிகலனைவயக்குவித்துத்
தூபதுமமாதியொடுவிரைசேர்த்திநிவேதனமுந்தொடர்பினூட்டி.

பதினாறுபசாரம்புரிந்தருகினட்சதையும்பரிவினிட்டுப்
பதிசகத்திரத்தாயவருச்சனைகட்பத்திமையிற்பகர்ந்துபல்ல
துதிபலவுநன்காற்றிக்கண்ணீர்கம்பலையுமுறத்தோத்தரித்து
நதியணியெம்வேதபுரிநாதனையேதியானித்துநாடும்போது. (கூங)

மான்மழூநற்கறைமிடறுமும்மைவிழிநாற்புயங்கண்மலர்ச்சிகூர
வான்வெரிநினொருஞாங்கருமையம்மையழகுசெயவைங்கரத்தோன்
வேன்முருகன்பாங்குறமாகத்தினின்றிழிந்துவிபுலங்காணக்
கான்மருவுவேதபுரிக்கேத்திரமுற்றிருந்தானற்கருணைமூர்த்தி. (கூச)

அரியொருதண்ணுமையேந்தித் தனுதனுவெனத்தாளவமைவுசெய்ய
விரிமலரோன்கஞ்சனத்தாற்கணீர்கணீரெனவொலியைவிளக்குவிக்க
வரிசிளையுமியாழிசையைநாரதகிம்புருடர்செவிவயின்மடுப்பத்
தெரிதருவிண்மேனகையூர்வசியரம்பையிலோர்த்தமையுஞ்செய்யநட்டம்.

நந்துதியசம்புமணிவேத்திரத்திண்படைதாங்கிநாப்பணின்று
பந்திபந்தியாநிலவத்தேவர்முனிவரர்கடமைபகுத்தல்செய்தா
னிந்தவிதமீனரவிப்பௌர்ணமியிற்றரிசித்தங்கின்புவாய்ந்து
சந்ததம்வான்மீகமுனிமுனநின்றுதோத்திரங்கள்சாற்றினுனல்.

மங்களநாயகபோற்றிமங்கையொருபாலமருமணாளபோற்றி
கங்கைசெஞ்சடையதனிற்கலைமதியம்பூண்டிலகுகபாலபோற்றி
யங்கையொளிர்மான்மழுமூவிலைபாசமணிந்தருளுமரனேபோற்றி
பங்கயன்மான்முதலோர்கள்கழல்விழையப்பார்த்தபரம்பரமபோற்றி.

கலியாணசுந்தரநற்கவித்தாமந்தோளணிமுக்கண்ணபோற்றி
வலிவாயகொடியவிடமணிமிடற்றிலேயமர்ந்தவரனேபோற்றி
பொலிபலவாங்குண்டலிகவாபரணமாயிலகப்பூண்டாய்போற்றி
மலியுமுன்பதத்தன்பரிதயத்திலெஞ்ஞான்றும்வாழ்வாய்போற்றி.

எனப்போற்றிமீதுமமலன்றகைமைநுவன்றிடுவனேழையேன்றான்
மனத்தானும்வாக்கானுநின்பெருமையெடுத்தறைந்துமதிக்கற்பாற்றே
வுனைத்தானுமித்தகையனெனவேயுவமித்தங்குனைப்பாரியாரோ
தினைத்தானுமென்னுவேயுன்னுமஞ்சிறிதுணைத்துஞ்சிறந்ததன்றே.

அறிந்துமறியாதியற்றுநவையனைத்துஞ்பொறுத்திஞ்ஞான்றுளவேண்டுஞ்
செறிந்தநின்றனடிக்கமலச்செழுமலரினேழைமனச்சிறுசுரும்பர்
மறிந்திடாநனிவிருப்பமுண்ணுழைந்துசுலவுவதான்மகிழ்விணேடு
முறிந்துநிதமயர்பாக்குநின்னருளாம்பிரசமதிங்குதவல்வேண்டும்.

இந்தவிதம்வான்மீகமுனியோகிதோத்தரிக்கவிளநற்கூனற்
சந்திரசேகரப்பெருமான்புன்முறுவலுறப்பூத்துச்சார்ந்தவன்பிற்
புந்தியுளநன்முனியேநின்றெளத்தியங்கேட்டுப்பூரித்திட்டேம்
விந்தையுறநினக்குவேண்டியவரங்களீந்திடுவேம்விளம்பாயென்ன.

உடலுமுயிரும்பொருளுமெனதன்றேயுனதென்பதுண்மையன்றே
மிடல்விடம்பொருத்தியிமையவரிடுக்கண்களைந்தருளும்விமலஞான
மடர்தருநின்றாளிணைக்கண்மெய்யடியருடன்கூடியன்புமேவக்
கடலுலகிலெஞ்ஞான்றுமுனைப்பூசித்தேவாழக்கருணைகூர்வாய்.

மன்றல்பெறுமிப்பதியென்னுமத்தானெந்நாளும்வழங்கவேண்டுந்
துன்றியவிக்கேத்திரத்திற்றேன்றுசராசரமனைத்துந்தூயமோக்கத்
தென்றுமடைந்திடவுமையோடிருந்திடற்குத்தண்ணளிசானிசைதல்வேண்
மொன்றியநின்கபர்த்தநீரிவண்டீர்த்தமாயிலகவுதவல்வேண்டும்[டும்

என்றுபலவரங்கடமைக்கேட்டுமிகக்குழைந்திட்டவிருடிதன்னைக்
கொன்றைவேணியனோக்கியருள்புரிவன்முனிவரநீகூறும்வண்ண
மின்றுனக்குவழங்கினமிங்கைவகையாந்தீர்த்தங்களின்மேனசோன்றி
வென்றியுறக்கோடீரவாநதியினைந்திவலைவீசினேமால். (௧0௪)

சன்மநாசனிகுணக்குங்கன்மநாசனிதெற்குஞ்சனனந்தோறு
மின்னறராப்பாபநாசனிகுடக்குஞானதாயினியுதக்கு
முன்னியசீர்மோட்சதாயினிநனந்தலைக்கண்ணுமோங்கத்தீர்த்த
மன்னியவிக்கேத்திரலளவில்விபுதங்களொடும்வயங்காநிற்கும்.

பன்குளநன்மீனரவிபௌர்ணமியாந்திதிகளிவைபயன்பெற்றோங்க
விங்கெனதுவிழாப்பொலிவைத்தரிசிக்கவருமடியரெவர்க்குமாக்கஞ்
சங்கவளவளித்திடுவேம்புத்திராதியபேறுந்தருவலவீற
யெங்கணுமுற்றவரேத்தப்புவியாளுமாசரெனவியற்றுவமால்.

அன்னவற்றுண்ஞானதாயினியென்னுந்தீர்த்தநீரமர்ந்தங்காடிப்
பன்னியவேதாகமத்துமுடிபாகவேயிலகும்பான்மைத்தான
துன்னுபதிபசுபாசப்பொருளுண்மைமுற்றறிந்துதுளங்கப்பெற்றே
யிந்நகரின்மேற்றிசையிலெஞ்ஞான்றுமிருப்பமைகவின்பம்வாய்ந்தே.

எனக்கமலன்வழிவருவான்மீகமுனிக்கருள்சுரந்தங்கிமயம்பூந்த
கனக்குமுலையுமையுடனேயருட்குறியாஞ்சிவலிங்கங்கரந்துற்றானல்
வனக்கோவின்ஞாங்கர்வருநம்பாமனெனச்சூதன்வகுத்துரைத்தான்
மனக்கோபமறுத்தநைமிசாரணியமுனிவர்நனிமகிழ்வுகூர்வான்.

வான்மீகர் பூசைபுரிபடல முற்றிற்று.

ஆகச்செய்யுள். ௩௭௨.

# இரட்சசுசென்மநாசப்படலம்.

அம்புயப் பொகுட்டின் மேவி யரசுவீற் றிருக்குஞ் செய்ய
வம்பலர் மலரோன் றன்வாய் வந்தகோட் டாவி தன்னி
லும்பரும் பனிப்புக் கொள்வா னுயரிரட் சசுவென் றோது
றும்பெயர் பூண்டு மந்தி யுருக்கொள வுதித்துத் தந்தை (க)

சத்திய புவன முற்றுஞ் சஞ்சரித் துறுவ ளாரிற்
றத்திய விலதை மொய்த்த தருப்பல கனுலுங் கானி
னித்தியங் கனிவாய் மேடு நிரம்பவே யயின்று தேக்கி
வித்தகச் சாம்பு வந்தன் வியனெம்பி யெனவாழ்ந் திட்டான். (உ)

நாமக டனத்தி னுளு நல்லுரப் புயம ழுத்துந்
தாமஙக் கிழவ னோர்நாட் சத்திய வுலகத் தோர்சார்
காமர்மிக் குற்ற நல்ல கலியாண தீர்த்த மொன்று
பூமரம் பொலிவு கூரப் புத்தய மகழ்ந்து நோக்கி. (ங)

இச்சர சுழையி லேவ ரோனுநீ ராடி னோர்கான்
மெச்சிடும் வனப்பு வாய்ந்து விபுதரும் வேட்ட முற்ற
யிச்சைமா னினிய ராகி யியங்குவ றொன்னுச் சூளோன்
றச்சம துறவே சொற்றங் கவனுல கமர்ந்தி ருந்தான். (ச)

அத்தட ஞாங்க ரோங்கு மருங்கனி யகமத் தும்பர்
சுத்தநற் சுகம தொன்று சுகமுட னிருக்கக் கண்டாங்
கித்தைநா னெற்று வேனென் றிரட்சசு தாவி யெக்க
வத்தரு ணத்துக் கம்பித் ததுபறந் திட்ட தன்றே. (ரு)

கிள்ளைவிண் ணேடிப் போகக் கிளைகெழு நுனியி னின்றுந்
தெள்ளிய தாங்க னேக்கித் தெரிந்ததன் னீழல் கண்டே
யெள்ளியிங் கென்னே யென்னே யென்னையே வொருவனெத்திங்
குள்ளமர்ந் துள்ளா னுன்செ யுறுதொறு வுஞ்செய் கின்றுன். (சு)

இவனைநான் கொல்ல கில்லா தியங்குறே னென்னத் தாவிச்
சவதமுற் றிலஞ்சி யத்துச் சடக்கெனப் பாய்ந்து நேடி
யெவனையுங் காணு தெய்த்தங் கெழிற்கனா மீதி லேறித்
துவரிதழ்த் துணைநற் கொங்கைத் தோகையிற் றற்காண்டுற்றே.

இன்னநீர் நிலையி லுற்ரு னென்னரு மெய்யைக் கவ்வித்
தன்னிக ழுருவை யெற்குத் தந்துதன் னுருக்க ரந்தா
னென்னயான் செய்வ லென்றங் கேங்கியே பாங்க ருற்ற
வுன்னத நிகேத னத்து ளுற்றயா மனையைத் தாழ்ந்து. (அ)

பன்னினன் றுதிக ணீளப் பணிந்தனன் பகரோண் டோளி
யென்னநிற் கிங்கு வேட்கை யியம்புக வொல்லை யென்னு
வன்னையே சிறுக்கன் வாய்ந்த வணங்கமை யுருவை மாற்றி
யென்னையாட் கொள்ள வேண்டு மிணையடிக் கமலம் போற்றி. (கூ)

என்றுகை கூப்பி யேத்து மிரட்சகைச் சூரி நேர்ந்தே
யின்றுனக் கேய்ந்த விந்த விளம்பிடித் தோற்ற நுந்தை
யொன்றுநல் விரகா லன்றி யொருவுறு தங்நாட் காறு
நன்றுபெண் ணுணி னின்மெய் நவம்பெறு மயனந் தோறும். (கo)

கொண்டுநீ சரித்தல் செய்க வெனவீரி கூறிப் போக
வண்டுமென் வடிவை மாற்றி யற்றம துறுத்த கைய
னண்டர்த நாட்டை நாடி யவன்கரந் திருப்ப னென்னு
வெண்டிசை முடிய றேட விரட்சகு முன்னி னுளால். (கக)

பொற்பினுக் கிணையே தென்னும் பொலனிழை முற்றும் பூத்த
விற்புரு வான மாதர் வியக்தபி னவத்தி னுடக்
கற்புடைச் சசிநற் றேவி கவானிடை யமர்ந்து சாரக்
கற்பகத் தடியி னீழற் கவின்மணிக் காந்தி வீசும். (கஉ)

ஏற்றம துற்ற சீய விரும்பிடர்த் தவிசின் ஞாங்கர்
வீற்றிருந் தருளும் போகி வியனவை நடுவட் போந்தங்
காற்றரு நிருத்த முற்று மமைதியிற் கண்டு நெஞ்சி
லூற்றெனு வன்பு வார வுயரிரட் சகுகின் றுளால். (கந)

இங்கிவ ணின்று ளியாரென் றெழிற்புரு கூத னோக்கி
மங்குன்மா வளக மென்கோ வளர்மதி வதன மென்கோ
சங்குநீண் மிடற தென்கோ தளவுவெண் ணகைய தென்கோ
பங்கயந் தனங்க ளென்கோ பதமிரு கஞ்ச மென்கோ. (௧௪)

என்றரு கின்னே யோடி யிருகரந் தாவிப் பற்றித்
தன்றனி யுறையுட் கொண்டு தனித்தமஞ் சத்திற் சேர்த்தங்
கன்றுதன் கலவை மார்பி லணிமுலை ஞெமுங்கப் புல்லக்
குன்றென வுறழும் வாலிக் குரங்கினைப் பெற்று ளன்றே. (௧௫)

சின்னாளின் பிற்றை யோர்நாள் செங்கதிர்ச் செல்வ னோக்கி
முன்னாகத் தோன்று மிந்த மொய்குழ லாளை மான
வெந்நாளுங் கண்டே னில்லை யெவ்வயி னுறைவா ளென்னாப்
பின்னாகப் பையச் சென்று பெய்தொடி மலர்க்கை பற்றி. (௧௬)

தறையிருள் காத்தா லோச்சுந் தக்கவா தபனும் வானத்
துறைதரு மதியு நேர்ந்தங் கொன்றுறச் சந்தித் தென்னாக்
கறையறு முகத்தின் முத்தங் கனிவுட னீந்து காந்தி
நிறைமணி நிலவு மொற்றை நேமியந் தேரிற் சேர்த்து. (௧௭)

விசயமண் டலத்தி லொற்றை விநாடியிற் போந்தங் குற்ற
வசதியிற் றங்கிப் பூண்ட வம்பினைப் பீறித் தோன்றுங்
குசவிணைக் குழையப் புல்லக் குலவுசுக் கிரீவற் பெற்றுக்
கிசவடி நோக மற்றைக் கிளர்சுரர் லோக முற்றாள். (௧௮)

இவ்வண மிங்கு மங்கு மிரட்சசு சூர்த்து லாவி
நவ்வியங் கண்ணி வாணி நாயகன் றானு மோர்நாள்
செவ்விய தன்வா யான்முற் செய்தகொட் டாவி மாட்டுத்
தெவ்வற வந்தா னியாண்டுச் சேர்ந்தன னென்னாச் சூழ்ந்து. (௧௯)

அறிவினிற் கூர்ந்து முன்னி யவனிலை நன்னர்த் தேர்ந்து
செறிகுரற் றிவவு வாய்ந்த திப்பிய மகதி தாங்கிப்
பொறிபுலன் யாவு மந்தப் புந்தியின் வயத்த தாக
நெறியொடு மீட்ட வல்ல நீண்முனி வரனைக் கூவி. (௨0)

கொட்டாவி யூடு போந்த குமரனென் னிளஞ்சி றுக்கன்
கட்டான வென்சூள் கொண்ட கலியாண தீர்த்த மூழ்கி
மட்டார்ந்த குழலி யாகி வானுல கியங்கி வைவான்
கட்டான மிடற்றைப் பற்றிக் கடுகெனக் கொண்டி வர்ந்து. (உக)

நான்மகிழ்ந் தேத்தக் கோடி நலன்பல பெற்றங் குய்ந்த
வான்மியூர் வைப்பு நாடி வளர்சன்ம நாச னிப்போர்த்
தேன்மலி தீர்த்தத் தாடு சேடுற வாட்டு வித்துப்
பான்மதிப்பரமற்போற்றிப்பழையதோருருச்செய்விப்பாய். (உஉ)

என்றலு நார தன்று னெங்கணுந் துருவி நேடி
யென்றுமண் டலத்தைச் சூழு மிந்துவின் வட்டணைக்கு
ளன்றவ னுறைதனைக்குற் றல்ரவன் சொற்ற வெல்லா
நன்றவ னெடுத்துக் கூறி நானிலம் வந்து நண்ணி. (உ௩)

இருவரும் வதிவுற் றேகி யெழிற்றிரு வான்மி யூரின்
மருவருஞ் சன்ம நாச வாவியிற் படிந்த வேல்வை
யொருவரு மணங்கு ரூப மொழிந்திடக் குதூக லித்தங்
கிருவகைப் பயனு முற்றே விரட்சசு மிகப்பூ ரித்து. (உ௪)

அதிசய மிஃதா மென்றங் கருங்கனா மீதி லேறி
நிதிநிசர் பாவின் வண்ண னீடுமா லயமே தோன்றப்
பதியிதோ வந்திங் குற்றுன் பழவினை பாற்ற வென்னுக்
கதுமென வீழ்ந்து தாழ்ந்து கைகுவித் தஞ்ச லித்தே. (உ௫)

உலகநா யகனே போற்றி யும்பர்தம் பிரானே போற்றி
யிலகுமான் கணிச்சி யேந்து மிணைமலர்க் கரத்தாய்போற்றி
குலவிய வருந்த வத்தர் குறைதவி ரொந்தாய் போற்றி
யலகில்சீ ரைய போற்றி யண்ணலே போற்றி போற்றி. (உ௬)

மங்கைநா யகனே போற்றி மறைமுதற் பொருளே போற்றி
திங்களும் பணியும் வைகுந் திகழ்சடை யாள போற்றி
பொங்குவெண் டலைய ணிந்த புண்ணிய முதலே போற்றி
சங்கரா போற்றி போற்றி சதாசிவ போற்றி போற்றி. (உ௭)

அம்புய மலர்வா ழெந்தை யாதியர் தலைவா போற்றி
வம்பல ரிமய வல்லி வாமபா கத்தாய் போற்றி
நம்பிடு மறிஞ ருள்ள நளினமீ துறைவாய் போற்றி
யெம்பரம் பரனே போற்றி யீசனே போற்றி போற்றி. (உஅ)

எண்ணருந் தோத்தி ரங்க ளிரட்சசு போற்றிச் செய்து
நண்ணிய முனிபி றக்கு நாதமேற் போந்து வேதப்
பண்ணவன் றிருப்பணிந்து பண்டையின் வாழ்ந்தா னென்னு
வண்ணனற் றூதன் சொற்று னருந்தவர் தமக்கு மாதோ. (உகூ)

இரட்சசுசென்மநாசப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் - ௬0க.

---

# பார்த்தசாரதி பாபநாசப் படலம்.

பொங்கரி வண்டினம் புரியுடைத் திணர்மது பூரித் துண்ணும்
பங்கய நாண்மல ருந்தியிற் போதனைப் பண்பிற் றந்து
சங்கணி சக்கரம் வாள்சிலை தண்டமுஞ் சார்பி னேந்தி
யங்கத வணிமிசை யலைகட லறிதுயி லார்ந்த வண்ணல். (க)

குழவிவெண் மதியினைப் புறங்கொளும் வாணுதல் குலவு மின்னார்
மழலைமென் கிளவியை மருதமர் கிளிசொல மகிழ்வி னூட்டி
முழவுக ளியமுறத் தாளமொ டுறுநட முறையிற் செய்யும்
விழவுள வீதியின் வடமது ணாப்பதி விளங்க ளுான்றும். (உ)

எழில்வசு தேவனுக் குயிரன மனையளா யின்பு வாய்ந்த
பழிதபு தேவகி மணிவயி றெளியுறப் பண்பிற் றேன்றிப்
பொழிதரு பாறயிர் நிறையுமாய்ப் பாடியிற் பொற்பு மிக்கத்
தொழிலுடை நந்தன சோதையின் மனைவளர் சூனு வானுன். (௩)

நந்தனன் மனையுழை வதிதரு நறுநுத லுரோணி யின்பொன்
னந்தனை யாவிலை யனவுத ரத்திடை யழகு மேவச்
செந்தளி ருருவென வந்தொளிர் மேனி திகழத் தோன்றி
யுந்திடு மொருபல ராமனொ டனுதின முவந்தங் காடி. (௪)

இருட்டின னெனவொரு பெயர்கொடு பாடியிற் கீர்த்தி வாய்ந்து
தெருட்டின னனையயன் முதலிய யாரையுந் திகழ்தன் மாமன்
மருட்டியங் குய்த்திடு மிகவலி யுறப்பெறு மல்லர் தம்மை
யுருட்டின னுடல்கள் பற்பல வாற்றின னும்ப ரார்ப்ப. (௫)

கண்டவ ருளமீத் தெருமரக் கவினுடன் கணைநேர் நோக்கு
வெண்டள வரும்புறழ் மென்னகைப் பூதனை விரவ நோக்கிப்
புண்டரி கம்புரை வாயுற வெம்முலை பொற்பின் வைத்தங்
குண்டனன் பாலுமங் கவளுயி ருஞ்செல வுலகமுண்டோன். (௬)

தொட்டிலயர்வொடுந்துயில்கொளுஉச்செவ்வி திற்றுணைத்தாணீட்டி
யெட்டியங் குதைதரச் சகடம தருந்துக ளென்னப் போகக்
கட்டிவிண் வளிசுழ லதரொரு வவுணனுங் கடிதன் றேகத்
துட்டன திருவிழி பிதிருற நிலமிசைத் தொலைத்திட் டானால். (௭)

பாடியி லாயர்கள் மகிழ்தரத் தவழுதல் பண்பிற் செய்து
நாடிமண் ணிணையளி யுண்டிட வசோதையு நன்கு நோக்கி
யோடிவந் திதுதொழில் செய்திட லெனக்குணி லோச்சு மேல்வை
பாடியில் வாய்திறந் தழுதனன் கண்டனள் பார்விண் முற்றும்.

மறந்தன ளெடுத்தனள் மார்பினி லணைத்தனள் மகிழ்வு மிக்குச்
சிறந்தநல் விழிவரு நீரினை நீக்கினள் செப்பி னெக்கும்
பறந்தவண் முலையினை யூட்டின ளழுகையைப் பண்பின் மாற்றித்
துறந்தன டயிராம தித்திடும் வினையினிற் றொடுவெண் டார்ப்ப.

பாறதி யிழுதினைத் தன்னக மயின்றுளி பயந்த வஞ்ஞை
சீறுவ ளென்றெணி யயலவர் மனைதொறுஞ் சிக்கென் றோடி
யேறுவன் ஞான்றிடு முறியினைத் தாவியங் கெட்டா தாகி
ஆறுசெய் திடுவனற் குழிசியைக் கல்லினி லுரன்மீ தெல்கி. (௧௦)

இவ்வணம் புரிபவன் றனையுலூ கலனுட னிறுக்க யாத்துச்
செவ்வண வாய்ச்சியும் வாய்மடித் துறுக்கியே சிறிது நீங்கக்
கவ்விய வுரலுடன் மருதிடைத் தவழுறக் கரிசாய்ந் தன்ன
வவ்விடு மரனெழிர்ந் திரிந்துமுன் வடிவினை யடைந்த வன்றே.

வனந்தனிற் கன்றுருக் கொண்டொரு நிசிசரன் வற்சலத்தி
னனந்தலை யொருவரு மறியொணு வகையுற நன்கு தூக்கித்
தினந்தின மழகுறப் புகழுடன் வளர்தரு மலர்ச்சேய் கண்ண
னினந்தரு விளங்கனி யுதிர்த்தன னெறிந்தன னிரிந்தா னன்றே.

மானவண் களியினஞ் செறிவுற நிறைதரு மலர்த்த டத்தோர்
தானவன் சுலவுறு குருகென வுருக்கொடு தனித்துப் போந்தங்
கானதின் பிறகுறு கண்ணனைத் துய்த்திட வதனின் வாயை
யூனமுற் றிடமலர்க் கரத்தினி லீர்த்தவ னுயிர்கொண் டானல்.

மலைசெறி வினிலொரு நிருதன்வெம் பணமென மலிநஞ் சேய்ந்து
கொலைநிறை பகுவா யுடனுற முழையெனக் குழக னுன்னித்
தலையினூ டுழைந்தத னுடலினை யீர்க்கவுந் தன்னே ரற்ற
கலைபயி லுருவெனச் சாபம தொருவிநற் கதிசேர்ந் திட்டான்.

தாதலை யளிகுல மாடல்செய் திசைபுரி தவிச தென்னுப்
போதலர் மேவிடு தமனியன் பாடியிற் பொலிக துப்பை
மேதகு சிறுவரா விழைவொடு கவர்ந்திட மிடைகுல் லைத்தார்ச்
சீதரன் பண்டைய படிவகுத் திட்டனன் றிகைக்க வேதன். (கரு)

யமுனைநற் கரையதி லானிரா காத்திடு மாய ரீட்டக்
குமரர்க ளொருமடு நீர்குடித் தொழிதரக் கோதில் வாசங்
கமழ்தரு துளவணி மாயவ னக்கணங் கடைக்க ணித்துத்
தமவிட மொருவுற வெவரையுங் காத்தனன் றபுத நீர்த்தே. (கசு)

அத்தட நாப்பணிற் கன்னிய ரவங்களொ டடர்ந்து சூழ
நித்தமு முறைதரு கடுபெறு காளிய னீண்ப டத்து
வைத்தல ரடியினை நடஞ்செய வயர்வுறு மம்மர் நோக்கி
யொத்தபெண் ணரவின மிரந்திட விடுத்தன னேதந் தன்னில்.

இத்தக வியந்தமை யொற்றரிற் றெரிதா விசைகொ ணந்தன்
சுத்தநற் சேயினைப் பரிவுடற் கண்ணுறத் துறையி னேகத்
தத்தழ லுறுகணஞ் சுற்றிவெய் தியற்றிடச் சலச நாப
னத்தணங் கியாவையு முண்டன னவையிற் றடைக்குமா போல்.

தினந்தினந் தன்னொடும் பற்பல வாடல்செய் சிறும காரை
வனந்தனி லொருபொழு தழலுற வளைதரு மம்மர்க் காணாத்
துளவனற் படவிகை துயல்வரு மார்புறத் தோன்று கண்ண
னுளமகி ழுடனழல் பொருக்கென நுகர்ந்தன னும்பர் மெச்ச.

விரைகமழ் மலர்செறி குழலசை தொறுவியர் விறலி மார்கண்
முருகவிழ் நறுதுணர் மரைநிறை மடுவயின் மொய்த்து நீழன்
மருவுதன் கரையிடை மணிக்கலன் மேகலை மகிழ்வின் வைத்துத்
தருபுனன் மூழ்கினர் விரைதிமிர்ந் தாடினர் தண்ணி ரோச்சி.(உ0)

அவ்வம யந்தனிற் கரைதனின் மேவிய வாடை யாதி
செவ்விய குருமணி யல்குனற் றோகையர் தேரு வண்ண
மவ்வயி னுயரிய சினைசெறி யெழிற்குருந் தகமத் தும்பர்
கவ்விகன் கேறினன் கருணையங் கடனிகர் கரிய கண்ணன். (உக)

கள்ளவெம் முடைக ளீகென விரந்திடக் காந்தை மீர்நீர்
வெள்ளம தலைதரு கரையிடை வந்தெனை வேண்டி னுங்கட்
குள்ளபொன் னுடையைத் தருகுவ னென்றன னெப்பி லாத
தெள்ளியவமைக்குழல்வைத்துநன்கிசைசெயுஞ்செவ்வாயண்ணல்.

கரைவயின் போந்துதம் படவர வல்குலைக் கரத்தாற் பொத்தி
விரைகமழ் குழைபல கொண்டரை மூடி விழைவின் வேண்ட
சிரசினி லஞ்சலி குவித்தவர்க் கேகலை சேர்த்த போழ்து
சரசநற் காமமுஞ் சேர்த்தன னுயர்தந் தைய லோர்பால். (உரு)

கலையரை யுடுத்தினர் கண்களுக் கஞ்சனங் காணத்தீட்டி
முலைகளில் விரைகமழ் குங்குமத் தேய்வைமேன் முழுதுமப்பித்
தலைமயிர் புலர்த்தியொற் றகிற்புகை யூட்டிநீண் சடைகள் வீக்கி
மலைவுசெய் காமன்விற் போரினிற் சிக்கினர் மையல் கொண்டார்.

மெய்யுழை வியர்வுற வியன்மணி நூபுர மெல்லென் றார்ப்பப்
பையர வல்குலி லமிர்துற வண்முலை பம்மி விம்ம
வையனங் கண்ணனங் கொவ்வொரு பொதுவிய ரரிவை பாலு
மொய்யெனுங் கானிடைத் தனித்தனிக் கிரீடையி லுவப்புறுத்தான்

நந்தன்விண் வேந்தனுக் கீந்திடும் பூசையை நனிவி லக்க
வந்தநல் லிந்திர னெழுமுகி லிணைவிடுத் தாவி னீட்டஞ்
சிந்திடக் கவிகையா யேந்துகோ வர்த்தனச் சிகரி யொன்றுன்
மந்தையைக் காத்தன னெழுதின மாயவன் வலாரி வெட்க. (௨௬)

வேறு.

இவ்வணம் வைகு மாய னெழிற்றிரா யமுனைத் தீரஞ்
செவ்விய குழலின் வேயைச் செங்கையி னினிதங் கேந்தித்
திவ்விய துகிரி னேருஞ் செய்யவாய்க் கமலம் வைத்தே
துவ்வியற் குரலாற் சத்த சுரத்தொடும் பண்க ளாற்ற. (௨௭)

இசையினை யோர்ந்த நல்லா ரிருண்மலி கூந்தல் சோர
நசையுடை நெகிழ்ந்து வீழ நகுமுலைக் கச்சுப் பீற
யசையிழைப் பார மாற்ற தணியிடை வாடி யலீக
விசைமலி சிலம்பங் கார்ப்ப விணைந்தனர் கண்ணற் சூழ்ந்தார்.

மாயவன் வெரிநி லேதோ மறுக்கண்டாங் கதனைத் தொட்டே
யாயவன் சாணிற் றூழ்ந்தங் கவனுடற் பரிசங் கொண்டு
நேயவன் மாலை வைகு நீள்வரி யோச்சிக் காமர்க்
காயம தயர்ந்து காமக் கவலையின் முயங்கி னரால். (௨௯)

ஆரையிங் கிவற்கு நேரா யசலையி லிசைப்ப மென்பர்
சீரையிங் கெடுத்துப் பன்னச் சேடனுந் தரமோ வென்பார்
பேரைநா மோர்ந்த போழ்தே பெரிதுள நாடு மென்பார்
தாரைவார்த் திட்டே நம்மைத் தண்ணளி யினியுண் டென்பார்.

கண்ணலர் நந்த மீது கடைக்கணி யாதோன் றன்னைக்
கண்ணனென் றழைக்க யார்க்குங் கணக்கது முண்டோவென்பார்
பெண்ணினை மருட்ட வல்ல பெருஞ்சித்த னிவனு மென்பா
ரெண்ணருங் கோடி மாற ரிவற்கிணை யல்ல வென்பார். (௩௧)

இவ்வகை வெருளு மன்னா ரிணைமுலை மோதிச் சாட
வவ்வயின் றுடைவை தோறு மணிமலர்ப் பந்தர் தோறுஞ்
செவ்விய குகைக டோறுஞ் செறிந்ததன் னகலஞ் சாத்தித்
தவ்வலுற் றுறுநற் கண்ணன் றனித்தனிக் கலந்திட் டானால்.

மங்குலின் வண்ண மேனி மாயவன் மகளி ரோடுங்
கங்குலங் கொருவி மாயக் கதிரொளி காட்டுங் காறும்
பங்கயக் கரத்தாற் பற்றிப் பணைமுலை ஞெமுங்கப் புல்லி
யங்கயல் பாயும் பண்ணை யாயர்பா டியினிற் புக்கான். (௫௩)

பாடியின் வைகு ஞான்று பகர்சரச் சுவதி தீர
நாடிய மறையின் வல்ல நண்ணுவிப் பிரர்க ளோடுஞ்
சூடிய விந்து மோலிச் சோதிதன் விழவங் காற்றி
நீடிய வரங்க ளேற்று நிலையகஞ் சேர்ந்து றைந்தான். (௫௪)

நந்தன்கண் டுஞ்சு போழ்து நடுநிசி வயினங் கோர்நாள்
வந்துவெம் பாந்தள் கவ்வி வாய்விழுங் கிடவக் கண்ணன்
றந்துணைச் சாணுற் றுக்கத் தன்னொரு வடிவ நீங்கி
முந்திய வியக்க னாகி முன்பணிந் தேத்திப் போனான். (௫௫)

திரையலை யமுனைத் தீரஞ் சீதர னுலாவு மெல்லை
வரையுறழ் சங்க சூடன் வந்துபல் லின்ன லாற்றத்
தரையினின் மோதி மாய்த்துத் தானவன் கரத்தி லுற்ற
யுரையறு மணியைக் கவ்வி யொருகுழை யோனுக் கீந்தான். (௫௬)

சேவினல் லுருவ மாகிச் செறிந்திடு நிரையி னாப்பண்
மேவிவந் துற்ற தீய விடநிக ரவுணன் றன்னைக்
கோவிய ருடனே கூடிக் குலவிடுங் கண்ண னோக்கி
யாவியைப் போக்கு வித்தா னலர்கரத் தறையொன் றீந்தே. (௫௭)

கண்ணனற் செயல்க ளெல்லாங் கஞ்சனு மாமன் கேளா
வெண்ணரும் வெகுளி பொங்க விணைவிழி மிக்குச் சேப்பத்
திண்ணிய கேசி யைக்கூய்த் திகழுளைப் பரியா மேவி
நண்ணிய மாயன் றன்னை நாடுதி தொலைக்க வென்றான். (௫௮)

கந்துக வுருவந் தாங்கிக் கன்மலை நடந்தா லன்ன
வந்ததோ ரவுணன் வாயின் வன்கர நுழைத்து ருண்ட
பந்தென வெடுத்து வீசிப் பாரினி லெற்றிக் கொன்றான்
நந்தகோ பால னாகி நண்ணிடு மையன் மாதோ. (௩௯)

திறன்மய னெச்சன் கொற்றத் திண்படை வியோம னென்பார்
விறல்கெழு மாய ரீன்ற வியன்மகா ரோடுங் கூடி
யுறவுட னவரை யாங்க ணோர்கிரி முழையிற் சேர்க்க
மிறலுறுங் கண்ண னோர்ந்து மீட்டன னவரைக் கொன்றே. (௪0)

கஞ்சனும் பெருமி தத்தாற் கடைக்கணின் ஞெகிழி யுக்கு
வெஞ்சிலை வேள்வி செய்க விளக்குக மல்லர் சாலை
குஞ்சரக் களிற்றை விண்ணைக் குடைந்திடும் வாயில் சேர்க்க
மிஞ்சிய வரசர் தம்மை விளிக்கநங் களத்திற் கென்றான். (௪௧)

கல்லினும் வலிய தோளான் கஞ்சனங் குற்ற நோன்மை
மல்லர்த முகத்தை நோக்கி மாவுர மமைந்த நுங்கள்
வல்லபத் தானே மேக வண்ணனை யண்ணன் றன்னை
யில்லையிங் கினிமே லென்னு விமைப்பினிற் படுத்தி ரென்றான்.

பொறிமுகக் கரடத் தானப் பூட்கையோ டியற்று போர்க்குங்
குறிதிகழ் மல்லற் போர்க்குங் கூரளி துதைந்து பாடும்
வெறிதுள பத்தோன் முன்னோன் வியனுற வலிய றென்று
ரறிகுவ மழைத்தி யென்றே வக்குரூரற்குச் சொற்றான். (௪௩)

காந்தினி புதல்வ னெல்லைக் கடுகெனத் தேரிற் போந்து
பாந்தண்மே லாடி னானைப் பணிந்துமன் னவனுங் கொற்ற
வேந்தனங் கழைத்த சேதி விளம்பலுங் கேட்டு வல்லை
யேந்துமான் வையத் தேறி யெயில்வளை மதுரை சார்ந்தான்.

அங்கக ரணியா ராமத் தருகினி லிறங்கிப் போந்து
மன்னவன் கலைது வைத்து வருமொரு தூசன் றன்னை
மன்னிய வறுவை கேட்க மறுத்தலுங் கண்ணன் மாய்த்துப்
பன்னரு மாடை யாவும் பறித்தியா தவர்க்கன் கீந்தான். (௪௫)

ஒன்றினை யனையின் வீக்கி யுயர்கஞ்சற் கணிவோன் வந்து
நன்றுபொற் கலன்க ளேந்த நண்ணுற வலங்க ரித்து
மன்றலர் மாலை தாங்கி மற்றவ னளிக்கச் சூடிக்
குன்றிய கூனின் மெய்யாற் குலவுமோர் தெரிவை வந்தே. (சசு)

எண்ணருங் கடிகை வீசு மெழின்விரைச் சாந்தங் கொண்டாங்
கண்ணனுக் களிப்பே னென்னு வருங்கரந் தன்னி லேற்றுக்
கண்ணனுக் கீயத் தானுங் களிப்புடன் வாங்கி யப்பிப்
பெண்ணவள் கூனை மாற்றிப் பேரணங் கென்னுச் செய்தான்.

சிலைமகம் வளர்க்குஞ் சாலை சிக்கெனப் போந்தங் குற்ற
மலையுறழ் தனுவைப் பற்றி மதர்ப்பொடு முறித்துத் தள்ளி
யலையெனப் புரண்டு சூழ்ந்த வணிகெழு மல்லர் தம்மைக்
கொலைசெயு மறலிக் கீந்தான் குரைகழன் மலர்த்தாட் கண்ணன்.

கூன்மதி வெரிநைத் தேய்க்குங் குடுமியி னுயர்ந்து ஞான்றும்
வான்படு கஞ்சன் கோயில் வாயிலிற் சென்று புக்குற்
றான்மலி கோட்டி னேடு மொருகாஞ் சுழற்றிப் போர்க்குக்
கோன்விட வந்த வந்தக் குவலயா பீடந் தன்னை. (சகூ)

கைம்மலை முன்னர்த் தாக்கக் கனத்தவா லதியைப் பற்றிப்
பொம்மெனச் சுழற்றி யார்த்துப் பொறிபுலன் கலங்கிச் சோரக்
கொம்மைகொள் பூணு லாவுங் கோட்டினை முறித்து வாங்கி
யிம்மெனு முன்னர்மோதி யிரித்தன னெழிற்கோ விந்தன். (ருo)

மல்லர்க ளேக்கிச் சீறி வலிகெழு கரங்கள் கொட்டிச்
சொல்லரு முட்டி யுத்தந் துணிவுடன் புரிதற் குன்னிக்
கல்லொடு முரணுந் தோணற் கண்ணனைத் தாவித் தாக்க
வல்லவர் சவையின் முன்னர் வளைந்தனர் கஞ்சன் காண. (ருக)

அருந்திற லோடு வந்தங் கார்த்திடு மல்லர் தம்மைப்
பொருந்திய காலாற் றூக்கிப் பொள்ளெனத் தூக்கி யெற்றித்
திருந்தல ருயிரா வானிற் றிகழெம புரத்தில் வைத்தான்
குருந்தினி விவர்ந்து முன்னங் குலவிய வண்ண ருனே. (ருஉ)

அற்றைவெஞ் சவையி னுப்ப வணிமணி யிழைத்த பீடத்
துற்றிடுங் கஞ்சன் மீதி லும்பலைக் கவ்வித் தாவிப்
பற்றிடும் வயமா வென்னப் பாய்ந்தவன் படிக்கண் வீழ
வெற்றின னுயிரைக் கண்ண னேற்றினன் விண்கூற் றற்கே.

காமர்வண் டிசைக்குந் தாரான் கண்ணனன் மாட்சி நோக்கி
நாமகள் கணவ னாதி நாகலோ கத்த ரியாருந்
காமரைத் தாளைப் போற்றித் தருக்கிய களிப்பினோடும்
பூமழை சொரிந்தெஞ் ஞான்றும் புகழுடல் பூரித் தார்கள். (ருச)

இன்னபின் னிராம னோடு மிருவருங் காசி போந்து
பன்னரு மோன சாந்தி பனியெனு முனிவன் றன்பா
லுன்னரு மெவ்வெட் டாகு முயரிய விஞ்சை முற்று
நன்னர்சூ ழறுபா னோடு நான்கெனு நாளிற் கற்றார். (ருரு)

அங்கவர் குருவின் சேயை யாண்டுபல் கழிந்த வோர்நாள்
செங்கராக் கவ்வி யுண்ட செய்தியை யறிந்து காலன்
றங்கிய வூரிற் கண்ணன் றதைந்தந்த மகவை மீட்டுப்
புங்கவன் முன்னர் விட்டுப் போந்தனன் மதுரைநாடி. (ருசு)

ஊன்றனைப் பிளிற்றும் வேலோ டுறுசரா சந்த மன்னன்
றேன்றனைச் சொரியுஞ் சூழற் செறிந்திடு மதுரைக் கண்ணே
மான்றனை மருட்டு மாயர் மகளிர்த மணாள னேயென்
பான்றனோ டியுத்த மாற்றிப் பதினெழு தரந்தோற் றானல். (ருஎ)

பின்னரோர் கலவ யன்றான் பெரும்படை கொணர்ந்துசார
வன்னவன் றனக்குத் தோற்ற வாறுபோற் கண்ண னோடித்
துன்னிய மலைமு டுக்கிற் றுயில்வுறு முசுகுந் தன்பின்
மன்னனு மம்ம றைத்த மன்னனை யுதைத்தா னற்றை. (ருஅ)

எழில்முசு குந்த மன்ன னிணைவிழி விழித்து நோக்க
வழலினிற் பட்ட பஞ்சி னழிந்தன னவுணன் றங்கு
மழவிடை யொத்த வேந்தன் வழுத்தலு மவற்குக் கண்ணன்
றெழுகுலம் பிறந்து மேன்மை துலங்குற வரங்க ளீந்தான். (ருகூ)

மதுரையைச் செவ்வ ளுேக்கி வருசரா சந்தற் கண்டு
கதுமெனக் குகையி லோடக் கண்டவன் குகைக்குத் தீயை
யிதுளியே மாய்க வென்ளு விட்டுத்தன் னகரஞ் சார்ந்தான்
பொதுவரின் குலத்துக் காளை போந்தனன் குப்புற் ருங்கே.

அன்னவாய்ச் சியர்செவ் வாயி னமுதினை யருந்துங் கண்ணன்
பன்னுயோ சனையீ ராறு பரவிய நியக்கு ரோத
மன்னுமங் நீளத் தோதை மணிக்கட லகட்டி லாக்கந்
துன்னிய நகர மொன்று துவரையென் றியற்று வித்தான். (சுக)

மணிவெயி லெய்ப்பு நீத்து வதிதர நிவக்கு மிஞ்சி
யணிகெழு துவரை யூரி லமர்கையிற் பலரா மற்குத்
துணியெயா னந்த நாட்டிற் சுகவிரோ வதன்ருன் பெற்ற
பணிநிறை குதலைச் செவ்வாய்ப் பாவையை யீந்திட்டானல்.

உற்றிரு விதர்ப்ப நாட்டி னுருக்குமன் றங்கை தன்னைக்
கொற்றவேற் சிசுபா லற்குக் கொடுத்திடக் குறித்த ஞான்று
மற்றவ டுவரை யூர்க்கு மறையவற் றூது போக்கச்
சொற்றநற் கண்ண னேகித்துடுமென வெடுத்துச் சென்ருன்.

தடுத்திடச் செருவினுற்ற சயசரா சந்த னுேடு
மடுத்திடு முருக்கு மன்ற னணிபடை முற்றுஞ் செற்றுத்
தொடுத்திடு கழற்காற் கண்ணன்றுவரையி லின்ருர் முன்னர்
விடுத்தபி னழல்சான் ருக வியனுருக் மணியைச் சேர்ந்தான்.

எழிலுறுங் துவரைக் கண்ண னிருந்துவ ரதர முண்டு
தழுவுகைக் கடங்கா தோங்குந் தனிமுலை ஞெமுங்கப் புல்லி
விழைவுசை யோகத் தென்றும் விரும்பிட வேனி லாளி
மழவென வந்து தித்தான் மன்பிரத் துய்ம்ம னுக. (சுடு)

சத்திரா சித்த னென்னுத் தரணியைத் தரிக்கும் வேந்தன்
பத்தியோ டீன்ற சத்ய பாமையை யளிக்க வேட்டு
முத்தவெண் ணகையா ளோடு முயங்கிடு மோக மாந்தி
வித்தகன் றுவரை யூரில் வீற்றிருந் தருளு மேல்வை. (சுசு)

சந்தமார் தருகா ளிந்தி சாம்பவ திப்பெண் வீசு
கொந்தலர் மித்ர விந்தை குழற்செறி சத்தி நெற்றி
யிந்துபத் திரையங் தீஞ்சொ லிலக்கணை மாத ராரை
விந்தையிற் றேய்ந்து வாழ்ந்தான் விஞ்சையின் வல்ல மாயன்.

மனைவியர் தங்கட் கெல்லா மன்மகா ரோங்கி மல்க
வனைசாம்ப வதிபாற்கானை வந்திலனுகக் கண்ணன்
புனையுப மனியற் போற்றிப் புகழுறு தீக்கை யேற்று
முனைசிவ பூசையாற்றிச் சாம்பனை முதலோர்ப் பெற்றான். (சுஅ)

இலையிழை புனைந்த மாத ரெண்ணிரண் டாயிரத்தர்
முலையுடன் முலைகள் சாடி மோதுற வடர்ந்து தாக்க
வலையிடை யொசியப் போந்த வவர்தமைக் கண்ணன் மார்பின்
மலையினை மலைசேர்ந் தன்ன வலிபெற முயங்கி னுனல். (சுசு)

பஞ்சவர் நாடு கவ்விப் பஞ்செனப் பறக்க டித்துத்
துஞ்சலில் வீர தீர சுயோதனன் வாழு மேல்வை
மஞ்சினை வெளிறக் காணும் வண்ணநன் மேனி மாய
னஞ்சலென் றடுத்துப் போற்று மைவரோ டினிது சேர்ந்தான்.

பாண்டவர் வனவா சம்போய்ப் பறித்ததம் பதிக்காச் சார்ந்தங்
காண்டவற் கண்டன் னோர்க ளமைத்தசங் தாற்றிப் பின்னர்ப்
பூண்டவற் பினனுப் பார்த்தன் புகழுறுங் கூவி ரத்தேர்
தூண்டிட வலவ னென்னுத் துணிந்தனன் கருணை மிக்கான். (எக)

சவ்விய சாசி யோடு தானிர தத்தி லூர்ந்து
வெவ்விய துரிய னுதி வேந்தர்தம் படைமுன் போக
வவ்விய மில்வீ பற்சு வச்சுதன் வதன நோக்கி
யொவ்விய வேத நீத முரைத்திடற் கெண்ணி னுனல். (எஉ)

படைமுனைப் போந்தார் முற்றும் பரிசனத் தமர்க ளாகி
யடைவின்வங் தவரை வீட்டி யவனியை யாள முன்னு
நடையினை நோக்கின் மிக்க நடுக்கம துறுத லாலே
விடையளித் திடுவாய் போரை விடுத்திடச் சலசக் கண்ணு. (எங)

சயமிக வுற்றிட் டாலுந் தாணியிற் கோடி காலம்
பயஞ்சிறி தின்றி யாளும் பயனதங் குண்டு கொல்லோ
பெயர்வறப் புரந்த மன்னர் பேசிடக் கேட்டே மில்லை
யயர்வுற வாளா மாய்த்திங் காண்டிடேன் மண்ணை யென்றான்.

சாரதிப் பணியை யேற்ற சலசநா பனுஞ்சொல் வானல்
வீரரில் வீர னுனேய் விரிந்திடும் விவகா ரத்திற்
சாரம தென்னுச் சாற்றுஞ் சதிருறு கரும மியாவும்
பாரமார்த் திகத்தின் முற்றும் பயனிலை யுண்மை தேர்தி. (எரு)

குடமுறு வான முற்றுங் குலவிய வானு மாபோன்
றிடமிகு சீவ கோடி செறியுமப் பிரம மாகு
மடமையி னிஃதோ ராதார் மயங்கியே பேதித் தென்றும்
புடவியிற் கருமத்துள்ளாப் புந்திகெட் டழிவான்றே. (எசு)

பிரமமே நானு மாவன் பிரமமே நீயு மாவை
பிரமமே நின்கை வாளி பிரமமே யொன்ன லார்கள்
பிரமமே சமரதாகும் பிரமமே வெற்றி யாகும்
பிரமமே தோல்வி யாகும் பிரமமே யாவுங் காண்டி (எஎ)

ஏகம துற்ற வந்த விணையிலிப் பிரமந் தானே
போகம தாக நின்று பொலிந்திடு மதனை யூட்டு
மாகலி னேனே வாளா யடர்தரு தட்டிற் சாய்ந்து
மோகம துற்றுய் போரில் முனைகுவாய் முன்ன மென்றான். (எஅ)

இவ்வகை மருட்டக் கண்ண னிணையில்காண் டீபம் வாய்ந்தான்
றெவ்வர்க ளோடுந் தெவ்வைத் திண்ணிய நிருபர் சூழ
வவ்வயி னீரொன் பானு ளாற்றினன் வயத்தைக் கொள்வான்
செவ்விய தருமற் கன்று திகழ்முடி சூட்டி னானல். (எகூ)

பாரத முகித்து மாயன் பஞ்சவர்க் காக்க நல்கி
நேரலர் முடிக விழ்க்கு நீணகர் துவரா யேக
வாரமிக் கடர்ந்து வாச மகணித மளவு மாற்றி
நாரத வகடு முட்டு நண்ணுமோர் துடவை யண்ம. (அ0)

வேறு.

பூதியினைப்பூதியத்துநனிபூசிக்கண்டிகையைப்பூணின்வேய்ந்து
கோதிவிடுகோடீரமுடியதனைமுடியென்னுக்குலவவீக்கிச்
சோதிகுண்டிகையேந்திச்சீரையினையிடையிறுக்கித்திகழுநாவி
லாதிசிவமனுவுடனேயுபமனியுமுனிவரனங்கடாக்கண்டான். (அக)

கண்டவந்தக்கணமிறைஞ்சித்தோத்திரங்கள்பலபோற்றிக்கரங்குவித்து
முண்டகநின்னடியெளியேன்முடிசாத்தித்தீக்கைதருமுனிவரேறே
பண்டைவினையிற்றையொழிந்தேனினிநன்வாழ்க்கையெலாம் பண்பிற்கொ
மண்டனில்யான்பெற்றபேறெவர்பெறுவரென்றிட்டான்வனசநாபன்[ள்வேன்

ஆயதிருப் பாலளக்க ரயின்றவுப மனியமுனி யறைதல் செய்வான்
மாயவனீ மகிதலத்துத் தீம்பர்களைத் தீர்த்திடுவான் வந்தா யேனு
நேயமுறச்சொற்றருண் மறவியுறப் படைதொட்டு நீதி யாளர்
வாயதனிலவத்தமன்றுசொலுவித்துவஞ்சகப்போர்விளைவித்தாயால்

அன்றியுநின் றோழனருச் சுனனுக்கங் கடுகளத்தி லவலமான
வென்றியுறவக்கணத்திலவன்மனதில்வெருவடையவிகிர்தஞ்செய்தா
யென்றுமவன்சிவபூசைக்கருமங்கள்முத்தியினுக்கேதுவாக
வன்றெனநீமறுத்ததனைவிவகாரந்தனக்கென்றேயரற்றினையால்.

மறையுண்மையோர்ந்திருந்துமாதவியினற்கொழுநன்மயங்குமாறே
யறைந்தனைநீயவ்வமயமாயிடினும்பேதையர்களவலம்பித்துத்
தறைமிசையிற்பவமுறுவரப்பைதனினைத்தொடருந்தக்கோயந்தக்
குறையொழியக்கழுவாயைநாடுதலேநின்றனக்குக்குணமாமென்றான்.

விளையாட்டிற்கேயியற்றிக்காதலிக்குஞ்சிலகருமம்வினையாம்போலத்
தளையுற்றேனென்செயலாலென்செய்கேனிவ்வின்னற்றடுக்குமாறு
களைகணுவெழுந்திட்டமுனிவரனேயோர்கழுவாய்காட்டுகென்று
னளையதனையுறியுழையிலேதிருடிவாய்நிரம்பவடைத்தகண்ணன்.

கண்ணதனைக்காங்காலிற்றுங்கியநன்முனியருளுங்காதல்சொல்வா
னெண்ணரியபவமனைத்துமிம்மையினேயொழிந்திடற்கங்கிருள்சேர்கண்டத்
தண்ணலார்சிவலிங்கத்தரிசனமேயல்லாமலவனிமீது
விண்ணுழையும்வேறுவகைவிரகொன்றையெவரேனும்விளம்பக்காணேன்

அத்தகையதரிசனமுமதிதவழ்நீர்ச்சடைப்பாரத்தண்ணல்வாழு
முத்தமநற்றலங்களின்மாட்டுற்றுநேரிடிற்புண்யவுயர்வுண்டாமால்
பத்தியுறநீபணிந்தங்கேத்திவரம்பெற்றிடற்குப்பதிந்ததாய
சித்தியுறச்சொலுமுறுதிதனைக்கேட்டிசெங்கமலத்திருக்குளானே.

சிறந்ததிருவான்மியூர்ப்பவநாசத்தடப்பெருமைசெப்பற்பாற்றோ
திறந்திகழுமருந்தீசன்றிருப்பெயரைக்கேட்டவருந்தெய்வமாவ
ரறந்திகழுநின்றனக்கிங்குரைத்திட்டவெளியேனுமனகமுற்றே
னிறந்ததையும்புயல்வண்ணவொல்லைசிவேணத்திசையினேடுகென்றான்.

குரவனுபமனியமாதவமுனிவன்றிருத்தாளிற்குழைந்துசென்று
வரவனுஜைப்பெற்றலுமேபஃறுறையுமோங்கல்களும்வனமுந்தாண்டி
யரன்கயிலையினிலுலவுதமிழ்மொழிசேர்தெனுதுதிசையடர்ந்துநாளுங்
குரலலையின்மணிகொழித்துக்கருள்கெடுக்குங்குணக்கடலின்கூலந்தன்னில்.

திருவான்மியூரெல்லையினையண்ணிப்பூரித்துத்தீர்த்தநாடி
மருவுமொருபாபநாசனிநீரினிற்படிந்துமகிழ்விஞேடு
மருமைமிகுபூதிநனியுடலமெலாஞ்சண்ணித்திட்டங்கந்தோறுங்
குருநிறையுமணிவடம்பூண்டைம்பதத்துச்சரிப்புடனேகோயில்சார்ந்து.

விமானமுனந்தரிசித்துப்பணிந்தெழுந்தங்குட்புக்குவிடைப்பானின்று
சமானமிலிப்பாற்பணியவனுஜைகொடுகணபதியைத்தனிச்செவ்வேளை
யமானமெனவேபுகழ்ந்துபிரதக்கணஞ்செய்தங்கருமையாய
தமாலவில்லுவமேயும்பெம்மான்றன்சந்நிதியிற்சாற்றுவானல். (கூக)

வேறு.

சத்தே சித்தே யானந்தந் தானு நின்ற தனிப்பொருளே
வித்தே யுலகம் விளங்கு தற்கும் வேண்டு மவற்றையளிப்பதற்குந்
தத்தே வுற்றுத் தளர்வுறுமித் தமியேன் றன்னை யாளுகநன்
முத்தே பவள முழுமணியே முதலே போற்றி போற்றியே. (கூஉ)

என்னைப் படைத்துப் புரந்திட்டா யினிநின்மனைத்தாணிழறருவா
யுன்னைச் சரணென் றடைந்தேற்கிங் குற்ற விடுக்கண் பலதீர்ப்பாய்
கன்னற் சுவையைக் கயப்பிக்குங் கன்னியிடங்கொள்கருணையனே
யுன்னற் கரிய பெரும்பொருளா மொருவ போற்றி போற்றியே.

நலத்த வளியா மென்னெஞ்ச நாடு நின்றன் மலரடியைக்
குலத்த தேவர் முனிவருங் கூறு மாந்தர் பற்பலரு
நிலத்தி னுறுமன் பதையுமிக நேடிச் சித்தி பலபெற்றார்
சலத்தி னிளவெண் மதிதவழுஞ் சடையாய் போற்றி போற்றியே.

பால விழியான் மதுசகனைப் பற்ப மெனவே முன்பொ டித்தாய்
சால வினைகயின் னுவுற்றேன் சகிக்க கில்லே னினிக்கணமுங்
கால கால கடைக்கணிக்கக் கருணை வைத்திங் கெனையாளா
யேல வடியார்க் கினிதருளு மீசா போற்றி போற்றியே. (கூரு)

இன்ன வகையிற் றெழுதிறைஞ்சு மெழிலியனையா னேர்காண
வன்னை யுமையா மலைவல்லி யழகி னிடப்பா கத்தமரத்
தன்னே ரில்லாச் சிவலிங்கந் தன்னி னின்றும் வெளிவந்து
தன்னந் தனிய னுயொளிருந் தந்தை திருவாய் மலர்ந்திடுவன்.

கண்ண நினது தோத்திரங்கள் கனிவாக் கேட்டிங் குளமகிழ்ந்தே
மண்ணின் பார மொருவவிவண் வந்து பிறந்தே தீம்பர்தமை
திண்ண வலியா லொழித்தபெருஞ் செய்கை நன்கா மாயிடினு
மெண்ணு நலஞ்சேர் நெறிவழியி னியைந்தா யில்லை யன்றியுநீ.

என்னைத் தவிர வேறுபொரு ளில்லை யென்னு மறையுண்மை
தன்னைச் செவ்வே யோர்ந்திருந்துந் தணவாச் சமர முடிப்பிப்பான்
பின்னை யன்ன சுபத்திரைநற் பிரியன் றன்பால் வேறுவகை
மன்ன போதித் தவ்வமய மயக்கு வித்தா யாகையினல். (கூஅ)

பாவ நின்னைப் பற்றியதாற் பாவநாசத் தடம் படிந்து
மேவக் குடைந்த வக்கணமே விட்ட துன்றன் செயிரனைத்து
மாவ லுடனே துவரையினி லன்பிற் சின்னுள் வைகியபின்
தேவர் களுறும் வைகுண்டஞ் செறிந்தங் குறைவாய் சுகமென்றே.

தெய்வ லிங்கந் தனிற்கரந்தான் செந்தா மரைநா பன்றானு
மைய வுய்ந்தே னுய்ந்தேனென் றாடிப் பாடிப் பலதரமும்
வைய மீது வீழ்ந்தெழுந்து வான்மி யூரை வலம்வந்து
பையப் பைய வேதிரும்பிப் பரம னுருவே சிந்தித்து. (கoo)

வான்மி யூருக் கோர்கடிகை வாய்ந்த வுத்த ரத்திகையிற்
றேன்வண் டினங்க ணனிமுறலுந் தெய்வவல்லித் தடத்தருகிற்
ருன்மிக் குறைந்து கங்குலினிற் றனியே போந்து மருந்தீசன்
பான்மே னியனைத் தரிசித்துப் படர்வான் பார்த்த சாரதியே. (க0க)

பார்த்த சார திப்பெருமாள் பால்வண் ணத்தன் திருவருளாற்
றீர்த்த னாகி யுறைந்ததலந் திகழு மல்லிக் கேணியென
வார்த்த வன்பி னடியவர்க ளறைந்தங் கவனைப் பணிந்தேற்றிச்
சீர்த்தி யுற்று வாழ்வரிரு செல்வ மல்கப் பெற்றின்றும். (க0உ)

பன்னு கப்பூ டணன்றனக்குப் பகரும் வேத புரியதனி
னன்ன ரும்பர் நனியேத்த நல்வி ழாக்கள் பலவாற்றிச்
சொன்னார் தமக்குஞ் சுகமருளிச் சோர்வில் பார்த்த சாரதியுஞ்
சின்ன ளல்லிக் கேணியுழை செவ்வ னுறைந்து வாழ்ந்தனனால்.

கோட்டு மதியுந் தவழ்மாடக் குடுமி தோறுங் கொடிநிரைக
ளாட்டுந் துவரை நகர்ச்சேர்ந்தா னாரணன்று னென்றுரைத்தே
யீட்டு மறிவிற் றனையுணரு மெழிலார் முனிவர் தமக்குரைத்தான்
வீட்டுக் குரிய வுயர்ஞானம் விளம்புஞ் சூத மாதவனே. (க0ச)

பார்த்தசாரதி பாபநாசப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் - ரு0ரு.

---

## சந்திரன்காமநாசப்படலம்.

இல்ல றத்துக் கிழமையினுக் கேற்ற சீல மேயுளுற்றி
நல்ல யோகத் தவத்துநிலை நண்ணி யுண்மைச் சிவமறிந்து
வல்ல வபர பரஞான வண்மை யனைத்து மொருங்குணர்ந்து
சொல்ல வல்ல புனிதனருட் சுலவத் திரிமா முனியென்பான். (க)

அரிய தவத்தி னீன்றெடுத்த வமுத கிரணச் சந்திரனு
முரிய மகவை விழையுமனத் துவகை யோடும் வளர்த்தெடுத்துப்
பெரிய நிபுண னுவனெனப் பிறங்குங் குறியாற் பெரிதுணர்ந்து
தெரியவுண்மைக் கலையனைத்துந் தேற்று விப்பா னனியுன்னி. (உ)

உறையு மியோக முனிவரரு ளுற்ற மாட்சி யோடொளிர
வறையுஞ் சுவர்க்க விபுதர்களுக் கான குருவென் றேதேர்வா
னிறையும்விஞ்சையனைத்தையுமேநிலைகண் டோர்ந்தமறையவன்பால்
முறையிற் கற்க விடுத்தனனன் முகிழ்பைங் குமுத நண்பனையே.

தேவ குருவுஞ் சந்திரன்றன் றிகழ்நுண் ணறிவின் கூர்மைமன
மேவ வாய்தலைத்துணர்ந்து விளங்குங் கல்வி யனைத்தினையு
மாவ லுடனே கற்பித்தங் கரிய புலமை யாளனென
வேவ ருங்கண் டதிசயிக்க வெழின்மா ணவக னுச்செய்தான். (ச)

வேத மங்க மாகமபு ராணமுதலாம் வியனூல்க
ளோதி யையந் திரிபின்றி யுணர்ந்தான் கரவா மலகமென
மாத வத்த முனிவானு மகிழ்வங் கெய்திக் கன்மாருட்
போத மிகுத்த மாணவனைப் புத்திரன்போல் வளர்த்துகந்தான். (ரு)

காலுங் காமும் வாரிசமாக் கதித்த முழந்து தூணியதாய்
காலுந் துதிக்கை யேகுறங்காய் நண்ணு மகல மங்கலமதா
யேலுங் கந்து கந்தருவா யெழிலார் கன்னங் கஞ்சனையாக்
கோலும் வாகு வளையதுவாக் குறித்த கண்க ணீலமதாய். (சு)

வில்லை யெள்கு நன்னுதலும் விளங்கும் பவளச் செவ்வாயு
முல்லை யிணையும் வெண்ணகையு மொய்த்த செங்கைகோகைகளுஞ்
சில்லை மூசுங் கடமுளருஞ் சிறுகட் களிற்று நேர்நடையு
மெல்லை யளவி னடங்காத வெழிலங் கடைந்தான் சந்திரனும். (எ)

கலைக ளுடனே கவினனைத்துங் கவின வோங்கி வளருகையி
னிலைநல் லறத்தின் றலைநிறிணையி னின்ற வியாழன் காதலிவெம்
முலையிற் காய்த்து வடித்தெடுத்த வுயர்வே லொண்க ணுறழ்தாரா
மலைவு வாய்ந்து சோமன்றன் மயக்க முற்று ணுளும். (அ)

அட்டிற் சமைத்த வெண்ணடிசி லரிய கனிகுய் கருணையுடன்
கிட்டி யமுத கிரணன்முன் கிள்ளை மருளு மொழிமொழிந்து
வட்டித் திடுவ ளாவின்பால் வடித்துக் காய்ச்சித் திரட்டியநற்
கட்டித் ததியை யேயொழுக்கிக் கனிவி னுகரச் செய்திடுவள். (கூ)

பட்டி னிழையி னிழைத்தநற் பலபொற் றூசங் குடிப்பித்து
மட்டில் மணியா ரம்பலவும் வகையாவிலங்க வணிவித்து
மட்டி நுதலிற் பொற்றிலக மன்னமற்றைக் கைசெய்து
திட்டி வாங்கிப் புன்முறுவல் செய்வாள் சந்தி ரனைக்கண்டே. (கo)

தூங்கு மமய முழுமதிக்குத் துணிவின் முத்தம் பலவீந்து
நீங்கி யெழுப்பி யவன்முன்னர் நிலைவெண் தருப்ப ணங்காட்டி
யாங்கு நகைத்துக் கன்னத்தி லணிமென் விரலாற் கிள்ளிடுவ
ளீங்குத் தாரை யிங்ஙனமா வினிய சரச மோடுறைய. (கக)

சந்திரன்றன் குருமனைதன் சரசநடைக்குப் பெரிதுட்கி
யிந்தை வினைக்கிங் கென் செய்வ லீசா சிவனே யென்றணுங்கி
யெந்தை யத்தி ரிப்பெரியர்க் கெட்டி லென்னைச் சிவந்திடுவ
ரந்த வைரா வதப்பாக னறியி னவமா னம்புரிவன். (கஉ)

ஆறு விந்தத் தாரையின தழகை நேர மூவுலகின்
மாதர் தம்முட் கண்டதில்லை மற்று மிவளைப் படைத்தமறைக்
கோனு மலரோன் மயங்காமற் குறித்தங் கிருந்த திறம்பூதே
தானுப் போந்து முயங்கிட்டாற் றமியேனுகூழ்மிகநன்றே. (கங)

என்ன செய்வ லங்கசன்ற னிலங்கைங் கணையின் மொத்துண்டே
னன்ன மனைய வரிவையிவ ளங்க முற்று மூடிலளால்
முன்ன நானே யூக்கமுடன் முடுகி லியாது விளைந்திடுமோ
வின்ன வாசை தடுத்திடற்கிங் கெந்த ஞானந் தலையெடுக்கும். (கச)

கூனா யிவட னில்லெனினுங் குபேரன் வதியுங் கோயில்வற்
சினா யிடுக்கிச் செய்தவத்தின் சிறப்பிங் கிவடன் றரிசனநற்
பேனாக் கேட்டுச் சிந்தித்தல் பிறங்கு மோன மந்திரமத்
தானா மெய்யின் சையோகந் தன்னை ரற்ற வத்துவிதம். (கரு)

இந்த வகையி லிமகானு மிசைத்து வாழ விருவர்க்குஞ்
சந்தற் பங்க ணோாமே தடைகள் பலவந் தேனுதலுஞ்
சிந்தை மகிழ வவ்விருவர் சித்த சன்றன் றெழில்வெருட்ட
முந்தை நன்னர் வினைவந்து மூண்டு கொண்ட தோர்வைகல். (கசு)

கடிப்போ தவிழ்த்துக் கருஞ்சுரும்பர் கசிதேனுண்டு களித்திசைக்கத்
தடிப்பாய் நிவக்குங் கற்பகநற் றருவி னிழற்க ணினிதமர்ந்து
நடிப்பாற் செனுத செனுதவென நடன மாதர் விபவமொடு
பிடிப்போ லியங்குஞ் சசிதேவி பிரியா துறையும் புருகூதன். (கஎ)

கருத்திற் கருதி னோர்களுமெய் கம்பித் தலர வெருவந்த
மிருத்தி யிம்ப ரம்பரினு மிணையி லின்ன லாதியினுற்
செருத்தி யுடனே மூவுலகுந் திரிதல் செய்து வதிதந்த
விருத்தி ராசு ரன்றன்னை வீய மோதி யொழித்தபினர். (கஅ)

சாந்தி புரிதற் குளத்துன்னித் தனியா கமங்க ளெண்ணுன்கு
மாந்திக் கனிந்த முனிவாரா மறைவ லாள ரொடுசூழ்ந்து
காந்தி காலும் வெண்ணிறத்த கலினத் தோடுங் கல்லணமே
லேந்தி யுலவும் பரிமேத மிசைந்த தென்றே மனத்துன்னி. (ககூ)

சுரர்க டமக்கங் காக்கமது சுரக்கும் வண்ண மேவிழையும்
பிரகற் பதியை நனிவிளிக்கப் பெரிது முன்னித் தூதுவன்பான்
மரபிற் றிருமு கந்தந்து மகவா னேவி விடுப்பவவன்
விரைவிற் போந்து பணிந்தீந்தான் விறலார் முனிவன் மலர்க்கரத்தே.

திருமுகமங் குடனோக்கித் தெரித்த வெல்லா நன்கறிந்து
மருமத் தணையு மனைவிமலர் வதன நோக்கி முனிவரனுந்
தருமத் தலைவன் சொற்றிடுவன் றைய லார்க்குட் டலைமையுறு
மரும லர்த்தார்க் குழற்கொண்டை வரித்த மாதே கேட்டிடுதி.

இந்திரன்கற் பகநாட்டிற் கிற்றைஞான்றி வியான் போகு
சிந்தை நவிய வெனைநினைத்துச் சிறிதுந் துயரங் கொள்ளற்க
வந்து விடுவ லோர்மதியுண் மகிழு நமதா சிரமத்து
ளெந்த வறமும் பிழையாம வியற்றி நலஞோ டுறைதியரோ. (உஉ)

தலையை நீவிச் சிணுக்கறுத்தல் தகரமிடுதல் பொட்டணிதல்
கலைகள் பலவுமுடுத்திடுதல் கமழும் புட்ப மிலைத்திவர்தல்
விலையின் மணிப்பொற்பணி பூணன் மிக்க வடிசி லயின்றிடுதல்
தலைவ னில்லா வமையத்திற் றகுகற் புடையர் தாங்குயிற்றார்.

இந்தத் தரும விரதமலீ தியற்றி நீநன் குறைவதுட
னெந்தக் கரும முன்றனக்கிங் கெவ்வெவ் வமையம் வேண்டுறினுஞ்
சந்தி ரன்றன் றுணையதனாற் சதிரா முகித்துக் கொள்ளுதியா
லுந்து வயதிற் சேயேனு மோங்கு மதியின் முதியோனே. (உ௬)

இவனை வேறு நினையற்க வில்ல றத்தை நடாத்துவதி
லுவனைக் காட்டி லும்முலகி லுறவ னொருவ னுண்டுகொலோ
வவிரும் விழியி னிமைநிகர்க்கு மதுபோலரிய காப்பிழைப்பன்
கவலை கொள்ளேல் விடையெனக்குக் கடுகத் தருவா யென்றனனே.

தலைவ னவின்ற வாய்மையெலாந் தளிமத் தாரை கேட்டனுமே
தலையை வணக்கிப் பனிப்புற்றுத் தரையை விரலி னாற்கீறி
முலையி னெற்றி நீர்முத்த மொய்க்க விம்மி யேயழுங்கிக்
கலைசேர் வளைசூழ் வலக்கரத்தைக் கன்னஞ் சேர்த்தங் குரைத்திடுவாள்

நன்று நன்று நின்னனர்த்த நலமில் கூற்று நிற்கழகே
யென்று நின்னை யான்றணந்திங் கிருந்து தனியே வதிதந்தே
னென்ற னுள்ள மாராய விவ்வா றுரைத்த தென்னைகொலோ
வொன்று மறியா வேழையின்பா லுற்ற சீற்ற மொழிக்குகவே.

மனந்தா னினக்குத் துணிவாய வகையைச் சற்று மோரகிலே
னெனவென் றுன்னைப்போய்வருதற் கியம்பத் துணிவ னென்வாயா
லனுப விக்கு மின்பத்திற் கவதி தெய்வஞ் செய்ததெனோ
கனிவிற் றடுத்தா லியாகத்தைக் கலைத்த பாவ மெய்திடுமால்.

தீர்த்த யாத்தி ரைக்கண்ணுஞ் செய்ய தீக்கை வகிப்புளியு
மூர்த்தி தேவ.வுபாசனத்து மூண்ட பலவாம் விரதத்து
மார்த்த முனிவர் குழுத்தலையு மரிய பூர ணைச்சாரும்
பேர்த்த ருதுத்தி னத்துழையும் பெரும்போ தொழிந்த தழுவாமே.

இன்ன வகையி னொழிதாரகா ளேய்ந்த தினத்து மிகுந்தாகி
லென்ன திறத்தி யான்சகிப்ப லெவ்வா றுன்னை நீத்திடுவன்
சொன்ன நெறியி னில்லேனேற் சொற்ற கற்பின் பங்கமுள
தன்ன யாகத் தீர்வதனுக் காகுங் கால மறைகென்றாள். (௬௦)

யாக நிரப்பங் காயினவு மியானோர் விகலை நிலையாது
வேக மாகப் போந்திடுதல் விடுக நின்றன் மனத்திலுறுஞ்
சோக மனைத்து மிக்கணமே தொலைப்பாய் முப்பான் சிறுபொழுதும்
போக விடைதா வெனப்பகர்ந்தான் புகழுந் தேவ மந்திரியே.

நேய வில்ல றப்பணிக ணோர்மைத் தாக நாடோறு
மாய நின்மா ணவனுக்கிங் கரிய மாற்ற முறைத்திடுக
ஞேய வெள்ளைக் கதிரோனை நின்னைப் போலு மாதரிப்ப
னேய வகைச்செ லீஇவருக வென்று ளணங்காந் தாரையுமே.

ஒற்றைச் சகட்டி னுளைசெறியு மோரேழ் மான்பூட் டொண்டேரிற்
கற்றைக் கதிர்களொளிகாலக் காணு மாத வன்றனு
மிற்றை யிவர்கட் கனுகூல மியற்ற னலமென் றுளத்துன்னிச்
சற்றுப் பச்சி மத்திகையிற் சாய்ந்து விளைவிற் கரந்தனனே.

குருவின் பின்னர்ச் சிறிதளவு கூடப்போந்து சந்திரனும்
வருவ தற்கு ளெழிற்றாரை மகிழு முளமுஞ் சகியாமே
தருணத் தாறு சுவையடிசில் சமைத்துப் பாத்திரத்திட்டு
மருவுந் தண்ணீர் வெந்நீராய் வாசப் பொடியோ டங்கமைத்தே.

ஆடை கலன்க ளாதியன வன்பின் வரிசைப் படநிரப்பி
மேடை மலியு மமளியினை மென்மை மேவப் பொற்புறுத்திப்
பேடை யன்ன மெனவேகிப் பிறங்கு வாயிற் படிநின்று
வாடை நோக்கிப் பார்த்திருந்தாள் வந்தா னழகிற் கோர்தலைவன்.

சென்று போந்த வம்புலியைச் செவ்வ னோக்கி நுவன்றிடுவ
னுன்றன் குருவின் றுணைவியினை யுன்பால் வைத்துக் காக்கவென
வின்று வகுத்த மாற்றமது மெள்ளேல் மிக்கா தரத்தோடு
மென்ற னுளமுங் கோணமை விருத்தனினக்குக் கடமையதாம் (௬௫)

போது போயிற் றெழுந்திடுக புனித நீரி லாடுதற்கென்
றூத னம்வேய்ந் தேபரிவி னதன்மீ தன்னோன் றனையிருத்தி
மோது வளைகல் லெனவொலிக்க முகத்தின் வியர்வு முத்தரும்பக்
கோது கூந்த லவிழ்ந்துவிழக் கோத்த வாரஞ் சிக்குண்ண. (கஎ)

துடையி னளவு மாடையினைத் தூக்கி மிகநன் றுச்செருகி
யடைவின் புனித நீராட்டி யரும்பொற் கலையா னேதுடைத்து
மிடையுங் குடுமி புலர்தருவான் மிக்கவாசப் புகையூட்டி
யுடைக ளீந்து கலனணிந்தங் குறும ணப்பூ மிலைச்சினளால்.(கஅ)

பொன்ன வள்ளக் கல்லையிற்றாய்ப் புசிப்புக் குரிய பலபடைத்திட்
டன்ன வடிசின் மீப்பருப்பு மமைய விழுது மிக்கொழுக்கி
மன்னுங் கருணை சூழ்வித்து வண்ணச் சிவிறி கொடுவிசிறிக்
கன்ன னிகர்த்த மிழற்றலொடுங் கனிவி னூரச் செய்தனளே.

உண்ட பின்ன ருடுபதியு முற்ற சுவைசேர் முக்கனியுங்
கண்டு மெள்கிக் கிள்ளைக்குக் கற்றுக் கொடுக்குங் கொஞ்சுமொழி
கொண்ட தாரை தன்னிடத்துக் குலவுங் காமம் வைத்தனளென்
றண்டு வாச மிகவீசு மழகி னுய்யா னனஞ்சேர்ந்தான். (சo)

பின்னர்த் தாரை துவர்விளையோ டோமா லிகையிற் பெரிதூறு
நன்னீ ராடி யுயர்சரிகை நகுமே கலைவெண் டுகிலுடுத்து
மன்னு பீதக் கச்சணிந்து வாசத் தகர மேதரித்துப்
பொன்னங் காமர்க் கலன்றுங்கிப் புனைந்தா ணறுமென் மலர்நவிரின்.

இன்ன மங்க லப்பொதிர்வி னித்தி யிலந்தை யெலுமிச்சை
வன்னி வில்வம் வெட்பாலை வாகை மருத நாரத்தை
புன்னை கடம்பு பூவரசு புனன்மு ருக்கு மஞ்சாடி
யின்ன கஞறு மாராமத் திருக்கு மதியின் முனர்நடந்தாள். (சஉ)

கச்சைச் சிறிது நனிதளர்த்திக் கனத்த கொம்மைத் தனம்பிதுங்க
வுச்சி யோதி யிடையிடைத்தன் னுள்ளங் கரத்தான் மிகநீவிப்
பச்சென் றிருக்குங் கோடாரத்துப் பைந்தே னிழியு மலர்கொய்து
நச்சு நயம்பற் பலகாட்டி நாடுஞ் சாலத் தொடுநடந்தே, (சங)

சிறிய நீர்க்கால் பலதத்திச் செறிந்த மரத்தி னிழல்வாய்ந்து
நறியு மஞ்ச ரிச்செறிவே நய:க்கு மிஞிற்று முரலமைந்த
நெறியிற் றுனுஞ் சுரங்களொடு நிலைத்தின் னிசையைவிளைவித்துக்
குறும்புன் னகையி னடர்ந்திட்டாள் கொலைவேற்காமர்க் கண்டாளை.

சந்தி ரனுந்த னேக்கொத்துச் சகிக்க வொண்ணு வவசத்தாற்
புந்தி திகைத்துப் பேதுற்றுப் புத்தம் புதுமின் னெனவுன்னி
முந்தைத் தவமே யோருருவின் முன்னர் வந்து முளைத்ததுவோ
வெந்த னல்லூழ்ப் பெருமையினை யென்னே யென்னே யிங்கிசைப்பல்.

வச்சி ரத்தா லாயவொரு வண்ண விம்ப மேயென்கோ
முச்ச கத்தி லிஃதுறழ முடிந்த வுருவ முண்டுகொலோ
மெச்சும்வாணிக்கொழுநன் கைவியன்கொள் படைப்பி னடங்கிலதோ
நச்சுந் தாளைக் கணமனைத்து நாடி லிவண்மு னென்னுமால். (சகூ)

அங்கத் தமைந்த வவயவத்தி னழகை யொன்றுக் குவமமென
விங்க ணெடுத்துக் கூறிடுவ ரேழை மதியை யுடையவரோ
யெங்கு முளவாம் பொருளனைத்து மிவற்றின் கவினை யுறக்கவர்ந்து
பொங்கு முலகிற் சிறப்புற்றுப் புனிதம் வாய்ந்து வாழ்வனவால்.

இன்ன கோலக் கட்டழகி யிங்குத் தனித்துத் தோன்றுவளே
லன்ன மதனுஞ் சரணடைந்திங் கடிமை யாக வாழானே
வன்ன நடைய ளிங்குற்று மவடன் றேசு புடைசுடா
வுன்னு மிந்நந் தனவனமு மொப்பில் வனப்பி னேங்குறுமால்.

இந்த வகையி னுமோத மியைந்த மனத்துப் பலவுன்னுஞ்
சந்தி ரன்றன் புடையணைந்து சரசத் தாளை முறுவலித்து
வந்து நயம்பற் பலபடித்து வாடை யொருங்குக் கமகமெனக்
குந்தி யொருபாங் கரினமர்ந்து கொண்ட விதயக் குறிப்புறுத்தாள்.

கண்டு மதியம் பரவசமாக் காம ருடலஞ் சில்லென்ன
வண்டு காத லுறவடக்கி வகித்த வாண்மை பிழையாமே
தண்ட லைக்க ணுன்வதியத் தனியா யிவளே னிங்குற்ற
ளண்ட மருட்டுங் கொடியமத னந்தோ வினியென் புரிவானே.

என்றன் றவங்கள் பலித்தனவா லிவளுந் தனிமை யாயினளா,
லென்றும் வஞ்சி யனைவிழைந்தங் கேமாப் புறனுான் மாபன்றே
யின்றுந் தகைதல் புரிந்திடுவ லிலேயேற் குறிப்பின்வகை நடப்ப
னென்றுதாரை மலர்முகங்கண் டிசைப்பான் வெண்டண் சுடரோனே.

அந்த ரங்கத் திவணமைந்த வருந்தண் டலையி லுற்றதென்னே
விந்தை மணிமா டந்தனைந்து வேண்டுவவாற் றிலேகொல்லோ
வந்த மிலகு பொற்பணிக ளாள னில்லா வமையத்துச்
சிந்தை யுவக்க மிலேந்திடுதல் தேரு மடவார்க் கறமாமோ. (ருஉ)

தனிமை யாக யான்வைகுஞ் சார்பி னீதுன்னிடலாமோ
புனித சிந்தை யாகாமும் பொருந்தி யுறைதல் புரிந்தாலு
முனிவு மிகுந்து நொதுமலர்கண் முந்தி நிற்ப ரலரிசைப்ப
கனிவி னெழுந்து போந்திடுக கடுக வென்று னிசிக்கோவும்.

சொற்ற சோமன் முகநோக்கித் துணுக்கென் றறைவடாரையிவ
ணுற்ற நின்சார் யான்வரினிவ் வுலக வைவிங் கென்செய்யுங்
கற்ற நினைக்காண் பொருட்டிலங்கு கலன்க டேசும் புனைந்திட்டேன்
மற்ற கரும மகத்தியற்ற மற்றைப் போழ்து சாலுமரோ. (ருச)

உன்னைக் காட்டி னுஞ்சிறுமிக் குயர்வுப் புரிவு முண்டுகொலோ
வென்னைப் போலு மிதுகாறு மேங்கிச் சகித்தா ரொருவரிலே
முன்னை நோற்ற நல்வினையே முயக்கு வித்ததாதலினு
னின்னை யீங்குத் தனிமையுற நேர்த லமைந்தேன் முனியற்க.

முந்து நினது கட்டழகை முன்னி முன்னி மூர்ச்சித்தேன்
சந்த முலேக ணின்னகலஞ் சார்ந்து குழைய விம்முதலு
ம்ந்த முறுமென் கரங்களினு லதுக்கி யதுக்கி யடக்குறுத்தே
னுந்தும் வேளாற் பட்டவனு ருணாக்க வெளியட் டிறமாமோ.

வஞ்ச மின்றி வகுப்பலிவண் வளர்நின் மனுேக் கியமென்னைத்
துஞ்சலொருவித் தழற்படுத்தத் துனையே யின்றுன் சரணடைந்தே
னஞ்ச லென்றிங் காதரிக்க வாலிங்கனமே புரிகென்றுள்
மஞ்சி னெழிலே மருட்டிடுநென் மலர்மென் கூந்தற் கவின்றுனா.

கேட்டுத் திகைத்துக் கலைநிதியுங் கேசப் புளகாங் கிதம்வாய்ந்து
மூட்டு மாகூ ழிங்ஙனமோ முடிந்த தென்பா லெனவுன்னிக்
கூட்டுந் தெய்வந் தனைநெஞ்சிற் குறித்து நன்கு வாழ்த்தெடுத்து
மீட்டு முரைப்பான் ருரைக்கு மேலோர் சொற்ற நீதிபல. (ருஅ)

சுத்த வினநன் மரபுடையாய் சுரர்தங் குருவை மணந்தனைசொன்
முத்த லத்து வனிதையருண் முற்று மிறைமை யினிதுற்று
யுத்தமசுந்த ரீயெனவே யோங்கும் பெருஞான் றிதுகாறும்
வைத்த நீயிங் ஙனத்தொழுகல் வைய கத்தி னேச்சன்றே. (ருகூ)

சுரர்கட் கெல்லா நாயகமாத் தோன்றுத் துணையா நற்குருவாய்
வரங்க ளேற்று நனிவிளங்கி வண்ண யாகம் பலபுரிந்த
வரனை வஞ்சித் திடுவாயேல் வானோர் நாளு நகையாரோ
நரரு மிவ்வா ரியற்றுவரோ நாடு மெற்கும் பவமன்றே. (சுo)

தீரா வெவ்வ முளனேனுந் தீமைத் திரளுற் றவனேனுந்
தேரா மிடிய னேயேனுந் தேரு முறுப்பங் கிலனேனு
நோரத் தலைவ னுனபினர் நேர்மை யுடனே நாளுளுஞ்
சீரா யவனோ டேயுறைந்து திகழ்வ ணல்ல வுத்தமியே. (சுக)

பெற்ற வஞ்ஞை யய்யனுமே பேசா தெள்ளிப் பகைத்திடுவ
ருற்ற மாமன் மாமிகனி யொறுத்து நீக்க முயல்வார்கள்
சுற்றத் தார்கள் கொலைக்கேதாஞ் சூழ்ச்சி நாளு மெண்ணுவரோ
லெற்றுக் கிந்த வபவாத விழைப்பு நமக்கு ளொழிகென்றான்.

சந்தி ரன்பாற் றளர்தாரை தவள முறுவல் பூத்துரைப்பா
ளிந்த நீதங் கணக்கிலவா வெனக்குந் தெரியு மோர்ந்துள்ளே
னுந்து வகுலி நீச்சரிய வுஞற்றல் போலு நீகுயிற்ற
லந்தக் காதையனைத்து மென்மு னப்பாற்கட்டி வைத்திடுதி. (சுங)

மாதர் சையோ கத்துற்ற மறவி யொன்றே யானந்த
மீது மான விம்மைவயி னின்ப நல்குந் தவமுளதோ
பூத சம்போன் முலைத்துணைகள் புல்லிப் பழகி யறியாநீ
யேதங் கூறிக் காலமெலா மேனோ பாணித் திடுகின்றாய். (சுச)

போது நினக்கு விகடமதாப் புகலு மாற்ற மிவ்வமய
மோது காம முள்ளொளித்து முழங்கு கின்ற பொல்லாய்போல்
காதன் மதனுன் மொத்துண்டு கலங்கிப் போந்து நின்சரணி
லாத ரிப்பா யெனவடைந்தே னவமா விடுதல்பவமாமே. (௬௫)

இந்த வுடல நினக்கடிமை யினித்தாள்கிலேனு ரிறைவரையு
மெந்த மான மிரிந்திடினு மெனக்கிங் கின்ன லினியில்லை
யந்த மிளமை யாசைபல வடைவி னிலவா யொருவினனல்
வந்து நின்ற னதாத்தை வழங்கி னினக்கே புண்ணியமாம். (௬௬)

சின்ன வாயு ணுண்முதலாச் சீரின் வளர்த்தேன் கௌமார
னென்ன வமைந்திங் கென்னுளைக்கு மேறு மாறிற்றுணிந்தனைகொ
லுன்னை யணையு முரிமையெனக் குளதென் பதுவு மறந்தனையோ
வின்னுங் கற்ற விஞ்சையினை யீங்குக் காட்டா திசைந்திடுக. (௬௭)

நாய கனுர்சொற் றகைந்திடுதே னலமே யாகா வென்றுரைத்தை
நாய கன்று னீயெனவே நாடு பின்னர்த் தவறுளதோ
நாய கன்றன் பான்மனைவி நாடும் வெஃக லுறமறுத்த
னாய கன்றன் செயலாமோ நடுவி னீயே பிழைத்திட்டாய். (௬௮)

தாரு காவ னத்துழையுந் தனித்த வாயர் பாடியினுஞ்
சீரு லாவு கோதையர்க டிறமு நாமு மறியேங்கொ
றேரும் பிரமன் றனளித்த திகழுங் கலைவா ணியைமணந்தா
னுருங் கண்ணன் ராதையெனு மத்தைக் குயங்க ளணைந்திட்டான்.

கவுத மன்றன் பன்னியின்சீர் கண்ட வாசு வன்புணர்ந்தான்
யுவதி யாய பிருந்தைதனை யூக மோடு மரிவிழைந்தா
னிவர்க டேவர் முனிவரென வின்று மாப முன்னவரி
னவதி யற்ற தீமையெலா மளக்கற் பால வேயாமோ. (௭௦)

மனைவிக் கின்பந் தக்கவகை வழங்க வலியின் மெலிமுனிவ
ரனைய ரயலார் தமைநாடி யனுப விப்பர் சுகமென்னுப்
பனையி நீளோ லையிலெழுதிப் பயமு முறுவித் தனர்நப்பு
முனைப்போன் றவர்கள் பலனிழந்தா ருண்மை யீது தேர்ந்திடுதி.

அழகி னேர்ந்த நல்லார்க ளல்குற் றடத்தி னேமூழ்கிப்
பழகுங் கொங்கைத் துணைப்பற்றிப் பவள வாயி னமுதருந்தி
விழுமி தாய வின்பத்தின் விதத்தை யுணரார் தவமுளுற்றி
யுழல்வர் வனத்திற் சுகமிழந்தே யுடலைச் சுமையாத் தாங்கிநிதம்.

புதும ணப்பெண் டீர்கடமைப் புல்லி யணைத்து வாழ்வதினுங்
கதுமென் றெழும்பு முலைஞெமுங்கக் கலவிக் கலையி னனிதேர்ந்த
விதுமென் முகத்தி யாருடனே விரும்புஞ் சையோ கத்தினல
மதுவே மிக்கப் பேரின்ப மாராய்ந் தறிதி யென்மாட்டே.

வந்த பாவந் தனைநானே வகித்துக் கொள்வே னெளியேற்குத்
தந்த வான்மப் பிச்சையினுற் றழைக்கும் புண்ய நீயேற்பா
யிந்த வுரையை மாற்றுவையே லினிமேற் கணமுந் தாளேனு
னந்த முலவு வடிவமைந்த வாசை நேச நாயகனே. (எச)

துரையே யடடா பயனின்மை சொல்லிக் காலம் பாணித்தல்
புரையே யாகு மிதுவரையும் போதுஞ் சல்லா பம்மனைத்தும்
வரையே நிகர்த்த நின்றோளை வழங்கா யென்றே தாரையதி
விரைவின் சென்று சந்திரனை விரகத் தோடு மணைந்தனளால்,

வேறு.

மூர்ச்சித்துப்பரவசமாய்நனிசொக்கிச்சிறிதளவுமுணங்கிநின்று
பேச்சின்றியிருவர்களுந்தவத்தெளிர்துருதுகவித்துப்பெருமூச்சிட்டே
யோச்சிடுமென்மலர்க்காத்தாலுடலமதுமற்கட்டாயொருங்கணைத்துக்
காய்ச்சியகன்னலின்சுதையின்மிக்கினிக்குஞ்சுவையதரங்களித்திட்டாரால்.

பலதரமு முத்தங்க ளீந்திட்டே பணைமுலைத்தம் பாரஞ் செய்யக்
கலகலவென் றணியாரஞ் சிக்குண்ண மேகலைநற் கலைகீழ் சோர
மலரடி மென்னூபுரங்க ளார்த்திசைக்கக் குறுவியர்வை வதனங்காண
வலமிடமா வரவொப்ப நனிபுரண்டார் வாரிநிகர் வாஞ்சைமிக்கார்.

பின்னர்தாரகையெழுந்தங்கோர்சுற்றுக்கலைசெருகிப்பிறதோளிட்டு
மன்னிருட்கூந்தலையிடதுகரத்தேந்திவலக்காத்தான்மகிழுங்கொண்க
னன்னசந்திரன்கரத்தைமெலப்பற்றிப்பொருக்கெனத்தன்னகத்திற்சார்ந்தா
டன்னிகாற்றிறுமாந்துவிம்மியெழுமிருதனமுந்தத்தளிப்பான்.

சொன்னத்தினுற்குயிற்றிநவமணிகள்வேய்ந்திட்டசொலிப்புமிக்கு
மின்னமளிப்பூவணையின்மீதுற்றுரொழிற்கலையுள்விளங்குமல்குற்
பன்னியினைத்துணைக்கரத்தாலுடுபதியும்பற்றித்தன்பக்கஞ்சேர்த்தான்
புன்னகையதரும்பிடநற்பொற்கலைகளின்றுளக்கம்புறம்புவீச.

துப்பனையமென்செவ்வாய்துடிதுடிக்கப்பொறிச்சுணங்கின்றுதைத்துவிம்மிச்
செப்பனையவிருதனங்கணிவந்தோங்கக்கச்சவிழச்சேணேகாண்டற்
கொப்புடையநடுநடுங்கப்பற்பலசல்லாபங்களொருமைகாட்ட
மைப்படிந்துமதர்த்திடுசெவ்வரிபடர்ந்தகருவிழிகண்மருட்சிகொள்ள

துணைப்பயோதரம்வருடியாடையினைஞெகிழ்ந்தெரிந்துததைந்தக ... ற
பிணைநிதம்பத்தினைத்தடவிப்பசியசைவலக்கூந்தல்பிடரலைப்ப
விணைக்கொடியினிற்சுற்றன்மரமெக்கலெள்ளரிசியெனக்கலத்த
லணையரல்பாலெனச்சிவணன்றுடைநெருக்கல்குறிநேரமணுக்கமாக்கல்

கொங்கையழுத்திடுதெனுதற்பொருத்திடுதலெண்வகையாக்கொள்கலப்பே
டங்குநுதலினைநீவிமுத்தமிடனுச்சிமுலையண்ணுமத்தி
தங்குசகுனம்முதுகுபிடர்கதுப்புநெற்றிதொடைத்தானமெட்டிற்
செங்கைவிரலினைக்குவித்துத்தட்டிடுதல்குட்டிடுதல்செவ்வையாக.

அங்கையினுற்புடைத்திடுதென்மெலக்குத்தற்றர்ச்சனியாலழகினுன்றல்
தங்குதர்ச்சனிமத்தியானெருக்கலவைகளினையடக்கப்பற்றி
யங்குறடுப்போற்பிடித்திடுதற்தர்ச்சனிகொண்டங்கதிற்றுளைத்தல்
பொங்குமுறையேதாடனங்களெண்வகையாகப்புரிந்துபின்னர்.

கண்கன்னங்கொங்கைநுதல்கைம்மூலநடுநிதம்பங்கனிமென்செவ்வாய்
நண்ணுமுந்தியெண்ணிடத்துச்சும்பித்துங்களந்தனத்தினற்கூனுயு
மெண்ணுகடிதடத்திடையிலெதிரெதிராகச்சேர்த்துமியம்பிப்போந்தங்
கண்ணுமிடநுனிவளவாத்தனத்தடியிலொருவனாயுமதன்மீக்கண்ணே.

நாலவாயரேகைகளுநுனியதனிலோனாந்துநண்ணுங்கொங்கை
யாலநல்லவல்குலினுமூங்கிலிலையைப்புனாயவணிநகத்தாற்
கோலமுறக்குறிபதித்துமதாத்திற்சேப்புறவுங்கூறுமக்க
போலத்திலிதழதனில்வடுவுறவுந்தசைந்திட்டபொலங்கன்னத்தே.

பல்லுமிதழ்பொருந்திடவுமுதடுழைழையேபல் லொன்றுபதியவைத்து
நல்லகைம்மூலநு தன் மார்புதொடையிடங்களினேநன்குகாணச்
சொல்லுபல்மிகப்பதித்தும்பெரியவிரல்பின்புறத்தாடிகழுமென்று
ளல்குன்முழந்தாணுபிமார்புமுலைகைம்மூலமணிக்கழுத்தில்.

கன்னம்வாய்கண்ணெற்றியுச்சியெனுந்தானங்கள்கதித்திட்டோங்கு
மன்னவமுதத்தினிலையாராய்ந்துபரவசமாய்மகிழ்சையோகந்
துன்னிடவுமொய்யாரவெழிற்றுணைபுளகிக்கத்துணைவன்றேளி
லன்னதனமிகவழுத்திமனமுருகியெய்ப்பொழியவதரமீந்தே

சங்குவண்வளைநெறியப்பாதசாலங்கலிக்கச்சக்குச்சேப்பத்
துங்கவிதழ்வெளிறடையவியர்வரும்பக்கண்டத்திற்றேகையன்னந்
தங்குபுறுக்காடைவண்டுகுயில்கோழிசெம்போத்தின்றகையவோவொண்
பொங்கொலியிற்கற்பகத்தைப்பின்னியவோர்காமவல்லிபோற்பிணங்கே

சந்திரனையநகணைத்துச்சுரதகீருற்றெடுக்கச்சலிப்பில்தாளைச்
சுந்தரிசெய்லீலையினைமிகவியந்துதைவருடிச்சுதாகான்றுன்
குந்திடுதன்மல்லாத்தலொருக்கணித்தல்குனிதனிற்றல்கூறுமைந்தாம்
விந்தையபல்காணத்துச்சிறிதளவும்பிழையாதுவிளக்கிப்பின்னும்.

கந்துகம்பன்னகம்வெருகுகுக்கிடம்வியாக்கிரமக்கதிகளாற்றிச்
சிந்தையுடன்சிந்தையுமாயாவினுடனுவியுமாச்செவ்விதாக
வுந்துமானந்தசாகரத்ததனிலேயழுந்தியுதித்தயார்க்கு
மெந்தவுலகந்தனிலுங்கிடைக்கரியபேரின்பமேய்ந்திட்டாரால்

அருந்தவச்சந்திரன்றாமிக்கோலாகலமுற்றுரான்புதேங்க
வருந்தியகாமக்கலவிதனின்மொய்த்துண்டிளைத்தனர்களம்மவின்று
மிருந்திடுதற்றகுதியலவெனவுன்னியிருட்குழாமிரிந்துபோகப்
பொருந்தியபல்கிரணசமூகத்துடனேயாதித்தன்போந்தானன்றே.

இருவர்களுமமளியைவிட்டினிதிறங்கிவெளிவந்தங்கெழுநீராடி
யருமுடையாதிகள்பலவுமேபுனைந்துகுய்யாதியடிசிலுண்டு
பெருமையுறநாணுளுஞ்சுகபோகமேநுகர்ந்துபிறங்குபோழ்து
மருவுமவர்க்கட்டமத்துச்சனியென்னச்சுராகுருவும்வந்திட்டானல்.

மறையவனைத்தரிசித்தவெழிற்றாரையோடோடிவணங்கிநின்று
கறையுறுநற்சரணங்கடமையலம்பியந்நீரைக்கண்ணிலொற்றி
நிறைமணியாசனத்திருத்தியருகிருக்கமனைவிமுகநீத்தோனோக்கிக்
குறையுளதோவேதேனுமென்னவவடாமில்லாக்குறையொன்றென்றாள்

சந்திரன்போந்தடிபணியவாசிசொலிப்பூதியினைச்சாத்தித்தன்முன்
குந்திடச்செய்தெவ்விதமாப்போழ்துகழித்தாயெனவக்குருவைநோக்கி
யெந்தையேநின்வரவையெதிர்பார்த்திங்கிருந்ததுடனெழினற்றாரை
சிந்தைமகிழ்வெய்திடவேநின்பணிபோற்செய்திட்டேன்சிறுவனென்றான்.

கேட்டுமிசக்களிகூர்ந்தங்கெழும்பித்தன்னித்தியசற்கிருத்தியங்க
ளூட்டமுடனினிதூனுற்றிவருளுஞான்றுதாரைக்குநன்மதிக்கும்
கூட்டுமனுதாபமொடுசரசசல்லாபங்கள்குறிப்பிற்றேர்ந்து
வாட்டமுறவச்சுறுத்தமனையவளுந்தன்னுண்மைவகுத்திட்டாளால்.

இவர்கடமைச்சபித்திடற்குமாதவனுமனந்தன்னிலெண்ணுமெல்லை
துவரிதழ்நற்றாரைபணிந்துரைத்திடுவடொல்வேதச்சூழ்ச்சியாவு
நவநவமாத்தேர்ந்திட்டநாயகநீநடுநிலையினுடுங்காலைத்
தவறதனையாற்றுமேவதிந்திட்டார்தேவர்தபோதனரிலுண்டோ.

ஊழ்வினையின்படியல்லாலிடையுதிப்பதேதேனுமுளதாங்கொல்லோ
தாழ்வடைந்தபேர்க்கன்றோயாகமத்திற்கழுவாயுஞ்சாற்றிவைத்தார்
பாழ்மதனனூற்பிரமனுதியருமனங்கலங்கிப்பழியேற்றாரோ
கீழ்மையுற்றவென்போல்வார்நிலைமையினையென்னவெனக்கிளர்ப்பதைய.

கடமுறுநீர்கனல்கொளுத்தகொதித்திடின்வேறுளதண்ணீர்க்கலப்புகொள்
கடலெழுந்துபொங்கிடுமேலென்செய்வவொவர்பாலுங்கருணையாள [வார்
மடமையுருவாயவிப்பெண்பேதையுமிச்சிறுவனுமேமயங்கினோமால்
கடமையுனக்கேயன்றோகாத்தளித்தலெனவுரைத்துக்கண்ணீர்விட்டாள்

வியாழமுனியம்மாற்றங்கேட்டலுமேமனமிரங்கிவிகிர்தமற்ற
தயாவுடனேதன்றுணைவிநவைபொறுத்துச்சந்திரனைச்சமீபங்கூவிக்
கியாதியினிலிழுக்குற்றாய்நன்மரபிற்கோர்மாசுகிளைக்கச்செய்தாய்
வியாதியினிற்சயரோகமேயுற்றுநாளுநீமெலிகவென்றான். (கூகூ)

சந்திரனும்விடைகொண்டுபதநடக்கக்கண்டிரும்பத்தா ரைதன்னைச்
சிந்தையினிற்சிந்தையொடுஞ்சிந்தித்துத்தந்தையுழைச்செல்லுங்கா
லிந்தையுறுமகதியாழினையேந்திவெண்ணீறுவிளங்கப்பூசி [லை
மந்திரவைம்பதமோதிவருநாரதப்படிவன்வழியினேர. (க00)

கண்டவுடனெதிர்நாடியகமகிழ்ந்துசிரமீதுகைகுவித்துத்
தண்டமெனவீழ்ந்தெழுந்துநனியேத்தவிருவர்களுஞ்சமீபத்துற்ற
தண்டலையினோர்ஞாங்கரிற்றனியேவீற்றிருக்கச்சசியைக்கண்ணுற்
றண்டமுழுவதுநொடியினிற்சூழுநாரதன்றானறைகுவானல்.

அத்திரியாநன்முனிவன்பன்னுளுஞ்செய்ததவத்தருமையானே
புத்திரனுச்சனித்தெவருமதிதன்னின்மதித்திடவேபோந்தநீதா
னத்தனையிலுறுநரருநனிவெறுக்குமரங்கையினையந்தோவாற்றிக்
கத்துசயரோகத்துணுளுநலிவுறவேகலக்கமுற்றாய். (க0உ)

காமமேபொய்யதனைச்சொற்றிடற்குநிமித்தமெனக்கருதலாகுங்
காமமேகொலையதனைப்புரிந்திடற்குவாயிலெனக்கரைதலாகுங்
காமமேகளவதனையாடிடற்குவாயிலெனக்கழறலாகுங்
காமமேதீமையனைத்தினுக்குமொருதாரகமாக்காணலாமே. (க0௩)

காமத்தாற்சதக்கிருதனுடலமெலாமாயிரமாங்கண்களுற்றான்
காமத்தானிதிக்கிழவனிருவிழியிலொருவிழியைக்கடிதுநீத்தான்
காமத்தாற்கடன்வண்ணன்பெற்றபெருஞ்சாபங்கள்கணக்கினுண்டோ
காமத்தால்விளையிடும்பையெண்ணிலவாமெனமுனிவன்கழறினனல்

கேட்டலுமேமிகவெருவிக்கம்பலையுற்றடிவீழ்ந்துகெட்டேனச்சோ
வாட்டமறப்பலவிஞ்ஞையறிவுறுத்துமிறைவனையேவஞ்சித்தேனல்
மீட்டெலாச்சராசரங்களனைத்தினுக்குஞ்சுகவிளைக்குமேன்மையான
நீட்டினரோயாரேனுமத்தகையதீதினுக்குந்தீர்வுங்கென்றான்.

சுத்தவத்திரியின்குமரன்முகநோக்கியாழ்க்கிழவன்சொல்லலுற்றான்
முத்தனையமூரனுமைநாயகன்றனெழிற்கபர்த்தமுடியினின்றுங்
தத்துகடலலையினிற்சந்தகில்கொழிக்கும்வான்மியூர்த்தலத்தினுப்பண்
வைத்திட்டசுத்தமுறுதீர்த்தங்களவகையாவளப்பம்பெற்ற.

காமநாசனிப்பெயர்கொடீர்த்தமொன்றப்பதியூடுகாணுமந்த
நீமநீர்த்தடமூழ்கிநீறணிந்துகண்டிகையைநிரம்பப்பூண்டு
நேமமுடனைந்தெழுத்தையுச்சரித்துவான்மியூர்நிமலற்போற்றின்
வீமவினைமுழுவதுமக்கினிமுன்னர்ப்பஞ்செனலாவீயுமன்றே.

தங்கையக்காளன்னைமுன்னவன்மனைவியயலார்கடாரஞ்சுத்த
புங்கவகுருதுணைவிதானீன்றிட்டபுத்திரியைப்புணர்ந்திட்டார்க
ளங்காமநாசனியிலேபடியிலக்கணமேயனகராவர்
மங்களவத்தீர்த்தத்தின்மகிமையுரைத்திடவெவருப்வல்லாரல்லர்.

அக்காமநாசனிநீர்நீநாடியதிலாடியருகிலுற்ற
தக்கதிருவான்மியூர்நாதனிருதாடொழுதுதாழ்வையாயின்
மிக்கநின்வினைமுழுதுமிரவிமுன்னிமமென்னவீயுமாமாற்
சிக்கெனவேசெய்திடுகவெனநாரதப்பனவன்செப்பிச்சென்றான்.

விரைவாகச்சந்திரனுந்தாமதியாததுசெய்வான்விருப்பமுற்று
வரைஞாங்கர்படுமகிலுமுயர்களபச்சந்தனமும்வாசப்பூவு [தாங்கி
நிரைதயிர்பாலிழுதுடனேபலகனிகளிலையெனுமென்னீள்கைத்
வரைமகளுயகன்பூசைபுரிதரப்போவதுபோலும்வருநற்பாலி.

உத்தரநற்கூலத்திலொருமூன்றுயோசனையங்குற்றவெல்லைச்
சுத்தமுறுகாமநாசனித்தடத்தினின்மூழ்கிச்சுகமதாகப்
பத்தியுடனீறுகண்மணியணிந்துமந்திரமும்பண்பிற்பன்னிச்
சத்தவியச்சினகரத்துட்சங்கரன்சந்நிதிநின்றுசாற்றுவானால்.

வேறு.

நறைமலர்க் கொன்றை வேய்ந்த நாதனே சரண நீலக்
கறையணி கண்ட முற்ற கடவுளே சரண நான்கு
மறையினுந் தேடிக் காணு மகிபனே சரண நாயே
னறையுனிற் சரணந் தன்னி லண்டினேனாள வேண்டும். (ககஉ)

பத்தியா யடிய ரேத்தும் பண்பனே சரணம் ஞானச்
சத்திய சத்தா னந்த சங்கரா சரண மெங்கு
நித்திய மாகி நின்ற நின்மலா சரண நின்பா
லித்தினஞ் சரணஞ் சார்ந்தே னெளியனை யாள வேண்டும்.

முனிவரர் மூவர் போற்று முன்னவா சரண மேழைக்
கினிவரும் வினையை மாற்றற் கேற்றவா சரண மென்றுங்
கனிவருஞ் சிந்தை யாரிற் கலந்தவா சரண மோன
நனிதருஞ் சரணஞ் சார்ந்து நண்ணினே னுள வேண்டும்.

இவ்வணந் துதித்துப் பின்ன ரெழிலுறு குமுத நண்பன்
செவ்வணம் வாய்ந்த சொக்க நாயகி சேரநிற்கு
மவ்வண மீசன் முன்ன ரணுகியா னந்த மேவ
நவ்வண முற்றுந் தேர்ந்து நண்ணுநோய் நீங்கப் பெற்றே.

இகலரு வான்மி யூரி னெல்லையோர்ந் ததனைச் சூழ்ந்து
புகலரு மாங்காங் குற்ற புண்ணிய தலங்க ளேத்திப்
புகழுறு தந்தை வைகும் புனிதநன் வைப்புச் சார்ந்து
மிகுதிரு மகிழ்ச்சி தேக்க மேவிவாழ்ந் திருந்தா னன்றே.

கிளர்தரு வான்மி யூரின் கேத்திரத் தெல்லையுள்ளா
னுளபல தீர்த்த மின்னு முழையுழை யோங்காநிற்குந்
தளர்வற வமையம் வாய்க்கச் சாற்றுவ றேரி சென்றுன்
களமது கறுத்த வீசன் கழலடி பணியுஞ் சூதன். (கசஎ)

சந்திரன்காமநாசப்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் - கூ௨௨.

## சூரியன் பூசைபுரிந்த படலம்.



அருந்தவ முனிவர் கோடி யடர்புகொண் முழைக டோறுந்
திருந்திய யோக முற்றுத் தினகர மண்ட லத்துட்
பொருந்திய பரமற் போற்றிப் பொருந்துதற் கேற்ற தான
பெருந்தட நியக்கு ரோதம் பிறங்கிடு முதய வோங்கல். (க)

அருகினி லலையாற் கோனு மரியமந் தேக மென்னு
மொருபெருந் தீவங் குண்டா லுயர்தரு விருக்கந் துன்ன
மிருகார சும்பல் பாய்மா மிண்டிய கந்த ரங்க
டருமலை யெழலின் மொய்த்துத் தங்கிய சால்பு வாய்ந்தே. (௨)

அத்தகு தீவந் தன்னி லாயிர மயுத மாக
நித்தமு மொய்ப்பர் மேனி நிசிநிற நிகர்த்த நீரார்
குத்திர மாயங் கற்றூர் கூறிய வெயிறு வாய்ந்தார்
சுத்தமி லசுரர் நாளுஞ் சூரியற் ககித மானூர். (ரு)

மாலைபல் கிரண மோச்சி மங்குலை வெருட்ட விண்ணிற்
காலையிற் கதிர வன்றூன் கவரியைக் கடவுந் தோறும்
வேலையிற் சூழ்ந்தங் கெண்ணில் விசிகங்கள் வீசிப் போரைச்
சாலவு மாற்றி வந்தார் தைத்திய ரானூர் தாமே. (சு)

இவ்வகைக் கரிய வாகத் திராக்கத ரோடு நாளுஞ்
செவ்விய வொற்றை நேமித் தேர்வரு தினக ரன்றூன்
வெவ்விய விதற்பங் காற்றி மேனியின் மெலிவை யுற்றுத்
தெவ்வர்முன் னில்லா தோடத் தேவர்க ணடுங்கி யார்த்தார். (எ)

விண்ணசரீரி யொன்று விண்மணி வதன நோக்கி
யண்ணலே யசுர ரார்ப்ப வமரினை யாற்று தோடே
லெண்ணலர் தம்மை யெற்றி யீர்த்திடற் கேற்ற தாய
நண்ணிய சூழ்ச்சி சொல்வே னுடுமென் றுரைத்த தன்றே. (சு)

சொல்லிய வகையே செய்யிற் றுன்னலர் பாறி மாய
வெல்லுவ துடனே ஞான விபவமு மடைவை கண்டாய்
தொல்லுல கதனிற் றென்பாற் றூன்றிடுஞ் சம்புத் தீவி
னல்லபுத் தேளிர் மோனர் நண்ணுகந் தருவர் போற்ற. (எ)

பந்தியின் குடுமி யோங்கிப் பகர்வெளிக் கங்கை மூழ்கி
நந்தியெம் பெருமான் குன்ற நடுவினிற் றிரிந்து வல்லைத்
தந்தியின் கோடு சந்து தனியகில் மணிபொன் னூதி
யுந்திய கரையின் மோதி யோட்டுறும் பாலி ஞாங்கர். (அ)

தேன்வழி கற்ப கத்தார் தேயரி பிரம னூதி
வான்மலி யமர ரியாரும் வந்தடி பணிந்து போற்ற
கான்குழல் மனைய ராக்கங் ககனவைப் பீந்த செல்வ
வான்மியூர்க் கேத்தி ரத்தை வணங்கிடி லிரிவ ரன்னூர். (கூ)

என்றவா காய வாக்கை யிரவியுங் கேட்ட போழ்து
கொன்றையங் கடவு ளெற்குக் குறித்ததோ ராணை யேற்று
நன்றெனப் புலரி சாய நான்செயும் பணியி னீங்கி
யின்றவன் சேர்வ தெவ்வா றென்றவ ணிருந்த ஞான்று. (கo)

கல்லதுங் கசிய மீட்டுங் கனதியாழ்க் கிழவன் போந்தே
யெல்லைமார்த் தண்ட நிற்கங் கெம்பியா மசனி தன்னை
யொல்லையின் விளித்தங் கேவி யுஞற்றுவிப் பாயென் றோத
நல்லதென் றவனை நெஞ்சி னயந்துபி னினைந்திட்டானால். (கக)

எண்டிசை யண்ட ரண்ட மேழ்கட லேழு தீர்த்த
மண்டல மேழ்பா தாள மாதிர மற்றை மன்றம்
விண்டிட வார்ப்பரித்து விதிர்ப்புறச் சத்த மிட்டே
யண்டயோ னியின்முன் வந்தா னவனெம்பி யசனிதானே. (கஉ)

வசியெனக் கிரண சாலம் வரிசையிற் கொண்ட சோதி
யசனியின் வரவு நோக்கி யாசிகள் பலவுமாற்றி
யசலையை யசைக்க வல்ல வரியவென் பினரா னுய்க்கு
வசனமொன் றுரைக்கக் கேட்டி மகிழ்வுட னென்றிட்டானால்.

உன்னைநா னெம்பி யாக வுற்றதோர் செல்வந் தன்னைப்
பன்னிட வென்வா யொன்று பற்றுமோ பாரி னீதா
னுன்னருங் கரும மொன்றை யுஞற்றியெற் குதவி யாற்றி
மன்னிய புகழை நாட்டி வாழ்குவை யாரு மேத்த. (கச)

தீவெனு மந்தே கத்திற் றிண்ணிய வசுரர் கோடி
யாவரும் போந்திங் கென்னோ டியாண்டுந்தெவ் வியற்று நின்றார்
தாவுமென் றேரி னின்றுந் தனியனாய் மலைய கில்லே
னுவதற் குளதோர் சூழ்ச்சி யவர்தமை வெருட்டு தற்கே. (கரு)

நாடோறும் படரு மென்ற னடையினிற் பிழைத்தே னாகில்
வீடுவ ரகிலத் துற்ற விப்பிர ராதி மாந்தர்
கோடுவெண் கயிலை மேவுங் கொன்றையங் கடவுள் சீறு
நாடுவாய் கரும மொன்று நண்ணிய வென்பொ ருட்டே. (கசு)

### வேறு.

சீரகதிக் கூசியினிற் கிளர்மூன்று யோசனையில்
வாரமுறுங் கீழ்க்கடற்கு வாருணநற் றிசையதனின்
மூரலினி னோலவா முனிக்கெரித்த மருந்தீசன்
சேரவிசை வாய்ந்திட்ட திருவான்மி யூர்நேடி. (கஎ)

அங்குற்ற பெருமான்ற னடியிணைக டரிசித்துச்
சங்கதனு லுபசாரத் தனியபிடே கம்புரிந்து
துங்கநறு மலர்சாத்தித் தொழுதெழுந்தங் கென்பேராற்
பொங்குநீர்த் தீர்த்தமது புரிவிப்பா யத்தலத்தே. (கஅ)

என்றலுமவ் வெழிலசனி யேற்றமுற விறைந்தோடித்
துன்றுபுகழ் வான்மியூர்த் தொல்கேத்தி ரத்தடைந்தே
யென்றுதனக் கிசைத்தவகை யிரவொன்றிலே முகித்து
நன்றுபல வரமேற்று நபோமணிக்குச் சொற்றிட்டான். (கக)

அன்றுமுத லழலவன்று னமர்க்குவரு மரக்கர்தமை
வென்றுதின னனிவெருட்டி வியன்சீர்த்தி வாய்ந்திட்டான்
துன்றியநீ ரலைகொழிக்குஞ் சூரியநற் றீர்த்தத்தி
லென்றும்போந் தாடிடுவா ரிணையிலாச் சுகமடைவர். (உ0)

உலகமுவந் தினிதேத்து மொருசகட்டின் மிசையூர்ந்து
நலமருவ வுதித்துலவு நற்பகலோ னிரவினிலித்
தலத்தினிடைப் பூசித்த தன்மையினு லற்றைமுதல்
குலவவரு மருந்தீசன் குடக்குமுக மாவதிவன். (உக)

அறுபதினு யிரங்கோடி யரக்கர்களை வெலத்தக்க
வுறுதியினை யுதயற்கே யுதவியதோ ரத்தீர்த்தங்
குறுகியவண் படிந்தார்கள் கூறுமுழுக் கொன்றினுக்கு
நறுமலர்கற் பகநாட்டி னுலுயுகம் வைகுவரால். (உஉ)

அத்தடத்தி னெருகுடநீ ரதுமுகுந்து வாகேற்றி
வித்தகர்கள் சூழ்ந்தடரும் விமானத்தி னுட்புக்கங்
கத்தன்செஞ் சடைமுடியி லபிடேக மாட்டிடுவோ
ரித்தனாயி லவர்பேற்றை யெம்போல்வா ரியம்புவதோ (உ௩)

முறையாக வேமூழ்கி மூலமருந் தீசர்தமை
யிற்றவியளா மவர்மனையை யெஞ்ஞான்றுந் தொழுதேத்தி
யுறையுமன்பி னுலுருகி யுற்றதக் கணம்வருவார்
தறைமிசையி லவர்தெய்வந் தாமென்பர் தேவரெலாம் (உச)

ஓதுமக்க ணன்மனைவி யுறவினர்கள் சுற்றத்தார்
தீதறுநற் பெருங்கல்வி திரவியம்பல் விளைவாதி
யேதுதமக் கேய்கவென வெண்ணிடினு மத்தடத்துப்
போதொன்றி னின்மூழ்கிற் பொலிந்திடுவர் புண்ணியரே. (உரு)

தானமந்தி ரஞ்செபங்க டனிப்பிதுர்க்க ளின்கடன்கண்
மானதர்ப்ப ணம்விரத மகேச்சுரன்பூ சைகளாதி
யேனைதடத் தின்ஞாங்க ரியற்றுமொன்றிற் காயிரமா
மானபல னீந்திடுமோ லரியவிந்தத் தீர்த்தமதே. (உசு)

இத்தடத்துக் கூலமதி லிருந்தோங்குந் தருக்களின
முத்தொளிர்நீர் படுதலினுன் மோக்கத்தை யுற்றிடுமே
னித்தமுமங் கதின் மூழ்கி நிலைவான்மி யூருறைவார்
சுத்தநல மாட்சியராச் சோதிசொரூ பரோயாவர். (உஎ)

ஆகையினி லித்தீர்த்த மனைத்தினுக்கு மிக்கதெனச்
சாகைபல வாராய்ந்து சங்கரநற் றெய்வமெனு
வோகையுட னேயுரைக்கு மொருசூத மாமுனிவன்
வாகையுட னமிசத்து மௌனியர்க்குச் சொற்றனனுல். (உஅ)

சூரியன்பூசைபுரிந்தபடல முற்றிற்று.

ஆகச்செய்யுள்-கூரு௦.

---

# இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

அசுரரிற் றலைமை பூண்ட வகிதவுட் டிரானு மின்னுன்
கசிவுடன் றவம தாற்றிக் கடிமலர்த் தவசி னேன்பா
லுசிதநல் வரங்க ளேற்ற வுறுபராக் கிரமந் தன்னுற்
றிசையனைத் தினிலும் வேற்றத் திறமுறச் சேணிற் சென்று. (க)

கற்பகத் தருவி னீழற் கணிகுழற் சசியி னோடும்
பொற்புடன் வீற்றிருந்து புகழ்புரு கூதன் முன்னர்
விற்படு விசிக மேந்தி வியன்சமர்க் கழைத்த லோடும்
வெற்பெனும் வெள்ளை யும்பல் விண்முழு தாளி யேறி. (௨)

கோலமுற் றசுரர்நேரிற் குறுகலுங் களிநல் லியானை
வாலினிற் சிலரை மோதி மருப்பினாற் சிலரைக் குத்திக்
காலினாற் சிலரைத் தேய்த்துக் கரத்தினாற் சிலரைவீசிச்
சாலவே கோற லாற்றச் சாரத ரோடி னரால். (௩)

கண்டபோ தமரர் தெவ்வன் கணைகளா யிரங்களவ்வே
தண்டமீ தழுத்த நொந்து தளர்வுறநூறு கோல்கள்
டுண்டமே லோச்சி நிற்பத் துணுக்கென நிலனின் வீழக்
கொண்டது சோரி வெள்ளங் குலைகுலைந் தண்ட ரேங்க. (௪)

உதிரமே பெருகி யோங்க வொருவயின் காப்ப வைத்திட்
டெதிரினிற் செறுநன் மீதி லிந்திர னூறு கோடி
கதிர்நெடுங் கணைக டூவிக் கடுகடுத் தமர மாற்றி
விதிர்வுறக் கண்டான் விண்ணோர் வேலைபோற் குதுகலிக்க. (௫)

அப்பொழு தமரர் வேந்த னும்பலங் கெழுந்து போந்து
துப்பையுட் டயன் றேரைத் துதிக்கையாற் றுவிப் பற்றிச்
செப்புநாற் கோட்டாற் றூக்கிச் சிதைத்துநுண் டூளி யாக்கிக்
குப்புற வலவன் றன்னைக் கூற்றெனச் செகுத்த தன்றே. (௬)

அகிதவுட் டினனும் வேறங் கணிரத மொன்றி லேறித்
துகிளென விழிகள் சேப்பத் தும்பியின் றுதிக்கை பற்றி
மகிமிசைக் கரக மொன்னு மலிவுறச் சுற்றி மோத
முகிலென வீழ்ந்து சாய்ந்து மூர்ச்சையிற் கிடந்த தன்றே. (௭)

அந்தவே லையினிற் தேவ ரசுரர்க டூசி முன்ன
ருந்துபோ ராற்றி யெண்ணி லுயர்சரந் தூண்டக் கண்ட
முந்திய வவுண ரியாரு முடுகிப்பல் படைக ளேந்திச்
சிந்தினர் கைகள் கால்கள் சிரமுர மொய்ம்பு தம்மை. (௮)

ஆயிரங் கண்ணன் கண்டங் காயிரம் வாளி யேந்தித்
தீயவர் தம்மேன் மேகத் திவலையென் றடாத் தூவி
நோயுழந் தேங்கிப் பாற நூறினன் பின்ன ரங்கே
யாயவில் லேந்தி நிற்கு மகிதவுட் டிரனை நோக்கி. (கூ)

முருகலர் கற்ப கத்தார் முயங்குறு மகனி றத்தன்
பெருகுமத் திரங்கள் கோடி பெருமழை யென்னத்தூண்ட
வருகினி னுள்ள வந்த வகிதவுட் டிரனுங் கண்ணுற்
றெருகரந் தன்னுன் முற்று மொதுங்கிட விலக்கிக் கொண்டே.

கள்ளன்வெங் கோல்கண் முன்பின் கணக்கில தொடர்பிற் றூண்டி
வெள்ளருஞ் சீர்த்தி யேய்ந்த விந்திரன் காமர் மேனி
தொள்ளைக ளென்னுச் செய்து தூணியை யறுத்துத் தள்ளி
வெள்ளத்தின் மிகுந்த தேவர் வெருள்வுற நகைத்து நின்றான்.

கற்றுணைப் புயசு ரேசன் கண்வயின் கனலி காலப்
பற்றலன் மீதோர் வைரப் படையொன்றை யோச்ச லோடு
மற்றவ னஃதை நோக்கி வண்கரந் தன்னுற் பற்றி
நிற்றியென் றெருதண் டேந்தி நேர்வர மகவா னுட்கி. (கஉ)

தவந்தனில் வல்ல னாகித் தமனியன் வாங்க ளேற்ற
விவன்றனை ஞாட்பில் வெல்ல விகல்புரிந் திடுதல் ஞான்று
மவமென வுன்னி யர்தா மரியவோர் சூழ்ச்சி தூக்கப்
புவனியி லடைவே னென்னுப் பொன்னக ரத்தி னீங்கி. (கங)

அமலன திடப்பா கத்தை யாண்டுகொண் டருளு மன்னை
விமலைவந் தவதரித்த மேவரு மேம்பா டோர்ந்து
தமனியக் குன்ற மாதி தாம்பணிந் தேத்திச் சூழு
மிமயவண் வரையி னோர்சா ரிறங்கிவாழ்ந் திட்டா னன்றே. (கச)

வேறு.

இம்மலையி னோர்ஞாங்க ரெழில்வன்னி மந்தார மினியபுன்னை
செம்மயிலை மாலதிமா தவிதளவ நறும்பிண்டி செறிந்த வில்வ
மம்மல்லி வண்கொன்றை கருந்துணர்ப்பா டலமுல்லை யரிய வாய
பைம்மலர்க டமையுழக்கு மளியிசையார் தடவைசெறி பன்னசாலை. (கரு)

தனில்வானப் பிரத்தனெனாத் தானிருந்து முக்குற்றந் தமைக்க டிந்து
தனிஞானத் துறுப்பாய நாற்பாதங் களுமுனாற்றிச் சார்ந்தவண்ண
மினிதமரு மான்மகோ விலினுறையும் பரவான்ம வின்பைத் தேக்கு
முனிபிருகு வைகையினி லொருவைக லவண்போந்தான் முனம்வலாரி.

இந்திரனைத் தெரிதலுமே யெழிற்பிருகு முனிவரனு மெதிர்கொண் டேகி
வந்தனைகண் மிகவாற்றித் தன தாசிர் மத்திலன்பின் வரவ ழைத்துக்
குந்திடவா னாசனமொன் றுறவளித்து முன்னிருந்து குசல மாக
வந்தவகை யனைத்தினையு முசாவியிரு வருமங்கண் வதியு ஞான்று. (கஎ)

மெச்சிடுநற் பிருகுமுனி வரப்பெருக்காற் பெற்றிட்ட மெல்ல ணங்காங்
கச்சதனைப் பீறியதன் முகமாகக் கரியநுனிக் கண்ணா னோக்கும்
பொச்சைமுலைத் துணைதாங்காதொசியிடையோடன்னமெனப் போந்துலாவு
மிச்சையிளம்பிடியதனைக்கண்டொருஞான்றிமையவர்கோனணங்கிச்சொல்வான்

விண்ணிடையே விளங்குபெரு மாக்கமெலா நனியிழந்த விழல னேனு
மண்ணதனி லிற்றையுனைத் தரிசிக்க முற்றமைந்து மகிழ்வ தானேன்
பெண்ணமுதே கண்மணியே கற்கண்டே கனிரசமே பிறங்குமுத்தே [னால்.
யெண்ணருஞ்சீ ருயிர்த்துணையே யெனச்சொலியோர் முத்தமதங்கீந்திட்டா

பிருகுமுனி யஃதோர்ந்து சதமகன்றன் முகநோக்கிப் பேயா நாளுந்
திருகுமனத் தசுரர்களே தெரிவையரை வலிதீர்த்துச் சேர நேர்வா
ரருகவத னோர்நீயு நிகழ்த்தினையிங் கறிவின்றி யாத லானே
கருகியதொ ருடலரக்க னாத்திரிவை யெனச்சாபங் கழறினனால். (உ0)

வெண்ணகைப்பூங் கற்பகநன் னீழலுறு வாழ்விழந்தும் விளங்குமிந்த
மண்மிடைந்த கொடியவிராக் கதனாக வுழலுறுவான் வாய்ந்தேனந்தோ [ல்
நண்ணியவென் னூழ்வினையின் வலியதனைத் தகைத்திடற்குநானென்செய்வ
விண்ணவர்க ணகைக்கவுடல் வாய்ந்தனனென் றிந்திரனும்வெய் துற்றனால்.

பொன்னுலகிற்போகியினையிழந்தவிண்ணோர்தாங்குழுமிப் போந்து மண்ணி
மன்னவர்செம்மணியமுடிதீண்டலினானணிசிவக்குமலர்த்தாள்வாய்ந்த [ன்
வன்னமுசு குந்தனைவை யுழைச்சென் றங் காசிபல வறைந்து தங்கண்
மன்னியபன் னிலைகூறி விண்காக்க வருகவென வகுத்திட்டாரால். (உஉ)

தேவரிடுக் கண்களைத லேகடனு மெனவுன்னித் திறத்தை வாய்ந்தே
யாயவுட னேபோந்தங் ககிதவுட் டிரன்சடத்தை யடலிற் சாடித்
தாவருநற் கற்பகத்தண் ணீழலுழி யேயமர்ந்து தனிச்செங் கோலான்
யாவரையும் புரந்தருளி யினிதமர்ந்தான் முசுகுந்த னியாண்டு நூறே. (உ௩)

வேறு.

இந்திர னுன்மனத் தின்னன் மிருந்தே
சுந்தர மென்முலைச் சுரிகுழற் பெண்சசி
கந்தமிக் குயர்மரைக் கடவுளை நண்ணியே
வந்தனை யுடனவன் மலரவற் றூழ்ந்தனள். (உ௪)

பிரமனுண் சசிமுகம் பெரிது நோக்கியிச்
சிரமமேன் மானனை செவ்விழி நீருகப்
பிரமைகொண் மனத்தொடும் பெயர்ந்திவண் வந்ததென்
கிரமமக் கிரமமோ கிட்டிய தென்றனன். (உ௫)

அகிதவுட் டிரனவ னடர்தா விண்ணுள
சுகிர்தமி கழ்ந்துமண் சூழ்தரப் பிருகுவா
லகிதமுற் றரக்கனி னுயின னுயகன்
சகிவிவ ணெவ்வணஞ் சாற்று கென்றனள். (உ௬)

அன்னங்கண் டலமர வறைதரும் பாவையே
யின்னலை யகற்றுவா யினிச்சின் னுளுளே
மன்னவ னித்தினை வாழ்வுறச் செய்குவன்
மன்னிய வுறையுளில் வைகுக வென்றபின். (உ௭)

நான்முக னக்கண நாரதற் போக்கிநீள்
வான்முக மாயனை விளித்தலும் வந்தனன்
றேன்முகத் தார்செறி தேவேந் திரன்றனைக்
கான்முகங் கண்டுநீ கறையுரு மாற்றுவாய். (உ௮)

என்றலு மியாழ்முனி யிமமலை தொடர்ந்துசென்
றொன்றிய வடவியி னோர்புறந் திரிதரு
குன்றுறழ் புயவலிக் கோமகற் காண்டலுஞ்
சென்றுவந் தருகினிற் சீற்றமோ டேசினன். (உ௯)

அக்கணங் கமண்டலத் தரியநன் னீர்தெளித்
தொக்கபஞ் சாக்கர வுயர்மனு புகன்றிடச்
சிக்கென வடங்கினன் சீற்றம தொருவினன்
மிக்கவந் தடியிணை மீதிற் பணிந்தனன். (ஙo)

மன்னிசை மாடக மகதிநா ரதமுனி
யன்னதொ ராக்கத னும்புரு கூதனைத்
தன்னுடன் வருகெனத் தானழைத் தேகியே
மன்னிய வான்மியூர் வரையிடைச் சேர்ந்தனன். (ஙக)

இந்திர ராக்கத னெல்லையின் மிதித்திலன்
பிந்தின னவனெடும் பிடரியி னாத
னுந்திடக் காத்திரு வுரமொடு நூக்கியே
சந்தடர் சென்மநா சனியுழை யழுத்தினன். (ஙஉ)

அக்கணந் தைத்திய னும்வடி வொழிந்தது
மிக்கநன் மேனியும் வியனழ குற்றது
தொக்கதொல் லறிவுமீத் துலங்கப் பெற்றபின்
புக்கதிங் கென்னெனப் புகன்றனன் வாசவன். (ஙங)

மகதிநல் வீணையன் மகிழ்வொடு கூறுவ
னகிதவுட் டிரானுனை யலைப்பச் செய்தலும்
புகலிட மாகிநீ போந்தனை பனிமலை
திகழ்தரு மவ்வயிற் றேரிடும் பிருகுவின். (ஙச)

மகளினைக் காண்டலும் வழங்கினை முத்தமே
தகுவனுப் போகெனச் சபித்தனன் முனிவரன்
புகழ்தரு மான்மகன் புகன்றதோர் வண்ணமே
திகழருள் வான்மியூர்ச் சேர்த்தன னின்னையே. (ஙரு)

சென்மநா சனியுழைச் செறித்தவைப் போக்கினன்
புன்மைகொ ணிசிசரன் புணர்வினிப் போயது
தொன்மைநல் லறிவெலாந் தோன்றிட வந்தது
நன்மையி னிங்நகர் நண்ணு கென்றனன். (ஙசா)

வாசவன் கேட்டனு மாதவற் போற்றியே
நேசமோ டென்னுழை நீயிவண் செய்ததோர்
வீசிடு நன்னரும் விளம்பற் பாலதோ
தேசனே யென்றுபின் றிரும்பினன் விடைகொடு. (௩௭)

வேறு.

அள்ளிலைவேற் பொற்குலிச மாளுமா யிரங்கண்ணன்
கள்ளகத்தி னின்றுளிக்குங் கழனறும்பூ வன்னியின்கீழ்த்
துள்ளியமான் மழுசத்தி துணைக்கரத்தி லினிதேந்து
மெள்ளருஞ்சீர்மருந்தீச னிணையடிக ளேத்திடுவான். (௩௮)

வேறு.

சுந்தர முகங்க ளைந்துந் தூயவன் புயங்க ளெட்டு
நந்தமர் செவியி ரண்டு நண்ணிய விழிகண் மூன்றுஞ்
சந்திரன் றவழுங் கங்கைச் சடைமுடி யழகுங் காட்டி
யந்தியின் மேனியோடு மமர்ந்திடு மமல போற்றி. (௩௯)

அஞ்செழுத் தோதா தோதி யளிதிரு நீறு பூசி
மிஞ்சிய மணிகள் பூண்ட மெய்யடி யார்க டங்கள்
சஞ்சித வினையை மாற்றித் தனிப்பெருங் கருணை காட்டி
யஞ்சலென் றருளு மெங்க ளண்ணலே போற்றி போற்றி. (௪௦)

ஆதியே போற்றி முக்க ணமலனே போற்றி ஞானச்
சோதியே போற்றி நித்த சுத்தனே போற்றி வேத
நீதியே போற்றி செல்வ நிமலனே போற்றி மங்கைப்
பாதியே போற்றி யென்றன் பரமனே போற்றி போற்றி. (௪௧)

இன்னவா றன்பி னேத்தி யிணையடி பணிந்து வாழ்த்தி
மன்னிய வுவணை சார்ந்து வயமுசு குந்தற் கண்டு
தன்னர சாட்சி யேற்றுத் தருநிழ லமர்ந்தா னென்னப்
பன்னருஞ் சூத முன்னோன் பண்ணவர்க் குரைத்திட் டானால்.

இந்திரன்சாபந்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௬௬௨.

# பிரமன்றிருவிழாச்செய்படலம்.



முந்திய கற்ப மொன்று முகிந்துபின் றேன்று மேல்வை
கந்தம தடருங் கண்ணிக் கருந்துழா யலங்கன் மாய
னுந்தியம் பொகுட்டு மென்மை யுயரிய மரையி னுப்பண்
வந்தனன் முதல்வ னேக்கான் மறையவ னெருவன் றனே. (க)

வேதியன் வந்து தோன்றி விண்முகி லனைய மேனி
யாதியி னடியிற் றழ்ந்தங் கன்புட னேத்திப் போற்றி
நீதியி னியற்ற வேண்டு நீள்பணி பணிக்க வெற்குத்
தாதையே யென்னுத் தாழ்ந்து தலைமிசைக் காங்கு வித்தான். (உ)

மைந்தனே நினக்கு மெற்கு மன்னுபல் லுயிர்த மக்குந்
தந்தையாத் தாயாய் மற்றைத் தமரெனப் போர்ந்த வெம்மான்
சிந்தனை யாகி நின்று செவ்விய தவமு ஞற்றி
யிந்தநல் லண்ட மாக்கு மேற்றம தடைதி யென்றான். (ங)

என்னலும் பின்னு மேம வெழிலுறுங் கமல யோனி
பின்னைதன் கேள்வன் றளைப் பெரிதுவக் தேத்தி யைய
மன்னிய கேத்திரத்துள் வரம்பல விளைவி னல்கு
முன்னருந் தான மொன்றிங் குவகையி னுரைத்தி யென்றான். (ச)

கேட்டபோ தன்பின் மூழ்கிக் கேசவன் புளக முற்று
நாட்டமோ ரெட்டு வாய்ந்த நான்மறை யோய்நி னக்குப்
பாட்டளி முரலுஞ் சோலை பாவிய தான மொன்று
காட்டுவ லதனினூங்கு கனவினுங் காணே னுனே. (ரு)

இப்பொழு தந்தத் தான மென்னுளத் தெழுந்த தன்சீர்
செப்பிடற் குரிய தாய சீர்த்தியிங் கினிது வாய்ந்தேன்
மைப்படிந் தலருங் கண்ணுள் மலைமகள் பாகத் தெங்க
ளப்பனே சொல்வ தல்லா லியாரதிந் தருமை தேர்வார். (சா)

சிவபுர மண்ணிற் போந்து திருத்தல மாயிற் றென்கோ
நவமிகு கயிலைக் குன்ற நன்னில மாய தென்கோ
வவனியி லதன்பே ரோனு மஞ்செவி கேட்கி லாரே
தவமுடைத் தேவ ரோனுஞ் சவமெனச் சாற்ற லாமே. (எ)

வேதமோர் நான்குங் கூடி வியன்கிரி யான வந்த
வோதருந் தலம வாசி யுயரிய மயிலதாகக்
காதலோ டன்னை யேற்றுங் கபாலியந் தலமு தக்கு
மாதொரு பாகன் வைகும் வான்மியூர் நடுவுண்டாமால். (அ)

என்றுதன் னத்தன் சொற்ற விசையெலாஞ் செவிம டுத்து
நன்றென விடைபெற் றேகி நண்ணிய யாம நாடி
யொன்றிய தருமம் பூத்த வுவமமி லத்த லத்து
மன்றல ரிதழ்ம ணக்கும் வான்மியூர் மருவி னுனல். (கூ)

எல்லைகண் டஞ்ச லித்தங் கிருநிலம் படிய வீழ்ந்து
மெல்லென வெழுந்து போந்து மேன்மைகொ டீர்த்த மாடி
நல்லவெண் ணீறு பூசி நாடுகண் மணிகள் பூண்டே
யொல்லையி னேர்சா ருற்ற வுயரிய வாரா மத்தே. (கo)

ஒருபதி னுயி ரந்தா னுற்றிடும் வற்ச ரங்கள்
வருமறை யாளன் மிக்கு வருந்திய தவமு ஞற்றப்
பருவரை பயந்த வெங்கள் பரசிவை பாங்கர் மேவத்
திருமுடிக் கங்கை யும்பர் திகழ்தரு மதியு லாவ. (கக)

வெள்ளியங் கிரியின் ஞாங்கர் பொன்மலை விளங்கு மாபோற்
றுள்ளிட விடைமேற் காணச் சூழ்தரு தேவர் மோன
ரெள்ளரும் பூத நாத ரியக்கர்கின் னரர்கள் மற்றோர்
தெள்ளிய கீதம் பாடிச் செப்புதல் கடவி னேங்க, (கஉ)

சத்திர மால வட்டங் தனிக்கொடி கோண்கொள் தண்டஞ்
சுத்தசா மரைசாந் தாற்றி சுடர்தடி யொலியன் மற்றும்
பத்தியிற் பாரி டங்கள் பண்புட னங்கை கொள்ள
வெத்திசை முற்றுஞ் சூழ வியமொடு சூதர் பாட. (கங)

வாசனை கவர்ந்து தென்றல் வந்துமேன் மோத லாலே
தேசுறு மலைசு ருட்டுங் திகழ்தரு கங்கை நன்னீர்
வீசிமென் மதியி னுற்ற வீறிய மாசை நீக்கும்
பேசரு மவுலிப் பெம்மான் பிறங்குநற் காட்சி தந்தான். (கச)

எண்ணருங் கருணை வாய்ந்தே யென்முனர் வந்தா னீச
னண்ணிய ஞான மெய்தி கலனுறப் பெற்றே னென்னுக்
கண்ணனன் மகன்விரைந்து கரங்களைச் சிரமேற் கூப்பி
யண்ணலி னடிபணிந்தே யன்புட னேத்தி நின்றான். (கரு)

பிரமனை நோக்கிப் பெம்மான் பெரிதுநீ தவமு ஞற்றி
யுரமது நைந்தா யென்னு வோரிரு கரங்க டம்மாற்
சிரமம தொருவ நீவிச் செம்மையின் விரும்பி வந்த
வரமது கேட்டி யென்றான் வள்ளலை வணங்கி நின்றே. (கசு)

அரியதொர் காட்சி யென்பா லருளுறக் கருணை கூர்ந்து
பிரியமொ டளித்த பின்னும் பிறிதுவேண் டுவது முண்டோ
வுரியநின் கழல்கள்பேண வுயர்தவ முற்ற வெற்கு
விரியுமெவ் வுலகு மாக்கும் வியன்றொழி லருள்கவென்றான். (கஎ)

என்றனு மிறைவன் முன்ன ரிறைஞ்சுவே தானவ நோக்கி
நன்றுநீ புவன முற்று நமதரு ளாணை செய்ய
வின்றுயாந் தந்தோம் வன்மை யிச்செயன் முகிந்த பின்னர்
நின்றவிவ் வான்மியூரி னீடிய விலிங்கங் கண்டு. (கஅ)

அன்னதாங் தெய்வ லிங்கத் தருகினிற் றடநின் பேரான்
மன்னிடக் கண்டங் நீரான் வயமுற வபிடேகத்தைச்
சொன்னதொர் மூர்த்திக் காட்டித் துலங்குநன் விழாவி ழைக்கி
னன்னர்நி னெண்ண முற்று நாடுதி யெனம றைந்தான். (ககூ)

எழுந்துமுன் கற்பம் போன்றங் கெவற்றையு மயன்மு கித்துக்
கொழுந்தடர் கானி வந்து குலவிய வான்மி யூரி
னழுந்திய வற்புமேவ வருந்தட மொன்று கண்டு
தொழுந்திரு வருட்கு றிக்குச் சுத்தவங் நீரா லாட்டி. (உ0)

கந்தமென் மலர்க ளோடுங் கவினுற வில்வஞ் சூட்டி
யுந்திய வேறு வேறு யோதனம் பலவு மூட்டிச்
சிந்தையிற் களிப்பு மிக்குச் சீரெலா மெடுத்துப் பன்னி
வந்தனம் வகையிற் செய்து வரம்பல வேய்ந்த பின்னர். (௨௧)

வேறு.

ஒருவாதசினகரத்தைவலம்வந்துவெளிபோந்தங்கும்பர்மெச்சுந்
திருவான்மியூர்வைப்பினெழுந்தருணம்பெம்மாற்குத்திருவிழாவைப்
பெருமாகத்துற்றவரும்பூவலயத்துள்ளாரும்பெட்பினுட
வருகாகவோர்ஞாங்கரெழிலுறுநன்மண்டபத்துளமர்ந்துவைகி.

கும்பமுனியாதியசௌமியர்வருகைநனிகூவிக்குறித்துநோக்கி
நம்பெரியசொக்கநாயகிபாகத்தினிதமருநக்கனூர்க்கிங்
கம்புவியிலரியவிழாவாற்றியெவருங்காணவார்வங்கொண்டேன்
பம்பியவாகமமுன்னூல்சொற்றிட்டமுறையதனைப்பன்னுகென்றான்

கேட்டனுமேகுதுகலித்துமறையவனைவாழ்த்தெடுத்திக்கிளக்குஞானக்
கோட்டமமர்மருந்தீசனடிமனத்துச்சிந்தித்துக்குலவுநீதிக்
கூட்டமுறுமாகமத்துட்குறித்தவகையனைத்தினையுங்குறித்துநோக்கித்
தேட்டமுறத்திருவிழாத்திறப்பொலிவுநடத்தும்விதிதெரித்திட்டாரால்

காமிகாகமமுதலாநூலனைத்துந்திகழுறுநற்கருத்தங்கோர்ந்து
பூமியப்பொன்னுலகமற்றைநிலத்துள்ளாரேவர்களும்புகழினோடுங்
காமுறவேவந்தணையக்கருத்தகத்துச்சிந்தித்துக்கடுகக்கூவிச்
சாமிதனக்குயர்விழாநடத்திடற்குமறையவனுஞ்சார்ந்திட்டானல்

பாயிருளைநனிசீக்கும்பலமணிநற்குவியலினைப்பதிப்பித்திட்ட
வாயிரத்தெட்டுறுமாற்றுப்பசும்பொலனுலமைத்தநயவணிகடம்மை
யாயபொருளனைத்திற்கும்போழகையளித்தருளுமரியனெங்க
ளுயகன்செம்மேனியுழைபுனைந்துதரிசித்தார்களுகலோகர். (௨௬)

அழகுறுமென்மலருடுமணமாகியமர்ந்தெழூஉமமலனூர்க்குப்
புழுகுகுங்குமஞ்சந்துநிறைகதம்பநானங்கற்பூரமப்பி
முழுவிசும்பினையிடையிற்கலையென்னப்புனைந்தருளுமூர்த்திபாலிற்
றழுவியபொற்சரிகைசெறிபீதாம்பரத்தினையுஞ்சாத்தினாரால்.

கோயிலின்வாயுளநிவேசனமனைத்துமலங்கரித்துக்குலவுஞ்சீல
மாயநான்மாடநியமங்கள்பெருஞ்சிங்காரமல்குவித்துத்
தூயவருந்திருத்தேரம்மேருவெனத்தோன்றிடவேதுலங்குவித்துப்
பாயகொடிபடர்தரமாத்தோரணங்கள்பத்தியினிற்பரப்பினரால்.

அம்பொன்வச்சிரம்பச்சைபவளமணிமாணிக்கமமையச்செய்த
தம்பங்கடனில்வாழைகமுகிளநீர்க்குலைகளெலாஞ்சதூராத்தூக்கி
வம்பலரும்பலமலரின்மஞ்சரியோடணிதொங்கல்வரிசைநாலப்
பம்பியநல்விதானமுறப்பூப்பந்தர்வீதிகளிற்பண்ணுவித்தார்.

அரிசிவெண்மாவொடுசுத்தநீர்கலவிப்பொன்வள்ளத்தடைத்துப்பின்னர்
பரிசனர்களேந்திவரப்பயோதரங்கள்கச்சதனிற்பம்பிவிம்மக்
கிரிசமுறவிடையதனுற்கூனியபோற்பூவையர்கள்கிளர்ந்துவந்து
வரிசையெனக்குனிந்துவீதிகடோறும்வண்ணமுறக்கோலஞ்செய்தார்

பங்குனிநன்மதியதனிற்கொடிதூக்கிப்பலிவிழாபண்பினுற்றித்
தங்குமுதனுளாதிபஃதுதினம்வாகனங்கடம்மினேற்றி
யைங்கரன்சேவற்கொடியோன்றண்டீசனம்மையுடனரனுருக்குப்
பொங்குவிழாவியற்றிடர்க்கங்கெத்திக்குமுள்ளாரும்போந்தாரன்றே

காலையினிலலங்காரங்கவினுறவேவீதிவலங்கண்டபின்னர்
மாலையதுவந்துறலுமருந்தீசனணிவிழாமருவவுன்னி
வேலையெனவடர்ந்துவிண்பண்ணவருமன்னினர்கள்விரவிப்போந்து
மேலைசிவபுரமெனவேவிளங்குதிருவான்மியூர்வீதிவந்தார்.

மறையவர்சொல்வேதபாராயணத்தோடடர்புகொளவந்துசூழ்ந்தார்
முறைமையினினாரதகிம்புருடரியாழ்மீட்டிவரமுன்னஞ்சூழ்ந்தார்
நறைசெறிகுங்கிலியதூபக்கலயமேந்தினருநன்குசூழ்ந்தார்
கறைமிடற்றன்பன்னுமாவளிகூறியடியவர்கள்கலந்துசூழ்ந்தார்.

வெள்ளியபட்டாடையினிற்சித்திரித்தவெகுண்டைகள்வீசவோங்கித்
துள்ளிடுபன் மயிர்க்கவரியாலவட்டஞ் சாந்தாற்றி துதைந்து நீரு
மொள்ளியசீர் மணிக்கொடிக ளெண்ணரியதாங்கினர்களுலகமியாவும்
வெள்ளமெனவந்தணைந்தாரெள்விழுதற்கிடமின்றிவிளங்கினரால்.

சூரியன்சந்திரனக்கத் திரமாளி கரிசிங்கந் தொடர்தீ வர்த்தி
பாரிசத்து முன்பின்னுங் கோடிசூ ரியரென்றுப் பரிவினேந்த
பேரிகையாழ் கைப்படகம் பறைமுரசு குடமுழவுபெரியசின்னம்
பூரியெக்கா ளஞ்சங்கமினந்தாளந்தண்ணுமையும் பொலிவினூர்த்தார்.

வீதிகளின் வேதிகைக டோறுநற் கும்பங்கள் விளக்குஞ்செய்ய
வேதியர்க ளாதியர்நல்லட் டமங்க லத்துடனே விளங்கு தட்டி
லோதரும்பல் கனிதேங்காய் தாம்பூலம் பொற்காசோ டுறுகற்பூரச்
சோதியினைச்சோதி முனங் காட்டித்தம்வேட்கையினைச்சொல்லிநின்றார்.

ஆடுவர்க டமைமறந்து சிலவடிய ரவ்வாடன் முற்றுநோக்க
நாடுவர்கள் கூட்டமெனச் சிலவடியர் நயமனைத்துநன்குமேவப்
பாடுவர்கள் பலபாடல் சிலவடிய ரப்பாடற் பயனைக் கேட்கக்
கூடுவர்களெல்லையினிற்சிலவடியர்குதுகலித்தங்குவகைகொண்டே.

மறைமுடிவின்விளையாடுநம்பெருமானிவண்வந்தான்மழுமுன்னேந்திக்
கறைவிடமுமமுதாகவுண்டபரனிவண்வந்தான்கயிலைநீங்கித்
துறைகெழுநன்வான்மியூர்மருந்தீசனிவண்வந்தான்சோதிஞான
விறையவன்வந்தான்வந்தானெனச்சின்னமெம்மருங்குமெடுத்தங்கார்த்தார்.

பச்சிலையொன்றிட்டார்க்குப்பலநிதியந்தந்தாளும்பரமன்வந்தான்
பச்சைமாலயன்முதலோர்க்குரியசெயல்வகுத்தருளும்பண்பன்வந்தா
னிச்சைவளர்சிவனடியரெஞ்ஞான்றுமேத்திடர்க்கிங்கெளியன்வந்தா
னிச்சைமிகுஞ்சொக்கநாயகிகணவனெதிர்வந்தானிலங்கவென்பார்.

எளியர்களையாளுதற்கேயிருங்கருணைசுரந்திடுகவென்றார்சில்லோர்
களியுறுநற்செல்வமுறக்கடைக்கணிப்புக்கூட்டுகெனக்கரைவார்சில்லோ
ரளியமரும்பலவிஞ்சையடைந்திடவேயருடருமென்றறைந்தார்சில்லோர்
வெளிறுலகைநனிமறக்கும்போதமதுதருதியெனவிண்டார்சில்லோர்.

நங்கடவுடிருவீதிபோந்தருணல்லமயமிதுநாடுகென்று
வங்கொருவருக்கொருவரோடோடிநனிவிளித்தங்கணைந்தேவல்லைச்
செங்கரங்கடமைச்சிரசின்மேற்குவித்துப்பலபாடிச்செவ்விதாகச்
சங்கரனூர்விழாப்பொலிவைக்கண்ணிரம்பத்தரிசித்துத்தஞ்சமென்பார்.

வருந்திரளினடுவிலிருளுங்கருமின்கொடிநேரவரிசைமேவி
யுருத்திரப்பேர்க்கணிகையர்கள்பரதநாட்டியம்பலவுமுளுற்றிச்செல்லக்
கருத்ததனிற்குதுகலித்துக்காளையர்கள்பலகுழுமிக்கலவப்பன்னீர் [டாரால்.
தெருக்கடனில்வருவார்மேல்மழைத்தூவலெனத்தெளித்துத்திறங்கொண்

இத்தகையதுப்புரவினுடன்சொக்கநாயகிநல்லிமையச்செல்விப்
பத்தினியினுடன்வீதிவலம்போந்துவிண்விபுதர்பரவிப்போற்றக்
கத்தனம்வான்மியூர்க்கண்ணுதலோன்யாவர்க்குங்கருணைநல்கிச்
சுத்தகோபுரவாயிலணித்தாகமண்டபத்துத்தொக்கார்மாதோ.

வந்திடலும்பலவரிசைவிப்பிரர்கள்வணக்கமொடும்வழங்கிப்பின்னர்க்
கந்தநன்னிவேதனங்கள்வாய்பொத்திமுன்கொணர்ந்துகனிவிற்காட்டி
யெந்தைசிவசிவசிவசங்கரதேவமாதேவவீசாவென்று
வந்தரர்களுயர்தீபாராதனைமுன்னன்பினொடுமடைவிற்செய்தார்.

பாடகமெல்லடியரம்பையாதியர்களனநடையிற்பையவந்து
நாடகநட்டுவர்தாளவிசைமலியநயநடனநன்கிளுடி
யாடகத்தட்டினைத்தமதுகரமேந்தியாலத்தியழகிற்சுற்றிப்
பாடினர்பல்லெச்சரிக்கைசுபசோபனங்கணனிபரிவுகூர்ந்தே.

வேத்திரத்திண்படைதாங்கிநந்திமுனமேசெல்லவிமலர்பின்னர்க்
காத்திரகோபுரவாயிலுட்புக்குவிமானமதைக்கனிவிற்சூழ்ந்து
தோத்திரங்கள்கரதாளமுழங்கவாகனமிழிந்துதுதைமாணிக்கம்
பூத்தொளிருமணியரியாசனமமர்ந்தான்புண்ணியநற்பொருளாம்ன்னே

இவ்வகையாப்பலவைபவத்துடனேயெவ்வுலகுமினிதுபோற்ற
வொவ்வியபஃதல்கலினும்வெவ்வேறுவாகனங்களுயர்விமானஞ் [த்
செவ்வியநற்றிருத்தேர்களிவைமேல்விழாக்கொண்டுசிறந்தபின்னர்
திவ்வியபுண்ணியரூபப்பெரும்பாவைவேலையினிற்றீர்த்தமாடி.

அழகியசெம்பொற்கோயிலினையணுகியவ்வணையிலரிதின்மேவிக்,
குழகனஞ்சொக்கநாயகிவாமத்தினிதமரக்குலவிவந்து
கழல்பணியுமடியவருக்கரியபொருண்முற்றுறவேகனிவினீந்தங்
கெழுதருபீடத்திருந்தானிலங்குதிருவான்மியூரீசன்றானே.

அடுத்தநாடனின்மவுனபலிதூவிப்பிறபூசையாற்றிப்பின்னர்த்
தொடுத்தநாளந்தணர்நான்மறைவழுத்தமுனிவர்கடொழுதுநிற்க
வெடுத்தகொடியினையிறக்கிமற்றொருநாடிருக்குளத்திலேற்றமேவ
விடுத்ததெப்பவிழாவணியுமேகண்டுயாவர்களும்விழைந்திட்டாரால்

அருந்திருவிழாவகுத்தவோர்பஃதுவைகலினுமன்னதானம்
விரிந்தபூதானஞ்சுவண்தானமவரவர்க்குவேண்டுந்தானம்
பரிந்தளித்துப்பண்ணவருமண்ணவருமுனம்வந்துபரிந்துவேண்ட
வரம்பலவுமேயளித்துநான்முகன்றான்வீற்றிருந்துமகிழுமெல்லை.

காராரு மேனியன்ற னுந்திதனின் முளைத்தவெழிற் கமல வேத
னீராடுஞ் சடைப்பெம்மான் வான்மியூர் மருந்தீச நிமல னுர்க்கங்
கீராறு மதியங்க ளினுமிக்க விழாக்களெலா மினிது செய்து
சீராருந் திருவடியைப் போற்றிச்சந் நிதிமுன்னர்த்திகழ நின்றான்.

அத்தருவந்தணன்முன்னர்ச்சிவபெருமான்சிவையுடனேயழகதாகச்
சுத்தசிவ லிங்கத்து முனமுருவ மாவெழுந்து தோன்றி யன்ப
நித்தியநை மித்திகவி ழாக்களெலாம் புரிவித்தாய் நிரம்ப வார்வம்
வைத்தனநின் றனக்குரித்தாய்வேண்டுவரங்கேளென்னவகுத்திட்டானல்.

கேட்டலுமேதமனியன்றானறும்பூஞ்செவ்வடிபணிந்துகிளம்பிநின்று
நாட்டமுட னெவரேனும் வான்மியூர்த் தலமதனை நாடி நன்கு
வேட்டமுற விழாவணியை நடத்துபவர் செய்விப்பர் விளக்கமான
மேட்டிமையுற்றுன்னடிக்கீழ்வாழ்ந்தருளும்புண்ணியத்தைவிரவச்செய்வாய்

இத்தலத்துவிழாப்பொலிவைத்தரிசித்தாரேதேனுமியன்றமட்டும்
பத்தியுடனவ்விபவநடத்துதற்கங்குபகரித்தார்பண்பினுளு
மொத்தபணிபுரிந்திட்டாரியாவர்களுந்தக்கவகையுறுதிமேவு
முத்திநிலையுறுமாறுநன்னெறியையளித்திடுகமுதல்வவென்றான்.

பலவரங்களின்னவகையாசித்தபங்கயனைப்பாமனோக்கி
நலமுடனேதந்தனநாநின்னுலகமேயடர்ந்துநாடுகென்னு
வலமதனிலேயொளிருஞ்சொக்கநாயகியோடும்வண்மையான
தலமகிழுஞ்சிவலிங்கந்தனிற்கலந்துமிக்கொளிர்ந்தான்றற்பரன்றான்

சிவபெருமான்கரந்தருளிப்போயினபின்பிதாமகனுஞ்செவ்வேயேத்தித்
தவமிருந்தன்னுலகடைந்தான்பின்னொருகாலந்தனில்வெண்சங்கமேந்தி
குவவுசற்பகத்தோன்றலாதியர்சடிருவிழாக்குலவச்செய்து
நவநவமாம்வரங்களினையேற்றுவதிந்தனனெனவேநவின்றான்சூதன். (ருசு)

பிரமன்றிருவிழாச்செய்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள் எசஅ.

---

# வேதம்பூசைபுரிபடலம்.

அசுரரிற் சோமு கன்று னகிலமே யுருவ மானு
னிசைவுடன் றவம தாற்றி யியைந்தபல் வரங்க ளேற்றுத்
திசையனைத் தினிலு முள்ளார் திடுக்கென நடுக்கங் கொள்வா
னுசிதம துற்று வாழ்ந்தா னொருவரும் பொருவா ரின்றே. (க)

பவமெலாந் திரண்டு வந்தோன் பகர்நிசி வடிவ மானே
னவனியிற் றிரிந்து யாரு மலரிடக் கொடுமை யாற்றித்
தவவுல கதனிற் போந்து தானவர் வெருவ வாட்டி
யெவரும்வந்தெதிர்க்கக்காணுனெமனெனச்செருக்குவாய்ந்தான்.

சத்திய லோகஞ் சார்ந்து தமனியன் றன்னை நோக்கிக்
குத்திர மொத்த தன்கோக் குவவுதிண் புயத்தைத் தட்டச்
சித்தம தடங்கி நொந்தான் றிசைமுக னென்றங் கெற்றி
யத்தடத் துற்ற வேத மனைத்தையும் வாரிக் கொண்டான். (ங)

மறையனைத் தினையு மள்ளல் வயனுற வழுத்தி வைத்துத்
திறைசெறி கடலிற் புக்குச் சேர்ந்தன னவுணன் றானே
மறையவன் றிகைறிகைத்து வயங்குபா லளக்கர் நாடி
நறைகெழு துளவம் வேய்ந்த நாரணற் குறைத்திட் டானல். (ச)

ஆனதோர் கமல நாப னருஞ்சின மிக்கு வாய்ந்து
கானரு நீள மென்னுக் கதித்ததோ ருடல மேவு
மீனம தாகி யாழ்ந்த வீரையிற் பாய்ந்து ழக்கிப்
போனவோர் தகுவன் றன்னைப் புனலினி னேடுங் காலே. (ரு)

வாலினல் வீச லாலே வாரியுங் கதுவிச் சிந்தி
நாலிரு சார்வு நீத்த நண்ணிட நீரே ழும்பி
யாலமென் றெங்குந் தூவ வருணனுங் கண்க ரிப்பக்
கோலிய வண்ட பித்திக் குவட்டினுங் குறுகிற் றன்றே. (சு)

சோமுகற் பார்த்த லோடுந் துணுக்கெனம் பாய்ந்து தீய
னுமவன் குருதி கக்கி யலமர வுயிரை யுண்ணத்
தாமரைப் பொகுட்டுத் தேவன் றுன்கரங் குவித்து நேர்ந்தா
னேமமோ டளித்த தந்த வெழின்மறை யனைத்து மீனம். (எ)

வாலெயிற் றரக்கற் கொன்ற வன்மையி னென்னை நோ
மேலுல கதினுமுண்டோ விறலிய ரெனத்த ருக்க
மாலவன் பண்டை மேனி வாய்ந்திடற் கரிய னாகிக்
கோலவண் சகுலி யென்னக் குரைகட லூடே தங்கி. (அ)

கடலுழை யுலவுந் தோறுங் கரைவயி னலைபி றழ்ந்து
புடவியிற் பாய வோதம் புடைநக ரங்கண் மூழ்க
விடைவெளி யெங்கு மின்றி யெழுகட லொடுங்க லந்து
நடலைய தெவர்க்குஞ் செய்ய நான்முகன் முதலோர் நோக்கி. (கூ)

அருளதே வடிவ மாய வரியதோர் கயிலை வெள்ளிப்
பெருவரை நாடித் தெய்வப் பிரான்றிரு முன்னர்ச் சென்று
வெருவரப் புடையொ துங்கி விரைக்கழன் மலரை யேத்தித்
திருமகள் கணவன் மீனுத் திரிந்திடர் செய்தல் சொற்றூர். (க0)

கண்ணுதற் கடவு ளீசன் கருணையாற் கடைக்க ணித்துக்
கண்ணவ்மிக் ககங்கா ரத்தாற் களித்தன னதனுன் மீனின்
வண்ணமே வாய்ந்து முன்னர் வண்ணநன் மேனி கொள்ளான்
றண்ணின மணிகொ ழிக்குந் தகுங்கடற் புடையி லென்றுன். (கக)

கறைகெழு நீலகண்டக் கடவுளே கருணை வாய்ப்ப
நறையெழுந் துளபத் தேவ னவையினை மன்னித் திந்நாண்
முறைமையிற் காத்தல் வேண்டு முற்றுமென் றடைவிற் கூறி
மறையவ னாதி யோர்செம் மலரடி வாழ்த்தி நின்றூர். (கஉ)

தேவர்த மாற்ற மன்பின் றிருச்செவி யுறமடுத்தே
யாவலிற் சாத்தன் றன்னை யக்கண மாங்குக் கூவி
மேவரு முவரிற் போந்து மீனமா யியங்கு மாயன்
பாவகச் செருக்கை மாற்றிப் படருக வென்று ளுதி. (கரு)

அடுபடை சாத்த னேகி யரியதோர் வலைய ளுகித்
தொடுவலை யோச்சி நேடத் துடக்கியுங் காணு ளுக
நடுக்கடற் றாவி மீன நடுநடுங் கிடக்கர்ச் சித்துப்
படுக்கென விழியி ரண்டும் பறித்தனன் செருக்கொ ழித்தான்.

கண்ணினைக் கொணர்ந்து சாத்தன் கண்ணுதற் பாதம் வைத்து
நண்ணினன் றேவ தேவ னருமுத்த முறுவற் பூத்தா
னெண்ணரு மண்ட ரியாரு மிறையடி பணிந்து வீழ்ந்து
பண்ணுறத் துதித்துத் தத்தம் பதங்களி னேகி னூரால். (கரு)

மீனவிர் வடிவ முற்ற விண்டுவு மதர்வு நீங்கி
யானதன் னுருவ மாற்றற் கருங்கட லதரி னேகிக்
கூனலங் கரையின் முத்தங் கொழித்ததண் ணலைசேர் வாரித்
தானமெங் கணுமே வீசத் தண்ணொளி பரவி யோங்கும். (கசு)

கோணமா மலையிற் போந்து குறித்தநற் றவநன் காற்றிக்
கிணம துற்ற மீனுக் கிளைத்ததொ ருருவம் போக்கி
யாணமுற் றுலவும் பண்டை யாக்கைய னுகிச் சேர்ந்தா
னேணநாட் குரிய னுனே னேங்குவை குண்டந் தன்னில். (கஎ)

ஓதிம முயர்த்தோன் பாலி லுற்றநால் வேத மந்த
வேதனை நோக்கி யைய விடலுறு மசுர வினைப்
பாதகன் கரத்தி னுங்கள் பட்டதாற் பாபமேற் றேஞ்
சாதக முளதே னீங்கச் சாற்றுக வெங்கட் கென்ன. (கஅ)

உண்மைநீ ருரைத்த மாற்ற முறழ்திரு தன்கைப் பட்ட
புன்மையை யொருவ வுன்னிற் புகழ்நிறை புறமொன் றுண்டா
னன்மையே யளிக்கு மந்த நண்ணுகேத் திரக்கு நேரோன்
றின்மையென் றெழுதி நும்பா லிருப்பதை யோரீர் போலும்.

படைத்தலை யுஞற்றற் கெண்ணி பதுமநா பன்சொற் கூற
வடுத்தநற் பூசை யாற்றி யளவில வரங்க ளேற்றுத்
தொடுத்தனன் சினக ரங்க டிதிவிழா பலவுங் கண்டே
னெடுத்தவென் ஞுயு டன்னி லிதற்கிணை காணே ஞனே. (உ0)

என்றுசொற் றிடலும் போத னிணையில்சீர் வேத நான்கு
நன்றுநன் றெமக்கு முள்ளி னிலைத்தது ஞான மோனந்
துன்றிய யோகர் துன்னுந் தொன்மையாந் தானங் காண
வின்றுநீர் விடையிங் கீவா யென்றுரை கூறிப் பின்னர், (உக)

மனிதநல் லுருவ மேற்று மண்மிசைப் போந்து தெற்கி
லினிதுறும் பஃற லங்க ளெய்திப்பஃ றடமு மாடிக்
கனிவினி லிறைஞ்சி யேத்திக் கலிகடற் கூலந் தன்னிற்
பனிதரை நெய்தல் ஞாங்கர் படரிய ஞாழற் சூழ. (உஉ)

முப்புரி நூலை யெய்ந்தார் முன்கையிற் காண்டங் கொண்டார்
வைப்பெனப் பூதி பூசி வயங்குகண் டிகையைப் பூண்டார்
துப்புட னைந்தெ ழுத்தே சொற்றிட மன்னு வாய
ரிப்புவ னத்தி லுற்ற வெழிற்றவர் மிடைந்து கோல. (உங)

சிந்தையிற் றியானங் கூடிச் செறிதவ முஞற்று வோர்கள்
பந்தியி லிருந்து தெய்வப் பரசிவ பூசை செய்வோ
ரந்தியும் பகலு மாக வருஞ்செப மாற்று வோர்கள்
விந்தைநல் வியாகஞ் செய்வோர் மேவிடுந் தவத்தர் நேர. (உச)

இந்தவற் புதமா யெங்கு மெழிற்சைவ மணமே வீசு
மந்தநல் வான்மி யூரி னணித்தென வழகி னோங்கு
விந்தையுற் றிலகுஞ் சோலை விருப்பமுற் றதனுட் டங்கிச்
சிந்தைகொண் மகிழ்ச்சி நீடச் செய்யநற் றவம தாற்றி. (உரு)

பங்குனிப் பருவ ஞான்று பண்புட னெழுந்து போந்து
கங்கையஞ் சடைவ ளைத்த கண்ணுதன் மருந்தீ சன்றான்
றங்கிய சினக ரத்துட் டளைமிசை வீழ்ந்தெ ழுந்து
சங்கத மாக வேதஞ் சாற்றின தோத்தி ரங்கள். (உசு)

சங்கரா போற்றி சாம்ப சதாசிவ போற்றி வேதன்
கங்கரா போற்றி நீல கண்டனே போற்றி நீண்ட
பொங்கரா வணிந்தாய் போற்றி புண்ணியா போற்றி யன்பிற்
றங்கரா போற்றி போற்றி சயசய போற்றி போற்றி. (உள)

எந்தையே போற்றி தேவ ரிறைவனே போற்றி மூவர்
தந்தையே போற்றி மேலாந் தருமமே போற்றி யார்க்கு
முந்தையோய் போற்றி சோதி முக்கணு போற்றி யோங்கு
மந்தழ லுருவா போற்றி யரகர போற்றி போற்றி. (உஅ)

செய்யனே போற்றி சுத்த சிலனே போற்றி ஞான
மெய்யனே போற்றி விண்ணோர் விமலனே போற்றி சூலக்
கையனே போற்றி வானக் கங்கையாய் போற்றி யெங்க
ளையனே போற்றி போற்றி யரகர போற்றி போற்றி. (உகூ)

என்பன பலவாப் பன்னி யிவ்வகை யேத்திக் கூறி
யன்புகொண் டுருகி மிக்க வாசைகொண் டெழுத லாலே
யென்புறம் பொடிப்ப நின்றங் கெழின்மருந் தீச ஞர்த
மென்பதம் வீழ்ந்து தாழ்ந்து வேண்டின வேத மியாவும். (ஙo)

அத்தகை யவகா சத்தி லருமருந் தீசன் றோன்றி
மெத்திய வரங்க ளீவேன் வேண்டுவ நவில்கென் றோத
சுத்தனே நாங்க டய சோமுகன் கரத்தி லுற்றுத்
தத்தினிற் பிழைத்தேம் பாவத் தடிப்பினை யொழித்தல் வேண்டும்.

வேதநற் புரியென் றிந்த வியனகர்க் கொருபே ரொன்று
மோதுதல் வேண்டு மியாரு முற்றவிப் பதியி னெல்லை
நீதியோ டிருந்து நாங்க ணிலைத்தவம் புரிந்த வைப்பே
வேதசி ரோணி யென்று விளங்குதல் வேண்டு மென்ன. (ஙஉ)

ஆதரத் துடனே கேட்ட வங்ஙனந் தந்தே நீவிர்
வேதன துலகம் போந்து விளங்குவீர்நாளு மென்றே
சோதியுங் கரந்து றைந்தான் றுணைவியொ டென்னுச் சூதன்
மாதவர்க் குரைத்து மற்று மகிழ்வுட னுரைப்ப தானுன். (ஙங)

வேதம்பூசைபுரிபடல முற்றிற்று.

ஆகச்செய்யுள்-எஅக.

# காமதேனுவருள்பெறுபடலம்.



எள்ளரு மணியும் பொன்னு மெடுத்தலை கொணர்ந்து வீசுந்
தெள்ளிய கங்கைக் கூலந் திகழ்தரு காசி வைப்பிற்
கள்ளவிழ் கொன்றை வேணிக் கண்ணுதல் சரண மேத்தி
யுள்ளொளித் தவங்க ளாற்றி யுறைந்திடு முனிவ சிட்டன். (க)

கற்பக நீழ றன்னிற் கடவுள ரனேகர் சூழப்
பொற்பமர் மணிதியங்கப் பொலனரி யாசனத்தி
லற்புடன் வீற்றி ருக்கு மாயிரங் கண்ண னேரு
நற்சபை நாடிப் போந்து நவிலுவன் மாற்ற மொன்று. (உ)

எண்டிசை யோடு மேத்து மிமையவர் வேந்த கேண்மோ
வண்டரும் வேட்குங் காசி யற்புத வமல னாை
மண்டல மபிடே கித்து மகிழ்வொடு பூசை யாற்றக்
கொண்டதோர் தணவா வெஃகல் குறைவற நிறைவே றற்கே.

உன்னுழை போந்திட் டேனு லுவணுறை சுரபி தன்னை
யென்னுளி வைகு விக்கி னெழிலுறு மதன்தீம் பாலாற்
பன்னரு முதல்வற் காட்டிப் பணிகுவ னென்னக் கூற
வன்னவ னியைந்து விட்டா னவன்பினர்த் தேனுவைத்தான். (ச)

தேனுவோ டருய்வ சிட்டன் றிகமும்வா ரணசி யண்ணி
நானமா வமுதங் கொண்டு நல்லபி டேக மாற்றித்
தானமர்ந் திருக்கு மேல்வை தனித்தவான் சுரபி காசிக்
கானமே போந்து லாவிக் கயிலைஞான் கரினி லோர்நாள். (ரு)

அவ்வயின் ஞெமிர்த லுற்ற வருவியின் பாங்கர் நற்பூச்
செவ்விய சுகந்த மோச்சிச் செறிதரு சந்த னக்காக்
கவ்விட வுட்பு குந்து களிப்பினி லமல நோக்கி
பொய்விய மனத்தி னேடு முற்றதங் கோர்நாண் முற்றும். (சு)

பிற்றைய ஞான்று போந்த பிறங்குதே னுவினை நோக்கி
கற்றையங் கபர்த்த னூர்க்குக் கவினபி டேக மாட்ட
வுற்றவுன் கீர மீயா தொருவைகல் பாணித் திட்டா
யிற்றைநீ யாமா வாக வென்றனன் வசிட்டன் சாபம். (௭)

வான்பசு சாப மேற்று வயநகர்க் காசி நீங்கிக்
கான்படு மாறு மாறுங் கடந்துபி னீத்து நீத்துத்
தேன்படர் துடவை துன்னுந் திருவான்மி யூரின் கொத்தந்
தான்படிந் திட்ட போழ்து தன்னறி வுற்ற தன்றே. (௮)

எல்லையு ளிறும்பூ தெஃதோ விருப்பதென் றோர்ந்து நேடி
யொல்லையி னங்கு மிங்கு மோடியே யுற்று நோக்கத்
தொல்லையி னிவந்து மிக்கத் துதைபுத னுப்பண் கண்ட
தெல்லையிற் சீர்த்தி யேய்ந்த வெழிற்சிவ லிங்க மொன்று. (௯)

தெய்வந லிலிங்க மூர்த்தி தெரிதர வார்வ மிக்குற்
றையவின் றுய்ந்தே னென்னு வரியதன் சுரையி னின்றும்
பெய்தது பெருக்கிப் பாலை பிரான்றிரு முடியின் ஞான்கர்
செய்தது வைக றோறுந் திரிந்ததவ் வெல்லைத் தன்னுள். (க௦)

வெண்ணிலாக் குடைக விக்க வியன்புவி தாட்ப டுத்தி
யெண்ணிலா மகுட மன்ன ரிருங்கழற் பணிந்தங் கேத்த
நண்ணிலர் கனவி லேனு நாடிடக் காண ளுகி
யண்ணிய விரவ லோர்பா லருமழை நிகர்க ரத்தான். (கக)

கோடாத செங்கோ லோச்சுங் குரைகழற் சசயூ வென்பான்
வாடாத வூற்ற மிக்கான் வளையள வாக்க முற்று
ஞேடாத நான்கு கூறு யுயரிய தானை வாய்ந்தான்
வீடாத போக மார்ந்து வியனகர்ச் சைசை வாழ்ந்தான். (கஉ)

நாட்டினி னிசியிற் போந்து நற்பைங்கூ ழழித்து ழக்கிக்
காட்டினிற் றுதைந்து வைகுங் கனத்திணைக் கோறற் குன்னி
வேட்டமேற் செல்வான் வீர வேடுவக் குழுவு கூட்டி
வாட்டமில் பரியி லெஃகி வந்தன னெஃகு தாங்கி. (கங)

படுபறை யியங்கக் கொட்டிப் பகர்விசைக் கயிறு கட்டிக்
கொடும்புலி யெண்கு பூட்கை குஞ்சர மோழ லேன
மடுங்குல மனைத்தும் வீட்டி யணிவரா யெனக்கு வித்துக்
கடுகிப்போந் திட்ட போக்கில் கண்டனன் மடங்க லொன்றே.

காண்டலும் விசிகம் வீசிக் கடுகியே தொடர்ந்து போக
வாண்டது வான்மி யூருக் கணித்தென வண்மி நேர
நீண்டவவ் வெல்லை வைகு நிகரில்வான் சுரபி நோக்கித்
தாண்டித்தன் மருப்பாற் குத்திச் சாய்த்தது சீயந் தன்னை. (கரு)

பரிமிசை விதப்ப தாகப் படர்தருஞ் சதயூக் கோமா
னரியவிக் காட்சி கண்டங் கவணிறும் பூதுற் றென்னே
யரியினைப் பசுவென் றிட்ட வருங்கதை கேட்டி லேமாற்
றெரிகுவ துண்மை யென்னுச் சீக்கிர மணுகி யாங்கு. (கசு)

தேனுவைப் பற்றற் கெண்ணித் திறமையிற் சாலஞ் செய்ய
வானனும் புதலுக் குள்ளா லடைந்தது வழக்கம் போலுங்
கோனவன் மாழ்க லுற்றுக் குறுகிமுட் செறிவைச் சார்ந்து
தானைசூழ் போத வாற்றத் தான்சிறு வாளி விட்டான். (கள)

ஒலியினைச் செவிம டுத்தங் குயர்பசு நனிகுப் புற்று
வலியதன் காற்கு ளம்பை வள்ளலின் முடிமேல் வைத்துப்
பொலிவுற வெளிவந் துற்றுப் புரவலன் றனை யாதி
நலிதர விறையில் வீழ்த்தி நண்ணிய தருங்கா சைக்கண். (கஅ)

வேனியிற் றழும்பு மேவி விமலர்பா லிருக்கக் கண்டு
நானினி யயர்த லென்னே நண்ணுமென் குளம்பு தன்னு
லீனமார் வினைவி ளைத்தே னெய்ந்தன னென மந்தோ
கானவா வடிவை மாற்றக் கதியது முண்டாங் கொல்லோ. (கக)

என்றுமுன் னழுங்க ஞான வெழிலுரு விலிங்கந் தன்பாற்
குன்றென வயங்குஞ் செங்கண் குவலிய குண்டை யும்பர்
மன்றலங் கூந்த லம்மை மருவிட ஞாங்கர் வாசக்
கொன்றையங் கடவுணேரக் கோவது பாவிக் கூறும். (உ0)

வேறு.

புண்ணிய வண்ணமாப் பொலிதரு மேனியி
னண்ணிட வாற்றின னொருதழும்பினைப்
பண்ணுவ தீதெனுப் பாவியேன் றெருளுறே
னெண்ணிய நின்னடி யெய்திடப் பெறுவலோ. (உக)

கருணையே படிவமாக் காணுமோர் மேனியி
லொருவடு வதிதர வுளுற்றின னிற்றைநான்
பருவர லொருவியே பண்பினை யுற்றிட
மருவரு நின்னடி வழங்கிடப் பெறுவலோ. (உஉ)

ஞானமே பிழம்பெனு நண்ணிய மேனியி
லூனமே வாய்ந்திட வொருகுளம் பமைத்தவி
னீனமே தணந்திட வின்பமுற் றுயர்தரு
வானமே னின்னடி வழுத்திடப் பெறுவலோ. (உங)

அருவுரு வாகியிங் கமர்கொளு மேனியின்
மருவிட வடியினை வைத்தனன் வன்மையின்
வெருவிய வினையற விண்ணுல கமர்தரத்
திருவளர் நின்னடி தீண்டிடப் பெறுவலோ. (உச)

அடியர்க டவமெனு வார்தரு மேனியிற்
கொடியதொர் தீமையாற் குளம்பினைப் பதித்தனன்
மிடியனிங் குற்றபுன் வியனினை மாற்றிமுன்
வடிவுற நின்னடி மருவிடப் பெறுவலோ. (உரு)

இன்னண மிசைத்திடு மெழிலுறு தேனுவைப்
பின்னிய சடைமுடிப் பிஞ்ஞகன் றேற்றுவா
னின்னலை யொழிதிநீ யெதற்கு மஞ்சலை
யுன்னில னெஞ்சினி லுன்னவை தன்னையே. (உசு)

அடியவ ருளுற்றிடு வரிலினை யுன்னிடே
மடியெனுங் குளம்பினை யறிந்துநீ வைத்திலை
கடிகமழ் கடம்பணி கந்தன் றடியெனுக்
கடியுற வெண்ணினங் கலங்கலை சுரபியே. (உஎ)

முன்னநற் காஞ்சியின் முருந்தடி வெண்ணகை
கன்னலின் சொற்சுவைக் காதலி தந்தருண்
மின்னிய சைவலை மென்முலைத் தழும்புகண்
மன்னிய போலுநீ வைத்ததொர் குளம்பதே. (உஅ)

நின்சுனைப் பாலினா னித்தமு மாட்டினை
யன்னதொர் தன்மையி னருட்சிவ லிங்கம
துன்னரும் வெண்மையி னொண்ணிற மேவினம்
பன்னுவ ரியாவரும் பால்வண னென்னவே. (உகூ)

பண்டைய சட்டகம் பாங்குற வாய்ந்துநீ
யண்டரு முனிவரு மன்பொடு வாழ்த்துற
விண்டனிற் கௌசிகன் விளங்குமச் சார்பினி
லண்டிநீ வாழுதி யனேக மாயுளே. (௩௦)

என்றபின் றேனுவா விறந்திடு மேந்தலைத்
துன்றிய ஞாட்பினை தோன்றிட வருள்புரிந்
தொன்றிய வன்னையோ டுயர்விடை தன்னொடு
நன்றவண் கரந்தன னம்மருந் தீசனே. (௩க)

வேறு.

வான்சுரபியக்கணமேபழையபடிவம்வாய்ந்துவள்ளற்போற்றிக்
கான்மலியுங்கற்பகநாட்டினையண்மிக்கோபதிபாற்களித்ததன்றே
தேன்வழியுய்யானனத்துச்சைதைநகர்திகழ்சதயூத்திறலார்வேந்த
ஞன்வான்மியூர்தணந்தேயினியென்றனகாதனைநாடேனென்று.

தன்னமைச்சர்தானையர்களாதியரையுறவிளித்துச்சாற்றுகிற்பா
னெங்நிலத்துங்காணாதவிறும்பூதிங்கிற்றைஞான்றியங்கக்கண்டே
னுன்னுறுஞ்சீர்ப்பால்வண்ணரிணையடிகடமையேத்தியுறுதியாக
மன்னிடுவனினியரியாசனத்திருந்துநாடாளமதிக்ககில்லேன். (௩௩)

மனமகிழவீன்றிட்டவெனதுகாதலனுக்குமகுடமேற்றித்
தினமவன்றன்சார்புறைந்துநீவிரொலாஞ்சூழ்ச்சிசொலித்திறமதாகக்
கனந்தவழ்ஞாயிற்சூழுஞ்சைதைபுரியினைப்புரந்துகளித்துவாழ்க
வெனக்கூறியவ்வவர்சடமையேவியதன்பின்னரொழுநீராடி. (௩௪)

பூதிமணிவடந்தாங்கிப்பால்வண்ணன்சந்நிதியிற்பூசித்தேத்தி
யேதிலர்கடமைக்கூவிப்பொருளீந்துபுதரானைத்துமெடுத்துவீசிச்
சோதியாலயமண்டபங்கோபுரங்கள்பலதுளங்கக்கண்டு
வீதிபலவகுத்தவற்றிற்சைவரொலாங்குடிமல்கும்விழுப்பஞ்செய்தான்.

நன்னகரமேயெடுத்துத்திருவிழாப்பலநாளுநடாத்தியாரும்
பன்னரியபால்வண்ணப்பெருமாற்குமம்மையாம்பார்வதிக்குந்
துன்னரியபொன்னணிகடேசுடைகளெண்ணிலவாத்துளங்கச்செய்தங்
கெந்நாளுமடியர்தமையரனெனவேகண்டவுடனிறைஞ்சியேத்தி.

பன்னருஞ்சீர்மோட்சதாயனிதீர்த்தத்தினின்மூழ்கிப்பரமனுளு
மன்னியதோர்கற்கயிலைதனின்மேவிச்சிவகணத்துவதிந்தானென்றே
யுன்னரியவியாசமாணுக்கனுயர்சூதமுனியுவகைவாய்ப்பப்
பன்னினுன்முனிவரர்கள்கேட்டுநனியானந்தம்பயந்தாரன்றே.

காமதேனுவருள்பெறுபடல முற்றிற்று.

ஆகச்செய்யுள் அகஅ.

---

# இயமன்பழிதீர்படலம்.



மறைமுழு தனைத்துந் தேர்ந்து மாண்புற வங்கமோதி
நிறைதரு மாக மங்க ணீள்கட னீந்திச் சைவ
முறைநெறி யொழுகி யார்க்கு முதன்மையென் றறைய நின்ற
கறைகெழு வினைக டிந்த கவின்மிரு கண்டு யோகி; (க)

கற்பினுக் கரசி யென்னுக் காண்மருத் துவதி யென்னும்
பொற்புடை மனைவி யோடும் புகழ்தரு காசி வைப்பிற்
றற்பரன் விசுவ நாதன் றுள்பணிந் தேத்திப் போற்றி
வற்புடன் தவமி ழைத்தே மகிழவோர் மகவைப் பெற்றுன். (உ)

ஈன்றதோர் காதற் காயு ளீரெட்டென் றிறைவ னோதத்
தோன்றிய தொன்றே சாலுந் துயரொலாந் நீங்கிற் றென்னுத்
தோன்றலா யுதித்த தங்கள் சொல்லருங் குழவி தன்னை
யான்றலின் வளர்த்தெ டுத்தங் கார்வமூற் றிருந்தா னன்றே. (ங)

பாலமு துற்ற வாரி பயந்ததோர் மதியம் போன்று
சாலவு மரிய வேதஞ் சாத்திர மாக மங்கண்
ஞாலமீ துணர்ந்து ஞான நற்றிணை தலைப்பா டோங்கப்
பாலன்மார்க் கண்டற் கன்று பதிந்ததங் கீரெட்டாண்டும். (ச)

கண்டதாய் தந்தை யாருங் கவலையின் மிக்கு மூழ்கிப்
பண்டைய வினையின் வாறே பாலன்மார்க் கண்டன் றன்னைக்
கொண்டிட வீரெட் டாண்டிற் கூற்றுவன் கூடு வானேன்
மண்டனி லேது செய்வே மாற்றிட வென்று நொந்தார். (ரு)

தந்தைதாய் தம்மை நோக்கிச் சாற்றுவன் மார்க்கண் டேயன்
சிந்தைநொந் தாவ தென்னே தீவினை முழுது மாற்றி
வந்திடு ஞமனை நூறும் வகையது நேடு தற்கு
முந்திய வாக மத்து முன்னரோ கண்ணுற் றேனால். (சு)

இரவிசந் திரன்விண் மீன்க ளெழில்வெளி யுற்றுலாவ
லரவமிக் குற்ற வோத மணைகட வாது தேறல்
பரவிய விபுலை யாவும் பயனுறல் போத லாத
லரவணி பெம்மா னீச னாணையென் பதுவே ளாண்மை. (எ)

தேவர்க ளெற்றை ஞான்றுஞ் செய்கரு மங்க ளியாவு
மேவரு முதல்வ னாய விமலனற் பாத தூளி
தாவிடச் சிரமே லேற்றுத் தாமியற் றிடுவ ரல்லாற்
சாலவும் பசுக்கட் குண்டோ தனித்தனிச் செயல்க டாமே. (அ)

தங்கரங் குவிப்பார்க் கெல்லாந் தான்சுகஞ் கொடுத்த லானே
சங்கர னென்னு வேதஞ் சாற்றுவ தானுன் ஞான்று
மங்கவ ரடிய ரானூர்க் கரந்தைவங் தடருங் கொல்லோ
பங்கயன் படைப்புக் கூற்றன் பயமிவ ணென்னே செய்யும். (கூ)

பச்சிலை நீரு மேந்திப் பான்முடி யொருஞான் றிட்டார்
முச்சக மாளப் பெற்று முன்னரு மருளிற் சார்வா
ரிச்சையிற் படிந்து ஞான்று மேத்துவார் தம்பா லேம
னச்சிடப் போந்து கண்ணு றுடுதற் கெண்ணுங் கொல்லோ. (கO)

பரசிவப் பொருளை யுன்னிப் பங்கய மலர்த்தா ளேத்தி
வருசம னச்சு நீக்கி வருகுவ லும்பா லென்னுப்
பெருமுடிச் சடைநற் றந்தை பிறங்கடி முடியின் வைத்துப்
பரசினன் விடையை யேற்றுப் படர்ந்தன னவாசி நோக்கி. (கக)

மலைகளுங் காடு நாடு மன்னிய நதியு னீத்துக்
கலைசெறி யெலுநன் றேபங் காண்டலு மாங்காங் கேய்ந்த
தலைமைகொ டலங்க ளேக்கித் தகவுற வாழ்த்தி யேத்தி
யலைபிறழ் பொன்னி யாற்றி னரியகூ லத்தே சார்ந்து. (கஉ)

தேவரு முனிவ ரியாருந் திகழ்தரப் பூசித் தென்று
மேவரும் வரங்கள் வாய்ந்து வியனுற வாழ்தற் கேற்ற
மாவருங் கொன்றை வேணி வள்ளல்வீற் றிருந்து வைகும்
பூவரு மாரா மத்துப் புண்ணியக் கடவு ரண்மி. (கங)

எல்லையின் படிந்தெ ழும்பி யெழிலுறு நடீ ராடி
யொல்லையி னூரைச் சூழ்ந்தங் குயரிய துடவை போந்து
மல்லிகை நரந்தை நாவன் மந்தார ஞாழல் சந்து
முல்லைமா னூரங் கன்னி முள்ளிதேங் கொன்றை காஞ்சி (கச)

செருந்திபுன் னாகம் வேங்கை செய்யமந் தாரை தான்றி
குருந்துநா யுருவி வன்னி குசைநாணல் காயா கொக்குத்
திருந்துவெட் பாலை வெள்ளி திகழுமாற் பலாசு பட்டி
பிருந்தமா விலிங்கம் பன்னீர் பெருவிலா மிச்சை யாதி. (கரு)

பற்பல மிதப்பக் கொய்து பண்புடன் கோயிற் புக்குக்
கற்பனை கடந்த சோதிக் கடவுளைக் கண்டு தாழ்ந்து
தற்பர தேவ சம்போ சங்கர சிவனே யென்னுப்
பொற்புடன் பூசை யாற்றிப் புகழுற வமரு ஞான்றில். (கசு)

வேறு.

கரியமலை யெனவருமோர் கடாமீதங் கினிதேறி
யரியவிரு விழியூடங் கனல்ஞெகிழி யொளிசெய்யப்
பெரியவொரு கணிச்சியினைப் பிறங்கியதன் காத்தேந்தித்
தெரியமுனம் வந்தருகிற் றிகழ்ந்திட்டான் றென்றிசைக்கோன்.

கூற்றுவனைக் காண்டலுந்தன் கொள்கையினிற் றினையளவு
மாற்றுதலங் கில்லாமன் மலர்கொடருச் சனையுடனே
யேற்றுவா கனன்சரணை யிதயத்து ளேயிருத்தித்
தேற்றமுற விருந்தனனச் சிறுமுனியா மார்க்கண்டன். (கஅ)

கறுவியகோ பத்தோடுங் கருமறலி சொற்றிடுவா
னிறுதியுனக் கீரெட்டி லேய்ந்ததனை யறியாய்கொன்
முறுவலுறப் பூசையினை முடிக்கவெணு வதுபோதுஞ்
சிறுபால வென்பிறகே சிக்கெனநீ போந்திடுதி. (கக)

அயனரியே முதலாய வமரர்பல ரெஞ்ஞான்றும்
வயமுடைய வெனதாணை வயமாக வேவதிவ
ரியமுடனீ செயும்பூசைக் கேயஞ்சி யேகுவலோ
நயமொழியிற் புகன்றனனியா னுடுதியென் பிறக்கென்றான். (உ0)

எந்தையரன் றிருவடியி லியற்றுசிவ பூசையொரீஇச்
சிந்தையினை வேறொன்றிற் சிறிதேனுஞ் செலுத்துகிலேன்
மந்தரம்போல் வந்திடுநின் வடிவதனைக் கண்டஞ்சேன்
வந்தவழி யேகென்றான் மழமுனிமார்க் கண்டேயன். (உக)

பாலனீ யானமையின் பயமறியாய்ச் சற்றேனுங்
காலமுனக் காயினமை கருத்ததனி லோர்கில்லா
யாலமுண்ட வான்பூசை யம்மையினுக் கேதுப்புச்
சாலஞ்செய் யாதொல்லைச் சாரென்றான் கொடுங்காலன் (உஉ)

சிவபூசை யுழைக்காடி சேர்ந்துழக்கு மாபோல
விவணோர்ந்து வாளாக வெஃதெஃதோ பிதற்றுவைநீ
கவலையிலா துறுவேற்குக் காலமதிங் கென்செய்யு
மவலமற நடவென்று னழகியநன் மார்க்கண்டன். (உங)

அண்டமெலா மோர்நொடியி யலைப்புறவே வங்கையினிற்
றண்டமதைக் காண்கிலைகொல் சாற்றுதியென் றான்கூற்றன்
றண்டமதைக் கொண்டுன்னைத் தண்டித்தற் கடமூட
வண்டர்பிரான் றுனிலையோ வறியென்றான் மார்க்கண்டன். (உச)

நாசமுறு மேல்வையினி னரர்களினை யாத்திடற்குப்
பாசமது நோக்கிலையோ பாரென்றான் கடுஞ்சண்டன்
பாசத்தாற் கட்டுண்ட நினைப்போலும் பசுக்களினை
நாசஞ்செய் யரனிலையோ நடவென்றான் மார்க்கண்டன். (உரு)

இனியமொழிச் சிறுமகவென் றிதுகாறுஞ் சமித்தனனியா
னினியிறைப்போ தினும்பொறுக்கே னெழுகென்று னுடன்சௌரி
சனியெனவே சார்ந்தனைநீ சங்கரனார் பூசையுழை
நனிநில்லா தேகென்று னகையொளிர மார்க்கண்டன். (உசு)

நினைக்கொலுத லேசாத நின்னுடைய வலிமாற்றந்
தனைக்காண்ப லிம்மெனுமுன் றூனென்றான் பாசகர்
னுனைநேரு மறலியர்க ளொருகோடி யோருயிரைத்
தினையளவி லுணுமரனைத் தேரென்றான் மார்க்கண்டன். (உஎ)

சுழல்விழியிற் புலிங்கமுடன் சுருட்டுமே மேயெழும்ப
வழலெனவே சினமூள வடர்முகரோ மந்துடிக்க
மழவெருமைப் போத்ததனை விட்டிறங்கி மதர்ப்புறவே
முழவொலியி னுரைகூறி முன்னணிகி னுனியமன். (உஅ)

வேறு.

அந்தகன்முன்னடர்தலுமேயழகியநன்மார்க்கண்டனயர்வுவாய்ந்து
சிந்தையுறப்பதைபதைத்துத்தாரையிற்கண்ணீர்வாரத்தேவதேவே
யெந்தைசிவசங்கரசம்போசம்போவெனையாள்கவென்னுவோதி
யந்தமுறுஞ்சிவலிங்கப்பெருமானைத்துணைக்கரத்தாலணைத்துக்கொண்டான்.

ஆலமணிமிடற்றிடையிலமர்த்திவானவர்ப்புரந்தவையவோலங்
கோலவுபமனியனமிழ்தப்பரவையுணச்செய்தகுழகவோலந்
தாலமழியாவகைவிண்கங்கையொருசடைநுதியிற்றரித்தாயோலஞ்
சீலசீதரற்கன்றுசங்காழியீந்தபெருந்திறலாயோலம். (௩0)

ஆயிரமாயிரமுகத்தாயாயிரமாயிரங்கண்ணுவையாவோல
மாயிரமாயிரஞ்செவியாயாயிரமாயிரம்வாயாவரசேயோல
மாயிரமாயிரமுடலாயாயிரமாயிரம்புயத்தாயப்பாவோல
மாயிரமாயிரம்படையாயாயிரமாயிரம்பதத்தாயண்ணுவோலம்(௩க)

பிறைமுடியாய்நினக்கபயம்பிஞ்ஞகனேநினக்கபயம்பிறங்குகோடி
மறைமுதலேநினக்கபயம்மழுவுடையாய்நினக்கபயம்வயங்குவேணிப்
பொறைமுடியாய்நினக்கபயம்புண்ணியனேநினக்கபயம்புலவர்போற்றுங்
கறைதபுநற்கடவூரிற்கண்ணுதனின்கழலடிக்கேயபயமென்றான்.

எனமுறையிட்டடைக்கலமென்றேயெங்கிக்கம்பலைகொளிளைஞன்மீது
சினமுறவெம்பாசமதையந்நடுவன்வீசுதலுந்தெய்வலிங்கத்
தனகனவன்வெளிதோன்றித்திருவடியாலுதைத்தருளவந்தகன்றான்
கனமலைசாய்ந்தாலன்னப்புவிமிசையின்வீழ்ந்துநனிகலங்கிமாய்ந்தான்.

திருக்கடவூரமுதகண்டநற்பெருமான்மார்க்கண்டன்றிகழ்முகத்தை
யுருக்கமுறத்தவநோக்கியினியஞ்சேனித்தியமாயுறைதியென்றும்
செருக்குடனேவீந்திட்டதென்றிசைக்கோன்றனையெழுப்பிச்சீர்த்திமிக்க
தருக்கொழிந்துவாழுதியாலென்றருளிச்சிவலிங்கந்தனில்வதிந்தான்.

அந்தகனுமடிக்கடிபூமியின்வீழ்ந்துபணிந்தேத்தியன்பினோடுஞ்
சிந்தையினின்மழமுனிவன்றனைத்துதித்துநனிவாழ்த்திச்செல்வமேற்ற
விந்தைதிகழ்திருக்கடவூர்தணந்தேகத்திகையுதக்கில்விளக்கமான
சந்தகேத்திரங்கள்பலதரிசித்துப்பாலிகூலத்தைநேர (௩௫)

மகதியாழ்முனிவரனைமுன்னணுகிக்குதுகுலித்துமகிழ்வினோடுந்
தகுதியுறப்பணிந்தெழுந்துதக்கவாசிகள்பலவாத்தகவினேற்று
மிகுதிசெருக்குளுற்றலிஞனேர்ந்ததிருவடியுதையைவிளக்கிநன்கு
புகழ்தருகேத்திரமொன்றிற்கழுவாயங்காற்றிடற்குப்புகறியென்றான். (௩௬)

முண்டகக்கானற்செறியுங்குணகடலின்வாரத்துமுன்னரோடக்
கண்டவிந்நற்பாலிநீர்வளஞ்செறியும்வைப்பொன்றுகாணுமாமா
லண்டர்களுமறிந்துசொலற்கரிதானசீர்த்திபெறவாய்ந்துநீல
கண்டமிளிர்மருந்தீசன்வான்மியூரென்றெவருங்கருதுவாரால். (௩௭)

தலங்களினிற்றூயகமாவிளங்கலினுற்பயனுடுந்தக்காரியாரு
நலமருவவவண்போந்துதரிசித்துச்சித்தியெலாநண்ணுமாறு
பொலன்மருவுதீர்த்தங்களிற்படிந்துபுண்ணியராப்பூரித்திட்டா
ரலமருநின்பவமனைத்துமன்முன்னர்த்துலவமெனவாகுமாமால்.

என்றுநாரதன்கூறவிடையேற்றுவான்மியூரெல்லையண்மி
யன்றொருஞான்றருமறைகடனித்திருந்துதவமியைந்தவரியவைப்பா
மன்றலமரெழின்வேதசிரோணியிணையேயடைந்துமறலியாங்கே
யொன்றியபல்விம்மிதங்கடமைநோக்கிமனமகிழ்வோடுறைந்துவாழ்ந்தே.

தனதுகரமலரிலுறுமோர்தண்டமதைநிறுவித்தக்கோரத்து
மனகமுறுஞ்சிவலிங்கமாமுன்னிப்பூசித்திட்டருகினீடப்
புனனிறையுந்தடமொன்றுதனதுபெயராற்கண்டுபொழுதுசாயத்
தினந்தினமுமாலயத்துமருந்தீசனைப்பணிந்துதிரும்புவானால். (௪௦)

இவ்வகையின்பலஞான்றுபூசித்தனையன்முன்னரிணையில்சீர்த்தி
செவ்வியநல்லருட்குறிவைப்பினினின்றுமருந்தீசன்றேவியோடு
மெவ்வமறவெளிவந்துவரநினக்குவேண்டுதியேலியம்புகென்ன
வவ்வியகலிடம்படியப்பஃறாமும்வீழ்ந்தெழுந்தங்குரைக்கலுற்றான்.

உன்னடியிற்பூசித்திங்கேத்துமடியார்கடமக்கொருகாலத்து
மின்னல்களென்னால்விளைவதென்றுமிலையெனவறிந்தேனேழையேன்றான்
சின்னறிவான்மழமுனிவன்பாலனுகியுற்றவிடர்சென்மந்தோறு
முன்னிடுவனுயர்காலகாலனெனவோங்கிவளருண்மையோனே.

வான்மியூரெல்லையுறுமெழில்வேதசிரோணிவயின்வயத்தினோடு
நான்மிகவற்புடனேத்துஞ்சிவலிங்கப்பெம்மாற்குஞான்றுமென்றன்
வான்பெயராயேவாய்ந்துபோந்துபணிந்திடுமெவர்கள்வறுமைதீர்ந்து
மேன்மையுறுபெருஞ்செல்வமனைமக்களுடன்வதிந்துவிளங்கல்வேண்டும்

நானகழ்ந்த தடமதனுளோர்ஞான்றாயினுமூழ்கிநன்னரோச்சுங்
கானலருங்கொன்றையந்தார்த்தண்டபாணிக்கடவுள்கழற்பூசிக்கின்
கானலனமந்தாரகாசஞ்சூன்வயிற்றுளைவுகரியமேக
மானமறுங்குட்டநோய்வாதங்காமாலைபன்னோய்வழித்தல்வேண்டும்

என்றலுமேமருந்தீசனவ்வணமேயளித்தனமியாமெனக்கரந்தான்
பின்றருமன்வியன்வேதசிரோணியுழைத்தன்பெயரிற்பிறங்குஞானக்
குன்றெனநீடண்டபாணிப்பெருமான்குரைகழலைக்கும்பிட்டேத்தி
யொன்றியநல்லார்வமுடனவனுறைந்தங்கிவ்வண்ணமுஞற்றுவானால்.

இடப்நிறைநிறைவாகத்திகையனைத்தினுங்கோலவெழில்சேர்நொச்சி
மடவணிகணிரற்றாணநிறுவுமணியொலிகாலுமண்டபங்கள்
குடமுடிகள்விண்ணிட்மாநிவந்துயரமேருவினீள்கோபுரங்கள்
தடமலியும்பொற்கோயிலாயபலமாண்புறவேசமைத்திட்டானல்.

விண்ணவர்களாதியனைவேதசிரேணித்தலத்துமேவக்கூட்டி
மண்ணவரின்மன்னவர்கள்பலர்களுறமுதல்வனூல்வகுத்தவண்ண
நண்ணியவெண்மழவிடைநற்கொடியேற்றிவிழாவனைத்துநன்குஞற்றி
யண்ணியவேழாஞான்றுதேரோட்டிப்பதுவைகலானபின்னர்.

உம்பாதியர்நேரமனைவாவிநீராட்டியோங்குஞ்சீர்த்திக்
கம்பமுறுமான்படத்தையவரோகணஞ்செய்தங்கன்பின்யார்க்குந்
தம்பிரானனவருட்குறியதாஞ்சிவலிங்கந்தன்னேர்நின்று
கம்பலையினருவிநீர்கண்வாரத்தோத்திரங்கள்கழறுவானல்.

நெடியமாலயன்போகிக்காதலியர்மங்கலநூனிலைக்கவன்று
மடியலைபாற்சலதியினிலெழுகாலந் தனைமிடற்றுவைத்தாய்போற்றி
யடியவர்செயலாப்மதையிலாபமதாக்கொண்டருளுமமலபோற்றி
படிவேதசிரேணியினிலென்பொருட்டாவெழுந்தருளும்பாமபோற்றி.

காலகாலன்றன்னையிவ்வகையினினிதேத்திக்காலன்றன்னூர்
சீலமுறப்போந்துதனகணங்கட்குச்சிவனடியார்ச்சிறப்பைக்கூறிக்
கோலமுடனடுநிலையிலினிதுறைந்தானெனச்சூதன் குழைந்தவன்பிற்
சாலமிகுமகிமைகளை நைமிசாரணியமுறைதவர்க்கிசைத்தான்.

இயமன்பழிதீர்படலமுற்றிற்று.

ஆகச்செய்யுள்-அகூஅ.

## இராமன்வரம்பெறுபடலம்.

திருவினுக் கரங்க மாகத் திகழயோத் தியினை ஞான்றுந்
தருநிகர் கொடையின் மிக்க தயாத ருஞ் மேல்வை
மருவிய வெச்ச மின்றி மம்மாங் குறுதல் கண்டு
குருமகா முனிவர் கூறக் குயிற்றினன் வேள்வி யொன்றே. (க)

சந்ததி தன்பால் வேட்டுத் தயரதன் புரியா கத்து
வந்தவோர் பாரி டந்தான் வழங்கிய வோத னத்தைச்
சிந்தையி லன்பு வாய்ந்து திகழ்மனை மூவர்க் கீந்தான்
வந்துதோன் றினர்க ளன்கு மக்களங் கருமை யாக. (உ)

அவதரித் தருளு மைந்த ரவர்தமின் முன்னர் வந்தோ
னவனியைப் புரக்குந் தெய்வ வண்ணலாம் பின்னை கேள்வன்
துவர்தரு மசுரர் தம்மைத் தொலைத்திட வந்து தித்தோ
னிவனரு னெய்தை யோர்ந்தே யிசைத்தன ரிராம நாமம். (௩)

தயரதன் காத லன்றன் றம்பிய ருடன்கு லாவிக்
கயமயந் தேர்மீ தேற்றங் கனபடைக் கலப் பயற்சி
சயமிகு மல்லு யுத்தந் தக்கநன் விஞ்சை முற்றும்
வியனுறக் கற்று வல்ல வீரரில் வீர னானன். (௪)

காதியின் மைந்தன் பின்னர்க் கடுகென நாடிக் கானின்
மாதிர நேர வோங்கி வந்ததா டகையை வீழ்த்தி
யாதிவேள் வியினை யாற்றி யகலிகை சாப நீக்கி
நீதியின் ஞானச் செங்கோ னீடுறு மிதிலை சார்ந்தான். (௫)

சனகனங் கேவ ரேனுஞ் சானகங் குனித்திட் டார்க்கே
தனதுநற் சிறுமி யீயச் சாற்றிய சூளின் வாறே
கனமுறுந் தவனை வாங்கிக் கடுக்கென வணக்கிச் சீதை
மனமகிழ் மாதர் பொங்க மணமது முகித்திட் டானல். (௬)

சீதையுந் தானு மல்லற் றிகழயோத் தியினுக் கேகப்
பாதையிற் பரசு ராமன் பகரும்வில் லொன்று காட்டி
யேதமே யறக்கு னிப்பி னிற்றைநீ வீர னென்னு
வோதிடு முன்னர்த் துண்ட முற்றிடச் செய்து போந்தான். (எ)

அராவுடல் சுளிக்கத் தாங்கு மவனியின் பார முற்று
மிராமனன் மொய்ம்பி லேற்ற வெண்ணிய தயா தன்சொ
னிராகரித் தயோத்தி மாட்டு நிலையுறப் பாதன் கானத்
தாதல மிராம னேகச் சாற்றின ளுழிற்கை கேசி. (அ)

அன்னையி னினிய மாற்ற மன்பினிற் சிரம்வ கித்துப்
பின்னவ னுடனே சீதை பின்னுறத் தெனுது திக்கை
யுன்னிநன் னெறிகொண் டேகி யுயர்திரி பதகை யாடி
மன்னிய வார ணுசி வள்ளலை வணங்கிப் போற்றி. (கூ)

அண்டரு மடிக ளியாரு மரியநன் வரங்க ளேற்க
மண்டனிற் ருபித் திட்ட மன்னுபற் சிவ விலிங்கங்
கண்டுகண் டன்பிற் ருழ்ந்து கனிவொடு வாழ்த்தி யேத்தித்
தண்டகா ரணிய நாடிச் சார்ந்தனன் சீதா ராமன். (கௐ)

அந்தநற் கவனஞ் சார வங்குதா பதர்கள் கூடி
வந்துபல் லாசி கூற வாழ்ந்தனன் சில்ஞான் ருேர்நாள்
சிந்துசூ ழிலங்கை யாளுந் தீரரா வணன்மா ரீசன்
முந்துமவ் வதரினேக மூவரைக் கண்ணுற் ருரால். (கக)

மாயமா ரீசன் பொன்மான் வடிவமாப் போந்து சீதை
யேயமுன் னரிஞு லாவ வெழின்மலர்த் திருவி னன்ஞ
ளாயதைப் பற்றித் தாவென் றருங்கண வன்பாற் கொஞ்சப்
போயினன் ருெடர்ந்து தம்பி புகழ்மனை காக்க வென்றே. (கஉ)

மானது துன்னு மாபோன் மாயஞ்செய் தங்கு முங்குங்
கானதிற் பாற வோ்த்துக் கணைவிலிற் ருெடுத்து விட்டான்
தானது சீதா வென்னுச் சதிருறு மிராம ஞேதை
யானது நோக் கூவி யாண்டுவீழ்ந் திட்ட தன்றே. (கங)

குரலினைச் செவிம டுத்தங் குலைகுலைந் தயர்ந்து சீதை
யுரனிலக் குமனனை யுய்த்தே யோடிப்பார்த் திடுகென் ருேத
விரங்கலை யென்ற னண்ணற் கேதம தில்லை யென்று
னாற்றின ளலாப மாற்ற மக்கண மவனுஞ் சென்றுன். (கச)

கண்டிரா வணனு மங்குக் கபடசந் நியாசி கோலங்
கொண்டுமுன் போந்து பைக்கங் கொடுவெனு வேற்புற் றண்ணிக்
கண்டகன் சீதை யூருட் கரங்கொடுத் தெடுத்துச் சென்றுன்
பெண்டுகட் சென்றும் புத்தி பெரிதல சிறிதே யம்மா. (கரு)

அண்ணனோ டிளவல் போந்தங் காவக லல்குற் சீதை
நண்ணிடக் காணா தேங்கி நாடினர் நாற்பு றத்து
மெண்ணுவ தியாவு முன்னி யேமுற லெய்தி னாரால்
பெண்களின் பேச்சுக் கேட்டார் பெரிதுள மாழ்குவாரே. (கசு)

சீதையை யுன்னி யுன்னிச் சிந்தைநொந் திராமன் கானின்
பாதையி னேர்ந்தார் தம்மைப் பார்த்திரோ மனையை யென்னா
வாதையுற் றலர நோக்கி வணக்கமாத் தம்பி யூங்குப்
போதநன் னீதி கூறப் போக்கினன் சிறிது பைதல். (கஎ)

ஊழ்வலி முன்னி மொய்ம்பி லுற்றகோ தண்டம் வாங்கிப்
பாழ்தயித் தியர்க டம்மைப் படுத்திடச் செய்வ லென்னாத்
தாழ்வளை யாறு கானந் தணந்துநீ ளுதயச் சாரற்
கீழ்க்கடற் கூல மாகக் கேத்திரம் பல்ல போற்றி. (கஅ)

தென்கயி லாய மென்னாத் திகழ்தரு சீகா ளத்தி
மின்னிய வேலோன் வைகும் வேங்கடந் தணிகை கூவ
முன்னரும் பாசூ ரூற லொற்றியூர் முல்லை தாய
மன்னிய மயிலை யேத்தி வான்மியூர்ப் போந்திட் டானால். (ககூ)

உளமகிழ்ந் தார்வ மோங்க வுரைதடு மாற்றங் கொள்ள
வளவறு புனித தீர்த்த மமைவுறு மயத்தி லாடிப்
புளகமுற் றிடுவெண் பூதி பூசிக்கண் டிகைமார் போங்க
வளமிகு கோபு ரத்து வணங்கிவா யிலினுட் புக்கு. (உ0)

சந்திர காந்தக் கற்க டைதபிர காரஞ் சூழ்ந்து
முந்திய நந்தி முன்னோன் முருகனை யஞ்ச வித்தே
யந்தியின் குணத்த வெங்க ளண்ணலின் முன்ன நின்று
வந்தனை பலவு னாற்றி மகிழ்ந்தனன் பூசை செய்வான். (உக)

நலவம்பு தயில மான்பா னண்ணிய ததிபல் வாசக்
கலவைகுங் குமங்கத் தூரி கனிதேன்செங் கன்னற் சாறோ
டிலகுசர்க் கரைநெய் வெந்நீ ரின்னணஞ் சேக ரித்துத்
துலங்கிய மருந்தீ சற்குச் சொரிந்தன னுச்சி தோய. (உஉ)

ஒற்றுடை கொண்டங் கொற்றி யொள்ளிய நீற ணிந்து
பொற்கலை பூணுல் சாத்திப் புகழ்மணிக் கலன்கள் பூட்டி
நற்றழை வில்வ மாதி நறுந்தொடைப் பொற்பு றுத்தி
விற்படு தூப தீப மிகுசுவை நிவேத னங்கள். (உங)

பற்பல பரிவி னேடும் பரிந்தமைத் தெடுத்துக் காட்டி
யுற்றிடு முபசா ரங்க ளுரிமையி னுஞற்றி முற்ற
விற்பிரு குடிநன் கேய்ந்த வியன்சொக்க நாய கிப்பாற்
பொற்புற வமருந் தெய்வப் புண்ணியற் போற்று வானல். (உச)

சீறிய நரசிங் கத்தைச் சிதைத்தசம் பரனே போற்றி
வீறுமுக் குடுமி ஞாங்கர் விண்டுவைத் திரித்தாய் போற்றி
தேறுவா மனன்கங் காளஞ் செருக்கறக் கொண்டாய் போற்றி
நீறணி யத்தா போற்றி நிமலனே போற்றி போற்றி. (உரு)

மன்னுதீ விலோச னத்தான் மனேசனைக் காய்ந்தாய் போற்றி
புன்னகை குயிற்றிப் புல்லார் புரத்தினைப் பொடித்தாய் போற்றி
பன்னகம் பணிக ளென்னுப் பழகிய மொய்ம்பா போற்றி
கன்னிநன் கணவா போற்றி கண்ணுத லோயே போற்றி. (உசு)

காமலைக் கிருத்தி மத்துக் கடவுளே போற்றி போற்றி
யரியுரி யனையின் வீக்கு மண்ணலே போற்றி போற்றி
பரவுகா ளத்துக் கண்டப் பண்ணவ போற்றி போற்றி
வரமளித் தென்னை யாள மனமுவந் திடுவா யென்றான். (உஎ)

அக்கண மம்ப ரத்தே யரியவாக் கொன்று பூத்து
மிக்கநன் மதுகை யீந்தே மேன்மைய ராம வஞ்ச
றக்கண திகையை நேடித் தசகண்ட வசுரற் கோறித்
தக்கநின் சீதை யோடுந் தனித்தகோ சலையிற் சாரே. (உஅ)

என்றசரீரி யாட விருங்களிப் புடனே தாழ்ந்து
தென்றிசை நாடி மிக்கத் தீரமாத் தம்பி யோடுஞ்
சென்றன னென்னுச் சூதன் றிகழ்மறை யனந்த மாய்ந்த
மின்றிகழ் சடைக ளுனும் வேதியர் தம்பாற் சொற்றான். (உகூ)

இராமன்வரம்பெறுபடலமுற்றிற்று.

ஆகச்செய்யுள். அகூஎ.

# மருந்தீசப்படலம்.

இமய வசலத் தம்மையினுக் கேய்ந்த தெய்வத் திருமணநே
ரமய முக்கட் சிவபெருமா னருளு மாற்றஞ் சிரமேற்றுச்
சமம தாகி மகியனைத்துஞ் சார்தற் குன்னிக் குறுமுனிவன்
சிமய மோளி நிறைபொதிகை சேர்ந்து வைகச் சிவேதையினை.

நாடி யிவர்போ தரியதமிழ் நாளு மணக்குஞ் செவ்வாயன்
கூடித் தன்னோ டடர்தரூஉங் கோதின் மாண வகர்பாலிற்
கோடி மறைகள் ளெடுத்திசைத்துங் குனிக்க வொண்ணுப் பால்வண்ணற்
றேடி வதியும் வான்மியூர்த் திருத்த லத்துப் பெருமை சொலீஇ.

அந்தக் கேத்தி ரங்கண்டங் கணைந்து தரிசித் தகமகிழ்ந்து
முந்திச் சவ்வி யஞ்சூழ்ந்து முன்ன ருற்ற வயன்றீர்த்த
முந்தும் பகல வன்றீர்த்த முற்றப் பலவற்றினு மாடிச்
சிந்தை மகிழ நீறணிந்து செய்ய கண்டி கைகள்பூண்டு. (ங)

அன்பு கொழிக்கும் பிருங்கிமுனி யரியசண்டன் றுபித்த
வின்பு வழங்கு மருட்குறியா மிலிங்க வடிவந் தொழுதேத்திப்
பின்பு வான்மியூர்க்கோயிற் பிறங்கும் பெம்மான் றனையுன்னி
முன்பு நின்று விண்ணகல முட்டுங் கோபுரம்பணிந்து. (ச)

கோயிற் புக்கு மனங்குளிரக் குவித்தகரங்கள் சிரமேற்க
வாய விழிநீரருவியென வரிய மேனி பரவசமா
யேய கேச மேசிலிர்ப்ப விரங்கி யெண்ணி றரம்பணிந்து
தோய வுவகை பாஞ்சோதித்துணைத்தா டம்மைத் தரிசித்தான்.

கண்டான் சிவபோ தத்துணையாற் காண்டற் கரிய வருட்குறியைக்
கொண்டான் மதுகை பெருமிதமாக் கூத்து கந்தான் முன்னரினி
லண்டா வேட்பு நணிபெருக வரிய வானந் தக்கடலி
னுண்டான் ஞான வமுதமதை யுரைத்தான் மறைக்கண் வந்தனவே.

வேறு.

சங்கர சதாசிவ நமோநம சாம்பவ மனோகர நமோநம
கங்கர மார்ப நமோநம கயிலைநற் கிரியோய் நமோநம
பொங்கர மார்ப நமோநம புண்ணிய ரூப நமோநம
விங்குனை யடைந்தே னமோநம வெளியனை யாள்க நமோநம. (எ)

சூலப் படையோய் செயசெய சுருட்பூஞ் சடையோய் செயசெய
வாலமிடற்றேய் செயசெய வரைத்தோ ளுடையோய்செயசெய
கால காலனே செயசெய கருணைத் தலைவா செயசெய
வேலற் றந்தோய் செயசெய விரையார் கழலோய் செயசெய. (அ)

கண்ணுத லோயே விசயீபவ கபர்த்தநன் முடியோய் விசயீபவ
பெண்ணொரு பாக விசயீபவ பிறைமுடிப் பெரும விசயீபவ
வெண்ணுதற் கரியோய் விசயீபவ வெழில்விடைத் தேவே விசயீபவ
சுண்ணவெண் பொடியோய் விசயீபவ சுடர்மழு வுடையோய் விசயீபவ.

வேறு.

இன்ன வகையின் வழுத்துதலு மிணையி னற்சீர் தமிழ்முனிவன்
முன்னர் பெருமா னெழுந்தருளி முகிழ்த்த புன்மு றுவலுடனே
யென்ன வேட்கை கேட்டிடுதி யென்ன வன்னிக் கீழமர
வன்ன முனிவன் பணிந்தெழுந்தங் கறைவான் பொம்மற்பணிவுடனே.

இன்ன விபுலத் தினிதெழூஉ மெண்ணி லசர வோடதிகள்
மன்னு மற்றை நற்பொருள்கள் வயங்கும் பெற்றி யினையோர
வின்ன பிணிக்கிங் கின்னமருந் தீயி னந்நோய் பாறுமென
வன்ன ஞான மெற்கிஞ்ஞான் றருளல் வேண்டு மென்றனனால்.

நாட்ட மூன்றங் கியைந்திடுநன் னங்கை பாகத் தெழிற்சோதி
கேட்ட முன்ன மலர்ச்சியுறக் கிளர்ச்சி யோடு நனிநோக்கி
வேட்ட வரங்க ளங்ஙனமே விளங்க நினக்குத் தந்திட்டேந்
தேட்ட மாகச் சிலவாய்மை தெரிப்பே மிவ்வா னியமென்றான்.

வேறு.

அகத்தியநீ கேட்டிடுக வனாதி யெல்லை
யாவார கத்தாண வத்தி னின்றுஞ்
சகத்தினுழை யுருத்திட்ட வணுவ ருக்கந்
தாங்கிடுமாற் றனுகரண புவன போகம்
வகுத்தவுடற் றன்மார்த்த காம மோக்கம்
வாய்த்திடற்குச் சாதனமா நண்ணு மேனு
மகத்தடைவே கன்மத்தா லுண்டா நோய்கா
லாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டே. (கரு)

அக்கொடிய பையுளினைப் போக்கற் காக
வரியவோ டாதிகளிங் கயுதங் கோடி
தக்கவகை கெழுதலுற் றெங்கு மோங்குந்
தடித்தமரஞ் செடிகொடிபு னுண்க வற்றின்
பக்குவமீப் பட்டைவே ரிலைமென் புட்பம்
பழம்வித்துக் கட்டைரச மெண்பே தங்கள்
கக்குமவ் வொவ்வொன்றுந் துவர்ப்புக் கார்ப்புக்
கசப்புத் தித்திப்புப் புளிப்புத்தாமே. (கச)

இவைதம்மு ளொன்றுடனொன் றுற்ற போழ்தங்
கெழீஇவு றுநல் லவுடதமுப் பானி ரண்டா
நவையறுமவ் வுறைபலவு மான வர்க்கு
நண்ணரிய நயம்விளக்க வேது வாமால்
சிவைரசபா டாண கந்தகஞ் சித்தர் தாமே
சிகிச்சையினுக் கெடுத்தாள்வர் சிற்றுன் மாக்க
ளவையறியா தாளுவரே லகலி டத்தி
லவலர்களாச் சாபமுடன் பாப மேற்பர். (கரு)

சித்தசுத்தி காருண்ய நல்லொ முக்கந்
தேவவுபா சனைதிர முதல வான
சத்தமைதி யுடையவனுத் தனைச்சார்ந் தான்றன்
றசநாடி தானமறிந் தெண்ப ரீக்கை
புத்தியுட னேயோர்ந்து தேகந் தேயம்
புகர்சடாக் கினிகாலம் வயது தூக்க
மொத்தவலி யடிசில்பே தங்க டம்மை
யுள்ளவகை நனியாய்ந்தங் குணர்தல் வேண்டும். (கசு)

தனிவாத பித்தசிலேட் டுமத்தா னேருந்
தன்னிலைபின் பிறநிலைமேற் பிறழற் றெருந்த
னிநிதா னத்துடனே நாடி நோக்கி
நவையருப்ப முற்றனுக் கினிய மாற்றங்
கனிவுடனே மிகவழங்கி யாம யத்தைக்
களைபவனே பண்டிதனு மிந்த நாமங்
தனிப்பரம னுமேற்கும் பெயருண் டாமின்
றமிழ்முனியே பரிகார நாளு நன்றே. (கஎ)

கும்பமுனி யினமுங்கேள் செயுஞ்சி கிச்சை
குயிற்றுமணி மந்திரம விடதம தாக
வம்புவியின் மூவகையா மவற்றின் சூழ்ச்சி
யாய்ந்தபிட கனைக்காணிற் பிணிக ளியாவுங்
கும்பிடுசெய் தக்கணமே விடைகொண் டேகுங்
குறித்தவிவற் றின்மகிமை விரிவி னுகப்
பம்பியவா யுள்வேதந் தன்னு ணன்கு
பகர்ந்துள்ளே மாயிடினுஞ் சிறிது கேண்மோ. (கஅ)

மணி.

ஆதியினிற் ருருகா வனத்து றைந்த
வருந்தவத்தர் மதர்ப்பனைத்து மழுங்க வாங்கு
நீதியினும் வாய்ந்தவொப் பனைக்கங் கேற்ப
நீலமான் மோகினியா நிலவி நிற்கப்
பேதியா விரதத்தர் முன்னர்ப் போந்து
பிறங்கியபெண் டீருடனே மருளக் கண்டு
சோதிநா முண்டென்னும் போத மூட்டித்
தொண்டடிய ராக்கொண்டு பின்ன ரெந்தன். (கசு)

பரிக்கிரக சத்தியெனும் விண்டு வான
பகர்மோகி னிப்பெண்ணோ டரிய ஞானம்
பரித்திடுநற் சையோக முயங்கு போழ்து
பகவாய ஞநுதித்தா னற்றை ஞான்று
தெரித்திட்ட விந்ததுவே றிசைக டோறுந்
திகழ்சத்த கிரிகளுறைத் தாவிச் சிந்தி
விரித்தபன்னற் கேணிகளி னிரைந்து நாளும்
வியனிரச மென்றுலகில் விளங்கிற் றன்றே. (உ0)

சுத்தமுறு முனிவரனே நீபோந் தாருந்
தொல்பொதிகை வரையுமுள வாண்டு காண்பா
யித்தகைய சூதமது வாய்க்கப் பெற்று
ரினியகம னக்குளிகை நன்கு ஞற்றிப்
பத்தெனுநற் றிசைகளெலா நொடிக்கு ளாகப்
படர்ந்திடுவர் மலைநிகர்மா ழைக்கு விப்பர்
சித்தியெட்டு மடைந்திடுவ ரிவர்கட் கேலாச்
செயலதுதா னென்றுமிலை யுலக மூன்றும். (உக)

மற்றையவாம் பாதரச முதல வாய
வகைகளறு பத்துநா லுபா சங்க
ளெற்றைக்கு மருந்துக்காங் குளிகைக் காகா
வெழின்மணியா வியற்றிடினு மிலேசதாய
வெற்றிசில வேபெறலாம் வியப்பே யின்று
விருப்பமறுந் தவசிகட்கே யிஃது மாகும்
பெற்றியுற விதன்வகையுட் சிறிதுன் னூலிற்
பெட்புறவைத் திடுதலுமோர் பெருமை யாமால். (உஉ)

மந்திரம்.

மந்திரமே நம்மரிய மேனி யாகு
மந்திரமே சிவசத்தி வடிவ தாகு
மந்திரமே வெண்கயிலைப் படிவ மாகு
மந்திரமே சிற்சபையி னடன மாகு
மந்திரமே யைந்துகிருத் தியம தாகு
மந்திரமே திருவருளா கார மாகு
மந்திரமே சருவவியா பகம தாகு
மந்திரமே மோக்கத்திற் கேது வாமால். (உங)

ஐந்தெழுத்தா னிலவுநன் மனுநான் கென்னு
வருமறைக ணனந்தலையேய்ந் தமலை செய்யு
மைந்தெழுத்தா னிறைந்ததனை யாய்ந்து நோக்கி
னடங்குமப் பதிபசுபா சங்கண் மூன்று
மைந்தெழுத்தி லேவந்த சத்த கோடி
யாகியெங் கணுநுவலு மந்திரங்க
ளைந்தெழுத்திற் பாஞானப் படிய தாய
வபாகலை யாமுற்று மடங்கி நிற்கும். (உச)

நகாமது நஞ்சரண மகர முந்தி
நற்சிகர முயர்மொய்ம்பு வகரந் துண்ட
மகரமது முடியாகு மவற்றே டாகு
மணியுறுஞா னக்கூத்துச் சிவவென் றுகு
நகரமுடன் மகரமதே யூன நட்ட
நடுயகரம் சிவனென நண்ணி நீடு
நிகரறுதி ரோதான மலமு மோர்பா
னீடுமெரு ளோடுசிவ மற்றோர் பாலாம். (உரு)

இத்தகைய வைம்பதத்தி னுண்மை தேரி
னெண்ணரிய வுருவதனாற் செபித்திட் டோரைத்
தத்தமிரு விழிகளினா னோக்கி னானுந்
தைவராலுற் றானுமனத் துன்னி னானுஞ்
சித்திரபா னுவின்முன்ன ரிமம தென்னத்
சிதறிப்போம் பன்னோய்கள் தவத்தின் மிக்க
வுத்தமநற் சைவர்களுக் கன்றி வேறே
யொருவற்கும் பலியாது முனிவ கேட்டி. (உசு)

அவ்புடதம்.

ஓட திக ளெண்ணரிய வோங்கி னாரு
முற்றபாற் கடலைமுன்னாளிற் றேவர்
கூடிமதித் திட்டனான் றமுதஞ் சிந்திக்
குலவியமா மூலிகைகள் பதினொன் காகு
நாடரிய காராலஞ் சிதறத் தோன்றி
நண்ணியவெம் மூலிகைக ளோரோன் பானும்
பூடவைக ளாயமருந் தினுக்குக் கூடாப்
புகலுஞ்சா ரணக்காகும் புகல வற்றுள். (உஎ)

சத்தூக மிருவகையா விளங்கு மாக்கஞ்
சாற்றுங்கா லையிலவையே மொழியொணாத
நித்தியகற் பத்தினுக்கு நேர்வ தாகு
நீணிலத்தி லிவைக்கிணைய வொன்று மில்லை
யுத்தமமா மற்றைய கோடானு கோடி
யுற்றமூ லிகைதம்மின் பெற்றி யுன்றன்
புத்தியினிற் றோன்றிடவே யிற்றை ஞானம்
பொருத்தினே மெவ்வயினும் பரப்பு வாயால். (உஅ)

வேறு.

என்றலுநற் பரசி வன்று ளிணைமலரிற் பணிந்தெ ழுந்து
நன்றுநா னிராசி யங்க ணனியோர்ந்தே னிறைவ நின்னை
யின்றுமருந் தீச னென்னு வேவருமே யேத்தல் வேண்டு
முன்றன் றரி சனங்கிடைத்தார்க் கொருநோயு மடரலாகா. (உகூ)

எனமுனிவன் கூறக் கேட்டங் கிறைவனங் ஙனமா கென்று
தனதரிவ்வை யோடு லிங்கந் தனின்மறைந்து போயி னானல்
பினர்வான்மி யூரிற் சின்னாள் பிறங்குமா ணவர்க ளோடு
மனமகிழ்வி னோடு றைந்தான் மறிகட லுட்கொண் டோனே.

மருந்தீசப்படலமுற்றிற்று.

ஆகச்செய்யுள்-கூஉஎ.

# திருமணக்கோலங்காட்டியபடலம்.



அம்புவிக் கேத்தி ரத்து ளங்கங்கு முன்னுந் தோறும்
வம்பவிழ் மணக்கோ லத்தை வழங்குவ நிற்சங் கென்னு
வம்பிகை யவத ரித்த வமலவெண் ணிமய வெற்பி
லெம்பரன் சொற்ற மாற்ற மெண்ணினன் கும்ப யோனி. (க)

உன்னிய வக்க ணத்தி லுடல்புள கிக்கப் பெற்று
னன்னதோர் வான்மி யூரி னண்ணிய சினக ரத்தே
வன்னியி னிழலிற் காட்சி வழங்கினன் விபுத ரியாரும்
பன்னுதற் கரிய வெள்ளிப் பாதவத் தெழுந்த மூர்த்தி. (உ)

ஆனகம் படக மார்த்த வழகிய தாள மார்த்த
வானதுந் துமிக ளார்த்த வலிகெழு தடாரி யார்த்த
மானமல் லாரி யார்த்த மாடக வீணை யார்த்த
கானநன் முரச மார்த்த கனத்தபே ரிகைக ளார்த்த. (ங)

சித்தர்கந் திருவர் விண்ணோர் திகழுகின் னரர்கள் போகர்
வித்தியா தரர்கள் யோகர் வேதபன் னகர்க ணீத்தோர்
வித்தக கருடர் தூய வீணநா ரதர்தும் பூர்வ
ரித்தகை யமுதர் மீதூர்ந் திறைவனை யேத்தி நிற்ப. (ச)

திகழுமே னகைய ரம்பை திலோர்த்தமை யூர்வ சிப்பெ
ணகழ்கடன் மாத ரார்க ளணிவளா வனிதை யோர்கள்
புகழ்திசைப் பாவை மார்கள் புரிகுழற் சசிம டந்தை
யகமகிழ்ந் தடர யாரு மரும்பணி பலவு ளுற்ற. (ரு)

பூதர்க ளருகி னின்று பொற்குடை தாங்கி யேந்த
மாதவர் கவரி பற்றி வயமுற வெடுத்து வீசச்
சாதக வடியர் சில்லோர் தகுவால வட்டங் கால
வேதமி வியோகி யோர்க ளெரிபந்த மேந்தி நிற்க. (சு)

கற்பக விடபி யுற்ற கானமென் வீப றித்துப்
பொற்பமர் புலவ ரியாரும் பூங்காந் தம்பி லேந்தி
நிற்பதற் கிடமே யின்றி நீள்விசும் பிடைநெ ருங்க
விற்படு மழைத்தா ரைப்போல் வீசின ரெங்கு மெங்கும். (எ)

தன்னிக ரின்றி யார்க்குந் தண்ணருள் பொழியும் வள்ளல்
சந்நிதிப் போந்து சூழ்ந்த தவத்தின ரும்ப ரிம்பர்
துன்னிநன் னிரையா னேர்ந்து துதிக்கவேத் திரத்தை யோச்சி
மன்னிடு நந்தி யெம்மான் மகிழ்வுடன் முன்ன நிற்ப. (அ)

அனநடை பாசிக் கூந்த லல்கிய துடிம ருங்குல்
வனமுலை நுதல்வெண் மூரல் வளைகழுத் தொண்க ணீலந்
தனமலை குமுதச் செவ்வாய் தனித்துடை யரம்பை யென்னு
வனமுடைத் தோகை யம்மை மதர்வொடு ஞாங்கர் மேவ. (கூ)

கங்கைபொற் றுது கொன்றை காமர்கூ விளநல் மத்தந்
தங்கிய கபர்த்த ஞாலுந் தனித்திரு முடியு ஞானம்
பொங்கிமிக் கருள்கொ ழிக்கும் புனிதவா னனமு மெங்குந்
துங்கமுற் றொளித யங்குந் தூயநல் விழிகண் மூன்றும். (கo)

குண்டல மூச னுலுங் குலவிய செவியு மெண்ணில்
பண்டைமா மறைகள் சொற்ற பவளச்செவ் வாயு மும்பர்
பெண்டுகள் கந்த ரத்துப் பிறங்குமங் கலநா ணிற்கக்
கொண்டநஞ் சத்து நீலக் கோலமா மிடற்றின் பொற்பும். (கக)

மான்மழு துடிமுச் சூலம் வரதமோ டபயம் வாய்ந்த
மேன்மைகொள் கரங்க ளுன்கும் விளங்குபூ ணூலின் மார்புந்
தேன்மலி தாரினோடு திகழுபாம் பணியி னூர்ப்புங்
கான்வளர் வரியின் றொக்குக் கட்டிய விடையி னேர்பும். (கஉ)

மதியினைத் துலக்கி ஞான மலரடி நீழற் கூட்டுங்
கதியரு ணீற்றுப் பூச்சுங் கண்மணி யசையு மொய்ம்பும்
விதியினற் றந்தை நீல விண்டுவின் விழிய தொன்றை
வதிதர விலங்கி மோக்கம் வழங்கிடுந் துணைபொற் றாளும். (கங)

பல்லிமை யோர்கள் காணப் பரவிமுன் னேத்தி நிற்பப்
பல்லியம் பலமுழக்கப் பதவியர் வாழ்த்தெ டுப்ப
வல்லியர் பல்லாண் டோத மறையொரு பாங்கர் கூற
நல்லிசை வீணை மீட்ட நன்னரி யாச னத்தே. (கச)

இன்னவா றெந்தை யீச னெழிற்றிரு மணக்கோ லத்தை
யன்னநீ ரகணி துன்னு மரியதொன் வான்மி யூரிற்
பன்னரு நியக்கு ரோதம் பராவிய வன்னி யின்கீழ்
மன்னிடத் தரிசித் தேத்தி வாழ்த்துவன் றமிழ்தேர் கும்பன்.(கரு)

வேறு.

ஏகமா யனேகமா யியங்குகின்ற சிவமே
யெல்லாமா யல்லதுமா யியைந்திட்ட தவமே
போகமாப் பாகமாப் பொருந்துநற் றேவி
புகழ்கின்ற மகிழ்கின்ற புண்ணியவென் தேவே
சோகமாய் மோகமாய் முன்போந்த வென்னைச்
சோதியாய் பேதியாய் சுதந்தரனு னல்லன்
பூகமா யீகமாப் பொலிகின்ற பண்ணை
புனைவான்மி யூரினின் பொன்னடியிற் சரணம். (கசா)

மடக்கு.

முப்புரங் குப்புற முற்றிய வில்லனே
முன்னுவார் முன்னம ளாவிய வில்லனே
யப்பினி லெழுதரு மாலமர் களத்தனே
யன்பில ரகமதி லயர்தரு களத்தனே
செப்பரு நீறுடற் செவ்விய வேடனே
சீதான் றேழனே டமாடர் வேடனே
வைப்பென வரியயர் வாழ்த்திடு தலைவனே
வளர்வயல் செறிந்திடு வான்மியூர்த் தலைவனே. (கஎ)

வேறு.

மதியொரு கலையாய் சூல மழுதுடி கலையாய் திக்குப்
பதியவை கலையாய் பாய்மா பருவுரி கலையாய் ஞான்றுந்
துதிமறைக் கலையாய் மார்பிற் துவன்றிடு கலையாய் வேகக்
கதிவிடைக் கலையாய் வெண்மைக் கதிருமிழ் கலையாய் போற்றி.

மறைசப னரியாய் போற்றி மகிழிட மரியாய் போற்றி
தறையொரு வரியாய் போற்றி தாமரீ ளரியாய் போற்றி
யறைகல னரியாய் போற்றி யருமுட லரியாய் போற்றி
நிறைசிர மரியாய் போற்றி நெற்றியி லரியாய் போற்றி. (கசு)

யமகம்.

சங்கர சங்கரத் தானய ஞதியர் சாற்றுகுழைச்
சங்கர சங்கரத் தாலடர்த் தாண்டவன் ருதைதமிழ்ச்
சங்கர சங்கரத் தந்திகழ் வான்மியூர்த் தாண்டவனற்
சங்கர சங்கர வென்பார்க் கருளுவன் றண்சரணே. (உ0)

பதுமபந்தம்.

மானகன மானமன மோனரின ஞானதன
மானமருந் தீசநின்றன் வார்கழலே—யீனன்
றனிதரிச னஞ்செய்தேன் றக்கலம் பெற்றே
னினியுலகில் வேண்டுவ தென். (உக)

அஷ்டநாகபந்தம்.

பருவாணி செல்வி பணியுமா மங்கை
மருவு மலேபயந்த மாது—பரவு
மனகமா பூணிமிசை யல்கந் தணனே
பனிய தொழிய பரி. (உஉ)

இரதபந்தம்.

நயவாய்மை வாணியன்ப ஞாணன்சொல் ஞான
மயமான வான்மியூர் வாச—நயமேவு
மாமரு தீதற வான்தந் திடுமெரு
மாமருந் தீச மணி. (உந)

கோமூத்திரி.

திருவான்மி யூரனைத்தினமு மேற்றுவேன்
வருபான்மை யூழினை வதியமு ஞற்றுவேன்
கருவேத னையேகக் கணத்தி லேற்றுவேன்
கருதாத ரையேதக் கணத்தி லேற்றுவேன். (உச)

### சுழிகுளம்.

சிவசிவ வாளுதியே
வளா மகளு மாபதி
சிமயங் கரமாளு
வகங் கணிகளுவா. (உரு)

### திரிபங்கி.

தீதற வேயெனைக் காத்திட வுன்றனைச் சேர்ந்தனனியான்
போதமி லேனினை வாழ்த்தினே னென்றும் புகழுகிற்பே
னாதர நீயெனைத் தாழ்த்திடாய் நன்றெனை யாளுவையா
னாத சிவாவனை யத்தனே மன்றி னடிப்பவனே. (உசு)

| | | |
|---|---|---|
| தீதறவே | எனைக்காத்திட | உன்றனைச்சேர்ந்தனனியான் |
| போதமிலேன் | நினைவாழ்த்தினேன் | என்றும்புகழுகிற்பேன் |
| ஆதரநீ | எனைத்தாழ்த்திடாய் | நன்றெனையாளுவையால் |
| நாதசிவா.(உஎ) | யனையத்தனே. (உஅ) | மன்றினடிப்பவனே. (உகூ) |

### காதைகரப்பு.

விதுவ யன்மேன் மலரு பாத
முதுவ னலமா சுவளரு நேச
பதுமை யணிமே னிமதரு வாம
பொதும யதயா யெனையருளாக. (ஙo)

### காதை கரப்பிற் கரந்தது.

கருணையாயது மருமமேயது
சருவமானது தருமமேயது. (ஙக)

### மாத்திரைச் சுருக்கம்.

ஒன்று மாத்திரை யொல்குநின் னுனியை
யொன்று சிங்குமெ னெண்மா வுரிகொளி
னென்று தேய்வுறு முரனற வங்கெடு
மொன்று குன்றிய வூமன்பா கத்தனே. (ஙஉ)

மாத்திரை வருத்தனை.

நீண்டு மாத்திரை நிலவிய நின்றலங்
தூண்டு மொன்றுறழ் சூலிநான் சேர்வலோ
தாண்டு மொன்றுறு தயைநிதி நோக்கியான்
காண்டு மொன்றிவர் கயங்கொடு வந்தனன். (கூகூ)

பிறிதுபடுபாட்டு.

சாலாக ஞாலுந் ததைந்தவொண் செஞ்சடையின்
மேலாக கங்கை விரவிநிதம் போலாகப்
பாலாய கீரோர் பன்னி பாகுறநீ
மாலோடு மாலாகி வாழ்ந்ததிறும் பூது. (கூச)

இது.

சாலாக ஞாலுந் ததைந்த வொண் செஞ்சடையின்
மேலாகக் கங்கை விரவிநிதம்—போலாகப்
பாலாய கீரோர்பன்னி பாகுறநீ மாலோடு
மாலாகி வாழ்ந்ததிறும் பூது. (கூரு)

வேறு.

இன்னவா றிறைஞ்சி யேத்தி யெழின்மருந் தீசன் மாட்டு
நன்னரின் விடையேற் றேகி நடையின்கேத் திரங்கள் சூழ்ந்து
முன்னருந் தென்றி முந்து முழைநிறை மலயத் தும்பர்
துன்னினன் புகழ்பல் லேய்ந்து தொல்கட லுண்டோனோர்மின்.

என்றுமா சூதன் கூற வெண்ணரு முனிவ ரியாரு
நன்றெனக் குரவற் றாழ்ந்து நளினபா தங்கள் போற்றி
யின்றுயா மருந்தீ சன்ற னிணையில்வான் மியூரையண்மி
வென்றியுற் றருளி லாட விடைதரல் வேண்டு மென்றார். (கூஎ)

முனிவர ரினைய மாற்ற மொழிதர சூதன் சொல்வான்
னனியது நீவிர் வாய்ந்த நாடரும் வாஞ்சை யிற்றை
யினியது பழுது றாமே யேகியங் கெழிற்பி ருங்கி
நனியுமை நண்ணு நாளு நற்றவம் புரிகவென்றான். (கூஅ)

திருமணக்கோலங்காட்டியபடலமுற்றிற்று.

ஆகச்செய்யுள்-கூசுரு.

# பிருங்கிதரிசனஞ்செய்படலம்.



உருத்திர வமல ஞான வுயர்திரு மேனி போன்று
மருத்தியி னமருஞ் சைவ வடியவ ருள்ள நேர்ந்துஞ்
சருத்தியி னிவந்து மேவுஞ் சத்துவ குணமிக் கொத்தும்
விருத்தியின் வெளிறு வீசும் வெள்ளியந் தரணி யோர்சார். (க)

மறைகளா கமவே ளாண்மை மதியுழை கூர்ந்து தூக்கி
முறையினும் பூத மாய்ந்து முன்னிய தவமு ஞற்றி
யறையுநல் வியோகத் தென்று மாதியை யுள்கி வைகிப்
பொறைமிகு மௌனர் சூழப் பொலிதரு முனிபி ருங்கி. (உ)

அஞ்செழுத் தசைப்பி னேதி யருமணி மொய்ம்பின் ஞால
விஞ்சிய நீறு யாணர் மேனியில் விளங்கப் பூசித்
தஞ்சமுற் றூர்கண் மாட்டுச் சைவநன் னிலையைச் சேர்த்து
நெஞ்சினிற் சிவம தல்லா னேர்ந்திடான் வேறு மொன்றை. (ங)

சிவமனு வுருவேற் றற்குச் செபமணி கரத்தி னேற்றுத்
தவமுத லடிய ரோடு சார்தலுற் றினிதி ருப்பன்
பவவினை தணத்தற் கேற்ற பரமனற் பணியே செய்வ
னவத்துழை யமையம் போக்கா னன்புரு வாயி னானே. (ச)

இன்னணம் வைகு மெல்வை யெண்ணின னுன்னத் தோர்நாண்
மன்னிய பசுக்கு ழாத்தைப் பாசகா ரியமாட் டாழ்த்தித்
துன்னிய போக மூட்டத் துலைபரி பாக நோக்கித்
தன்னடி நீழ லாரச் சமைத்திடுந் தாணு வொன்றே. (ரு)

குணமது குணித ணந்து குலவுஞான் றென்று மில்லை
குணியது குணம றுத்துக் குறித்திடக் கண்டே னில்லை
குணமதே குணிய தென்னக் குயிற்றிடி லின்ன வில்லை
குணியதே குணம தாகக் கொண்டிடி னவையொன் றில்லை. (சா)

குணகுணி யென்னு யாருங் குறிப்பது கரும நோக்கிக்
குணகுணி வகைசெய் தோதல் குற்றமே யாத லானே
குணகுணி யேக மென்னக் கொள்ளுதன் முறைமை யாமக்
குணகுணி யாக நிற்பன் குணமிலாச் சிவமே யென்றும். (எ)

ஆகையிற் சிவம தல்லா லன்னிய மாவொன் றென்று
மோர்கையிற் றெரித லூறென் றுன்னிவை கறைசாய் போழ்து
வாகைகொண் டோங்குஞ் சைவ மாதிரத் தும்பர் போந்து
தோகைகண் டழுங்குஞ் சாயற்றாநடைப் பிராட்டி யாளை. (அ)

போற்றிடா ளாகி ஞான்றும் பொலன்சடைப் பெம்மான் முன்ன
ரேத்தியங் கினிதி றைஞ்சி யிறைவனைத் தனியே சூழ்ந்து
வீற்றினி திருந்து றைந்தான் விறலசெழு பிருங்கி யென்பா
னாற்றிய வவனு ழப்பை யம்மையு மவண்கண் ணுற்றே. (கூ)

இவ்வகை யிவனு ஞற்ற லேதெனத் தெரிவே னென்னு
நவ்வியு மருண்டு நோக்கு நல்விழி மலைம டந்தை
சவ்விய முற்ற தேவி தன்னருந் தலைவன் மாட்டுக்
கொவ்வைமென் வாய்ம லர்ந்து கூறுவள் கும்பிட் டேத்தி. (க0)

என்னருங் கொழுந கேண்மோ யிவ்வுழை வருபி ருங்கி
யுன்னையே யிறைஞ்சி யேத்தி யுன்னையே வலமு ஞற்றி
யென்னையே நூவு காறு மெண்ணிடா திறுமாப் புற்று
னன்னவ னுள்ளத் தாழ மறிகில னெனவி சைத்தாள். (கக)

திங்களங் கண்ணி வேணிச் சிவபிரான் சிவையை நோக்கித்
துங்கநல் லுலக முற்றுந் துதைமடிக் கிழத்தி மாதே
யிங்கிவண் போந்து தாழு மிணையில்சீர் முனிபி ருங்கி
தங்குபே ரறிவின் மிக்கான் சழக்கினை யுஞற்றான் ஞான்றும். (கஉ)

என்னினு முன்னை வேறு வெண்ணிடா னுகை யானே
யென்னையே யஞ்ச லிப்ப னிவனைநீ யெள்க லென்று
னன்னதங் குணர்ந்த வம்மை யங்ஙன மாயி னிந்த
வுன்னருங் கயிலை யும்ப ரொருவனீ வைத லின்றி. (கங)

என்னையுன் ஞாங்கர் சேர்த்திங் கேய்தர லழக தாமோ
வுன்னிலு மென்னை மாறு வுள்கிடா னாகி விற்றை
யென்னையே வழிபட் டேத்தி யியங்குத லேனோ செய்யா
னன்னவன் மதர்வு முற்று மறிகுவ லடியா டன்னை. (கச)

உனதவ யவியி லத்த வுருவெனு வுஞற்று வாயேல்
பினரிவண் போந்து தாழும் பெற்றியைத் தெரிவ லென்று
ளனமவள் சொற்ற வாறே யமலனு முறுவல் பூத்துத்
தனதுடன் மனைவி யாவத் தனித்துவீற் றிருந்தா னன்றே. (கரு)

மற்றைஞான் றவண்பி ருங்கி வள்ளல்கோ லங்காண் குற்றுக்
கற்றையங் கபர்த்த வண்ணல் கண்ணுதன் ஞாங்கர் நேரே
பெற்றியி னடிவ ணங்கிப் பிறங்குதே சன் ஞிமிற தாகி
மற்றவர் நடுது ளைத்து வான்றனைச் சூழ்ந்து போனன். (கசு)

அத்தனு முனிவ னன்பை யாய்ந்துள மகிழ்ந்தி ருந்தான்
வித்தகி யிமய வல்லி வெகுண்டுடன் வீற்றி ருப்பப்
பத்தியின் மற்றை ஞான்றும் பணிதரப் பிருங்கி போந்தான்
சத்தியு மவனற் சத்தி சருவமுங் கோடற் செய்தாள். (கஎ)

என்புரு வாய்ந்து சற்று மியங்கிடச் சத்தி யின்றி
யன்புற முனிபி ருங்கி யபயமென் றானை நாட
முன்பொரு காலை யேற்று மூன்றுகால் கொண்டு நின்று
தன்பெருங் கொள்கை யாகத் தற்பரற் றாழ்ந்தங் குற்றான். (கஅ)

வேறு.

சங்கரனுமருந்தவனையேவிளித்துப்பலிறிறனுச்சாற்றுகிற்பா
னிங்குநீமறையொருங்குதெளிந்திருந்துமந்தணத்தையோர்ந்தாயில்லை
பங்கில்வாழ்சத்தியினைப்பணியாதுபாவமதுபரித்திட்டிங்ஙா
ளங்கம்வெண்ணங்கமதாயழகொருவியவலனுயாகினுயால். (ககூ)

காரணகாரியமென்னுக்கதிரொளிபோற்சமவாயங்கதிக்குமியாவுங்
காரணங்கள்சூக்குமமாக்காரியமேதூலமெனக்களுன்றுநிற்குங்
காரணத்திற்காரியம்வந்திலதென்னிலெவ்வினையுங்கணித்தல்கூடா
காரணத்தினைக்கருதிக்காரியத்தைக்கைவிடுதல்கனமதன்றே.

காரியந்தனைக்கொண்டேகாரணத்தினைத்தேருங்கடப்பாடுற்றுங்
காரியத்தைத்தணந்திட்டாற்காரணத்தாற்சிறிதளவுங்கடத்தலேலா
காரியமேகாரணத்தினும்வலிதாமெவற்றினையுங்காட்டலாலே
காரியமேகலமனைத்துமடைந்திடற்குக்காரணமாக்கழறலாமால்.

என்றுபலநன்னெறிகளிருங்கயிலையங்கடவுளெடுத்துக்கூற
நன்றிதுநன்றிஃதெனவுமறியாமேவாணுளினலமிழந்தே
னின்றுநானுய்ந்திடற்கிங்கெவ்வகையிற்கழுவாயையியற்றுகிற்பே
மொன்றியமுற்செனனத்தூழிவ்வகையிலெனைமயக்கியுளுற்றிற்றன்றே.

அண்டசராசரமடைவும்பெருதுபெற்றருள்கின்றவம்மையாளாக்
கண்டுதரிசனஞ்செய்யக்கருதாமற்கரியென்னுக்கணாந்துநின்றே
னண்டுசெயறனக்கென்னவில்லாதவமலனையேயறிந்துபோற்றிப்
பண்டைமறையினையறியாதேயச்சோவாணுளைப்பறித்திட்டேனுல்

இவ்விதமாய்முனிவரன்றுநெஞ்சுருகச்சிவஞ்சத்தியிருவர்முன்னர்ச்
செவ்வையுறப்பலீறரமும்வீழ்ந்தெழுந்துகரமுகிழ்ப்பச்செப்புவானுல்
பவ்வமதுவாய்ந்தவெனதாகமதைக்கழுவாயாற்பரிகரிக்கக்
கவ்வியபுண்ணியம்வழியுமோர்சேத்திரஞ்சாரக்கருதுவேனுல். (உச)

முந்துமொருகற்பத்தேயரியயர்கள்பூசையிழைத்தன்பின்ஞான்றும்
விந்தையுறவிழாவணிகளெடுப்பித்துப்பேறுபலவிளங்கமேவிப்
புந்தியுடனளித்தலிதனேடாக்கலினைவாய்ந்தநற்புகழுற்றேங்க
வந்தவொருநற்றலமென்னறிவினுழையிஞ்ஞான்றிலமைந்ததன்றே.

விடையருளிற்செல்கிற்பேனெனவிறைஞ்சித்தொழுதேத்திவிரும்பிநிற்பச்
சடைமவுலிப்பெம்மானும்பருப்பதியுமங்ஙனமேசார்கவென்ன
வடைவாகமுப்பாதம்வாய்ந்துநாற்பாதங்களமைக்கவுன்னி
யிடையதனிற்சீரைபுனைமுனிபிருங்கியாசலம்விட்டிறங்கினனுல்.

சிவபெருமான்றிருவருளிற்றிளைத்தநன்முனிவரனேசிறுபேதத்தாற்
றவமிகுவெண்மாகயிலையினையொருவித்தலவுபரிச்சார்ந்திட்டானேற்
பவவுலகந்தனிலமரும்புன்மக்கட்கென்னுகும்பாரின்முன்னு
ளவபேதத்தாலிருவர்கழுகுகளாயமர்வேதமலையுஞ்சாட்சி (உள)

வேறு.

துங்க வெண்பொற் கிரிபொருவித் தூய விருடி சிவேதையினிற்
கங்கை யாதி துறைகளுமைக் காலந் தோறு நீராடி
யங்கங் கேய்ந்த வருட்குறிக ளமர்ந்த தலங்க டரிசித்தே
யெங்கள் வான்மி மாநகரி னெல்லைக் கணித்தாக் குடதிசையில்.

வந்த யாண்டங் கோர்சயில வெண்மை முடிய னனிநோக்கி
யிந்த வடுக்க லினைமான வெங்குங் கண்ட திலையலைதின்
சுந்த ரத்தி னைத்தேரச் சுகமா மனமுங் குவிதலினுன்
முந்துங் குடுமிச் சேர்வலென முனிவன் ஞாங்க ரெல்கினனால்.

கருக்கு வாளி கருங்காலி கள்ளி காயா குங்குமமால்
முருக்குத் தேக்கு நாரத்தை மூங்கில் வன்னி வெட்பாலை
குருந்து கோங்கு புன்முருக்குக் கொன்றை சந்து பூவரசு
முருங்கை வாகை புனமுருங்கை முகிழ்மஞ் சாடி சீவந்தி. (௩௦)

இன்ன சாலம் பலகளுற வேய்ந்த கற்க ளின்னுப்பண்
மன்னுஞ் சுனைக ணிறைநீரி லோர்தாண் மரைக ணெகிழ்நரவே
மின்னு முவகைத் திரளொலிகண் மெல்லென் றவரோ கணமாகத்
துன்னு மெழிலி யொரு ஞாங்கர்த் தூங்கி யாரோ கணமுளுற்ற.

அன்ன மன்றி லூர்க்குருவி யாந்தை யுள்ளான் கவுதாரி
சின்ன காடை குயில்குருகு சிவந்த கோழி செம்போத்துத்
துன்னு நாரை சிவல்கிள்ளை தோகை புறவு மீன்கொத்தி
யின்ன பலதண் டலையதனி லிருந்து சிலம்பி லிற்சிலம்ப. (௩௨)

எந்தவிபுலக் கருப்பொருளு மேய்ந்து கழும வியப்புற்றுச்
சிந்தை மகிழ வொருபுடையிற் செவ்வி தான வரையும்பர்க்
குந்தி யிருந்து பிருங்கிமுனி குதுகு லித்து வதிதரவு
முந்து முழைக டமினின்று முனைவ ரொண்ணி லர்கள்வந்தார்.

முனிவர் போந்து பிருங்கிமுனர் முகமன் கூறி மேதகவாக்
கனிவின் மொய்த்தங் கினிதிருக்கக் கண்டு காண்மூன் றுடையமுனி
புனித மேற்ற மிகப்பெரியீர் பொலிவு வாயிச் சிலைமாட்டு
நனிவை கிடுநீ ரியாரென்ன நவில வேண்டு மென்றனனால். (௩௪)

வேறு.

நய்மிசக் காண்டந் தன்னி னண்ணிடு மௌன ரேயா
மெய்துதற் கரிய வீச னெறிலுறுந் தளிக ளின்சீர்
வைதிகச் சூதன் பாங்கு மகிழ்வுடன் கேட்ட வோர்ஞான்
றுய்வதற் கேற்ற தான முயர்வன்மி யூரென் றோர்ந்து. (௩௫)

இத்தல மேத்தற் குன்னி யிணையில்சீர் சூதன் முன்னர்ப்
பத்தியின் விடைக ளுடைப் பண்ணவ னிசைந்து நீவிர்
தத்திடு மூன்று கால்க டாங்கிய முனிவன் போந்தங்
கத்தலஞ் சாரு மெல்லை யமருவீர் தலத்தி லென்றான். (ருசு)

வந்துவண் வான்மி யூரில் வளரானா யோச னைக்கு
ளுந்துமிக் கிரியின் பொற்பை யோர்ந்திதன் ஞாங்கர் வைகி
யந்தியிற் றினமும் போந்தே யருமருந் தீசன் பாதம்
வந்தனை செய்து வந்து வாழ்குவ மீங்கென் றூரால். (ருஎ)

கேட்டலுங் கிளர்ச்சி பொங்கக் கேண்மைகொ ளருட்பி ருங்கி
நாட்டமூன் றுடைய வள்ள னற்சிவக் குறிய தொன்றை
நீட்டமுற் றிட்ட வந்த நீண்மலை தனிற்று பித்து
வாட்டமில் பூசை யாற்றி வணங்கினன் முனிவ ரோடும். (ருஅ)

அருங்குவ லயத்து மாந்த ரற்றைதொட் டிற்றை காறும்
பிருங்கிமா மலையென் றோதிப் பெரும்புகழ் பேசு வாரா
னெருங்கிய நகத்தி னுச்சி நிலைத்ததோர் சிவலிங் கத்தை
யொருங்கிய மனத்தா லேத்த வுயர்கதி யடைத றிண்ணம். (ருகூ)

கடியுயர் மலைம டந்தை கணவனம் பிருங்கி யீச
னடிகளை யுன்னத் துன்னி யக்கிரி வலவந் திட்டார்
படியினின் மனைவி மக்கள் பாக்கியம் பலவு மெய்தி
முடிவினிற் சிவபு ரத்தே முந்திவீற் றிருப்ப ரன்றே. (சு0)

நாயகன் முனிபி ருங்கி நல்லரா சலத்தி னேர்ந்த
வாயதன் சரித முற்று மற்றவர்க் கெடுத் துரைத்து
நேயமோ டவர்கள் சூழ நீண்மலை விட்டி றங்கித்
தாயகம் வாய்ந்த தெய்வ வான்மியூர்த் தலத்தி லுற்றான். (சுக)

அணித்தெனப் போந்த போழ்தங் கராமிய வளங்க ளோக்கிக்
கணித்திடற் கரிய வெம்மான் கழலடிச் சீரை யுன்னி
மணித்தட மல்கு மாட மாளிகை மறுகு நீத்துக்
குணித்திட வானைத் தாங்குங் கோபுர வாயிற் போற்றி. (சுஉ)

சோதிநற் றீர்த்தங் கண்டு சுகமுட னாடிப் பின்றைப்
பூதியிற் பொருந்த மூழ்கிப் புகழுகண் டிகைதோ டாங்கி
நீதியி னைம்ப தத்தை நேர்மையி னுச்சரித் தன்
காதிமுன் வாயிற் றுன்னி யடியுற வீழ்தெ ழுந்து. (சுரு)

நலமரு ளொற்றைக் கோட்டு நாயகன் றுளே யேத்தி
மலர்க்கர மஞ்ச லிக்க மகிழ்வுடன் சிரமே லேற்று
வலமென சூழ்ந்து ஞான வள்ளலாய் வீற்றி ருக்குங்
குலவிடும் வான்மி யூரின் கொழுந்தினைத் தரிசித் தானல். (சச)

மறைபல முறைக ளிட்டு மதித்திடற் கரிய ளுகி
நிறைவுற நின்ற தெய்வ நீண்மருந் தீச னெங்கள்
பிறையணி சடிலப் பெம்மாற் காண்டலும் பெரிது வந்து
தறைமிசை வீழ்ந்து கண்ணீர் ததும்பிட வேத்தினுறைல். (சரு)

வே று.

திருந்தலர்கண் மூவெயிலைச் சிகிவிழியி னுன்விழுங்கி
யருந்தவர்முத் தகுவருமை யருளுெக்கந் தானருளி
வருந்தியவிண் ணவர்வீமம் வல்லியுற வாழ்வளித்த
மருந்தீசன் றனையுன்ன மனமென்ன மனமே
மகதேவன் றனையுன்ன மனமென்ன மனமே. (சசு)

திங்களுர கம்பயிலுஞ் செங்குடிலத் தைந்நுதியிற்
கங்கைதீர்த் திகையிறுத்திக் காரியா தியவிபுதர்
மங்கியகம் பலைவிலக வண்கற்பத் தேயமர்த்துஞ்
சங்கரனைத் தாழாத தலையென்ன தலையே
சதாசிவனைத் தாழாத தலையென்ன தலையே. (சஎ)

நறைவழியு மலர்த்துளப னுன்முகன்வா சவன்முதலோர்
குறையொருவ வந்திறைஞ்சிக் கூக்குரல்விட் டோலமுறக்
கறைமணிகண் டத்தனெனுக் காட்சியினை யேயளித்த
மறைமுதல்வ னைச்சாற்று வாயென்ன வாயே
வான்மியூ ரனைச்சாற்று வாயென்ன வாயே. (சஅ)

நண்ணுசரா சரமுய்ய நல்லியோகத் தமர்போழ்து
தண்ணறுநாண் மலர்ப்பகழி தாங்கியைங் கணைக்கிழவன்
புண்ணியன்மே னியிலோட்டப் பொறியழனுட் குழைவித்த
கண்ணுதலோன் றனைநோக்காக் கண்ணென்ன கண்ணே
காமநா சனைநோக்காக் கண்ணென்ன கண்ணே. (சகூ)

பொங்காழிக் கூபுரந்து போந்தமா வலிமுன்னர்ச்
சங்காழி மாலண்மித் தாலமூ வடியிரந்தே
யங்காய்ந்து லகளந்தோ னவன்வெரிநென் பினைக்கவர்ந்த
கங்காளன் சீர்கேளாக் காதென்ன காதே
கயிலையோன் சீர்கேளாக் காதென்ன காதே. (ருo)

மடலவிழ்வீ யினமாக வள்ளலருட் குறிமுடியி
லடாவ்ருச் சித்தமர்ந்த வரியமழ முனிவரன்முன்
விடவிடென வருஞமலி வீய்ந்திடவே நணியுதைத்த
கடவுளினற் பணிபுரியாக் கையென்ன கையே
கபாலியின் பணிபுரியாக் கையென்ன கையே. (ருக)

இம்மையினு மம்மையினு மெம்மையினு மேபுணர்ந்து
செம்மையுறச் சேதனர்க்குத் திருவருளைத் துய்ப்பிக்குஞ்
செம்மலென வெஞ்ஞான்றுஞ் சீர்த்தியுற வேயெழூஉ
மைம்முகனு லயஞ்சூழா வடியென்ன வடியே
யனந்தனு லயஞ்சூழா வடியென்ன வடியே. (ரு௨)

வேறு.

இங்கிவ னிவ்வா றேத்தி வெழின்மலைப் போந்து வைகிச்
சங்கான் றனது சேவை சார்தரு மந்தி தோறும்
பொங்கிய முனிவ ரோடும் புரிந்தபின் விடைப்பெற் றேகித்
தங்கான் கயிலை சார்ந்து சாம்பவக் கிரேச ராஞன். (ருங)

வேறு.

திருவான்மியூர்ப்புராணத்ததனைப்படித்திடுவார்செவியிற்கேட்பார்
மருவுமதை யெழுதிடுவாரொழுதுவிப்பார்பிறர்மாட்டுவகுத்துச்சொல்வார்
பொருளுரைப்பார்தமைப்பணிந்துபொன்னுதியீந்திடுவார்பூரித்துள்ள
மருமலர்கொண்டெஞ்ஞான்றுமருச்சித்துப்பூசித்துவணங்குவார்கள்.

இம்மையினிற்பதினுறுபெரும்பேறுமனைத்தினையுமெளிதினுளுஞ்
செம்மையுறவனுபவித்துப்பற்பலவாம்பதமுநதிதேவரோடு
மம்மையினின்மிகத்துய்த்துச்சொக்கநாயகியம்மையமரும்பாகத்
தெம்மருந்தீசன்றுணைத்தாண்மலர்நீழலெந்நாளுமிருந்துவாழ்வார்.

போற்றிடுநற்றிருவான்மியூருறையுமருந்தீசப்புனிதன்வாழ்க
சாற்றரியகருணையுருவானசொக்கநாயகியாந்தன்னைவாழ்க
வாற்றுபெரும்பூதிமணியைம்பதத்திலன்புகொளுமடியர்வாழ்க
வேற்றிடுவேதாகமபுராணமிதிகாசமுதலெவையும்வாழ்க. (ருசு)

நீலமாமணிமிடறுமுக்கண்ணுஞ்செஞ்சடையுநிறைவெண்ணீற்றுக்
கோலமாருமைபாகுமணிவரதாபயமழுவுங்குலவுமானுந்
தாலமகிழ்திருவான்மியூரதனிலேபொளிரத்தனித்தமன்றத்
தேலவேதிருநடனநவிலவெடுத்திடுபாதமிறைஞ்சிவாழ்வாம். (ருஎ)

பிருங்கிதரிசனஞ்செய்படல முற்றிற்று.

ஆகச்செய்யுள்-கருஉ.

திருவான்மியூர்ப்புராண முற்றிற்று.

உ

சிவமயம்.

# திருவான்மியூர்ப்புராண வசனசுருக்கம்.

## வான்மீகர்பூசித்தபடலம்.

தாமரைமலரி லெழுந்தருளியிருக்கு நான்முகக்கடவுளின் புத்திரருட் சிறந்த தவத்தினை வாய்த்த வியாகிருதி யென்பவர் பெற்றெடுத்த பிரசேதசு என்னு முனிவரனைவர் வானப்பிரஸ்தனாய் வாழ்ந்து வருகையில் இவருக் கொரு புத்திரன் பிறந்தனன். இவன் சிறுவயது முதல் பிதாச்சொலைக்கே ளாதவனாகிக் கல்வி முதலிய பயிலாது காட்டிலுள்ள மறவர்களுடனே கூடிக் கொண்டு அவர்கள்செயுந் தீமைகளி னன்குபழகிப் புண்ணியத்தினைச் சிறிது நினையாது தனது குலத்தொழிலை முற்று மறந்து, இரவும் பகலுங்கொலை புரிதலையே விரதமாக்கொண்டு உலகாயதனாய்ச் சஞ்சரித்துவருவன். வே டுவர் கூட்டத்திலே கூடிக்கொண்டு காட்டிலே சென்று வேட்டையாடுவன், பெரிய விருட்சங்களிலேறி மிருகங்களிருக்குமிடமறிந்து அவை வரும் வழியில் வலைகளைக்கட்டி அவற்றுளகப்படு மவைகளைக்கொண்டு செல்வன், காட்டின்வழியே போகிறவர்கள்மேல் புலிப்போல் பாய்ந்து கொல்லுவன். இவ்வாறு வாழ்கையில் ஒருநாள் ஒரு பெரிய கானத்தினுழைந்து ஒரு சிங்கத் தினைக் கொன்று திரும்புகையில் வழியிலொரு மரத்தில் ஒரு பெரியவர் கால்மேலாகவும் தலைகீழாகவுந் தொங்கக்கண்டு ஆச்சரியமுற்று "இவனிவ் வண்ண மிருப்பானேனேதோ சாதகம்பண்ணுகிறான்போலு மிவனையிக்கண மே மாய்ப்பேன்" என்று ஒருபாணத்தை யவர்மீதுவிட்டனன். அது இரண்டு துண்டாய்ப் போயிற்று, மறுபடியுஞ் சிலவம்புகளைப் பிரயோகித்தனன். அவைகளுந் தூளாயின. வேடன் நோக்கிப்பயந்து "ஓ!ஓ! இவன் தேவனோ அல்லது முனிவனோ! எனது அத்திரங்கள் சிறிதேனுந் தீமைசெய்யவில்லை யே, அந்தோ! இம்மகானை நான் கொல்லத்துணிந்து மிகப்பாவியானேன், தவத்தினைக்காட்டிலு முலகில் பெரியகாரியமொன்றுமில்லை, என் காலமுழு வதினையும் வீணாய்க்கழித்தேன், இனியுண்மைப்பொருளையறிவது எங்ங

னம், பிராமணர் குலத்திற் பிறந்தும் வேடுவனுத்திரிந்து கெட்டேன், இவ ரைத் தரிசித்தமாத்திரத்தி லெனக்குச் சிறிது நல்லறிவுவிளங்குகிறது, இவர் தமது கண்களைத் திறந்து என்னைப்பார்ப்பாரேல் நான் புனிதனுய் விடு வேன்'' என்று தன்னுள் நினைந்து தன் கரத்திருந்த வம்புகளைத் தூரத்தே யெறிந்துவிட்டு அவர் சமீபத்தில் சிலகாலங் காத்துக்கொண்டிருந்தனன்.

மரத்தினை யாதாரமாகக்கொண்டு தொங்கு முனிவர் ஒருநாள் கண்வி ழித்துத் தனது சமீபத்துள்ள வேடுவனைப்பார்த்து, ''அட துஷ்ட! பிராம ணகுலத்திற் பிறந்து தந்தையின்வழியே காலத்தைக் கழியாது உலகத்திற் கோர் சனியனுக வாழ்ந்து நல்லவர் நடுங்கப் புல்லர்களுடனே கூடிக்கொ ண்டு புலாலினையேயுண்டு கெட்டாய் நீ யெவ்வித முய்வாய் மாமிசபருவ தம்போலவுள்ள நீ யெப்போது சாவாய் பாவி''யென்றனர். உடனே வேடன் பயந்து நடுங்கிச் சமீபத்திலோடித் திருவடியில் வீழ்ந்து ''சுவாமீ! ஏழை யேன் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுத்து நானினியுய்யவேண்டிய வழியை யருளவேண்டு'' மென்றனன், முனிவர்கேட்டுக் கூறுவாராயினர்.

''வேட! நினது பூர்வ சென்மத்து நல்லூழின் வழியால் நினக்குச்சிறிது அறிவு இப்போது விளங்கியது, நீ யுண்மையறிந்து உய்வதற்கு ஆதாரமாக விருப்பது யோகமேயாம், அவ்வியோகங் கூடுதற்கு முந்திப் பஞ்சேந்திரி யங்களின் வழியாகச் செல்லுகின்ற புந்தியை யொருவழிப்படுத்தி நாளடை வில் உலகத்தை மறக்கும்படிப் பயின்று நினது தத்துவங்களை நன்குச்சோ தித்து இவைகட்குச் செயல்களேதுங்கிடையாதென்றும், இவைகளைச் சேட் டிப்பிக்க விவற்றின் வேறுயொன்றுள தென்றும், அதுவே யான்மாவென் றும், இவ்வான்மாவும் பளிங்குபோன்று சார்போதனுய் விளங்குவதால் இத னுனுதிமலத்தைப் போக்க இதனின் வேறுயிருப்பதொன்றுண்டு அதுவே பரமான்மாவென்றுந் தேர்ந்து, இப்பரமான்ம தரிசனம் இருபுருவத்தின் மத்தியிற் காணும் பொருட்டு மூலாதாரத்துவைகும் மூரிப்பாம்பைச் சடாக் கினியான் மெல்லென வெழுப்பிச் சந்திரமண்டலத்துட் தாக்கச்செய்து அவணின்று மொழுகுமமுதத்தையுண்டு கோடியுகங்களை நொடிநேரமாக் கழித்து அட்டமாதி சித்தியுங் கைவரப்பெற்று யோகத்து வீற்றிருப்பர் பெரி யவ''ரென்றார்.

வேடுவன் கேட்டலுஞ் சந்தோஷித்து விடைபெற்றுத் திரும்பிக் கங்கா தீரத்தின் சமீபத்து ஒரு ஆசிர்மம் வகுத்துக் கிழக்குமுகமாவிருந்து யோகத் திற்கு ஆரம்பித்தனன். தனது குருசொன்ன நிலையினிலிருந்து, ஆயிரம் வருடம் யோகங்கூடினன். இவ்வேடுவன்மீது புற்று வளர்ந்து விட்டது

அதில் அனேக வாலவிருட்சங்கள் முளைத்தன. அம்மரங்களின் கீழுமே லும் அனேகமான மிருகங்களும் பட்சிகளும் வாசமாயின.

இவனிவ்வாறிருக்கையில் நாரதமுனிவ ரொருநாள் சத்தியலோகஞ் சென்று பிரமன் சந்நிதானத்தில் வந்து யாழ்வாசித்து நின்றனர். வேதன் கேட்டுச்சந்தோஷித்து, முனிவ! உலகத்திலேதாகிலும் அதிசயமுளதோவெ ன்றனர், நாரதர் பணிந்து ஐய! நானொன்றுங் கண்டேனில்லை, இனியே தாகிலு நடக்கவேண்டிய வதிசயங்களுளவேல் தேவரீர் தயைசெய்கவென் றனன். திசைமுகன் முனியை நோக்கி யாழ்வல்லோய்! கேட்டிடுதி, சில தினங்கட்கு முந்திக் கோதாவரித்தீரத்தில் கௌதமனுரிருந்தனர்; அங்குநார ணர்வந்து அவரைப்பார்த்து முனிவ! நீமிகவிளைத்தனை எங்கெந்த க்ஷேத் திரங்களைத் தரிசித்துக்கொண்டு எங்கெந்த தீர்த்தங்களிலாடிவந்தனை அவ் வவ்விடங்களிலேதாகிலும் விசேஷங்களுளவோ கூறுதியென்றனன். கே சவ! நான் வரும்வழியி லொருகுன்றில் நான்கு குரங்குகள் விபூதிபூசிக் கொண்டு வில்வவிதழ்களைக்கொண்டு சிவபூசைசெய்துகொண்டிருந்தன. அச் சமயத்தில் ஒரு வேட னவ்வழியேவந்து அவைகளைப்பிடித்துக்கயிற்றாற்கட் டிக் கொண்டேகினன். அவற்றுளொரு குரங்கு அவ்வேடனை நோக்கி எங்களினாலுனக்கு யாதொரு பிரயோசனமுமில்லை, நாங்கள் எங்கள் சிவ பூசை முடித்துச் சுவாமியின் நின்மாலியங் கொண்டுபோய்க் கொடுத்த பின் னரே எம்மனைவியர் புசிப்புண்பர், குட்டிகளும் பால் குடிக்கும்; இலையேல் வழிபார்த்துப் பார்த்து இறந்துவிடுமென்றது. உடனே வேடுவன் மனதிரங் கிக் கட்டவிழ்த்துவிட்டுத் தன்வீடேகினன். அந்நான்கு குரங்குகளும் பின்னர் ஒரு மரத்திலிருந்துகொண்டு பேசவாரம்பித்தன. நாம் என்ன செய் வது இந்த மாசிமாதம் சோமவாரம் சிவராத்திரி வரப்போகிறதாம் அன்று இரவில் நான்கு சாமமுஞ் சிவபூசை செய்தல் மிகப்புண்ணியமென்று சில முனிவர்பேசிக்கொண்டார்கள். நாமெப்படிசெய்வது வேடுவனுடையகயிற் றின் கட்டினால் நாமிக மெலிகின்றோமே என்றன வென்றார். கௌதமர் வார்த்தையைக் கேட்டவுடன் நாரணன், வாரும் நாம் போய் அவற்றைப் பார்ப்போமென்று முனிவருடன் அவ்விடம் போய் மரங்களின்மீது இருக் குங் குரங்குகளைத் தன் கண்களாற் கடாட்சித்து அவற்றின் துன்பத்தைப் போக்கினன். அவைகள் வலிவுற்றுச் சுகமாய் வாழ்ந்தன.

இரண்டொரு நாளாயினவும்சிவராத்திரி தினம்வர அக்குரங்குகள் நான் கும் ஸ்நானஞ்செய்து விபூதிதரித்து வில்வ விதழ்களைப் பறித்துக்கொண்டு சமீபத்துற்ற சிவாலயத்திற்குச்சென்று அச்சிவாலயத்துள் முன்னமே புலத் திய முனிவர் கதவை மூடிக்கொண்டு சிவபூசை செய்து கொண்டிருந்த னர். குரங்குகள் மூன்று சாமத்திருந்துங் கதவு திறவாமையால் கோபங் கொண்டு கதவைப் பெயர்த்தெறிந்து உள்ளே பிரவேசித்தன. புலத்தியர்

கண்டு கோபித்து நீங்கள் என் சிவபூஜைக்கு இடையூறு செய்தமையால் உடனே அழிந்துபோகக் கடவீர்களென்று சபித்தனர். குரங்குகள் புலத்தியரை நோக்கி முனிவ! அடுத்த சன்மத்தில் நின்குலத்துடனே எங்களால் மாயக் கடவை யென்று சபித்து விட்டிறந்தன. நாரதமுனியே! சிவபூசையின் மத்தியில் கோபித்துக் கொண்டமையால் புலத்திய முனிவன் அசுரனாகிய இராவணனாகப் பிறப்பன். குரங்குகளுன்கும் சிலகாலம் என்னுலகில் வாழ்ந்த பின்னர் உலகில் வாலி, சுக்கிரீவன், அனுமான், அங்குதனாகப் பிறந்து இராவணனுக்குப் பகையாவர். நந்தியெம்பெருமான் சாபத்தால் விஷ்ணுவானவர் இராமனாகப் பிறந்து அவ்விராவணனைக் கொல்லுவர் என்றனர். இங்ஙனம் கூறிய பிரமனை நாரதன் வணங்கி, பங்கயனே! விஷ்ணுவிற்கு நந்தியெம்பெருமான் சாபமேன் வந்தது திருவாய்மலர்ந்தருளவேண்டுமெனக் கூறுவர். ஒருகாலத்துப் பிருகுமுனிவரானவர் மூன்று லோகங்களையுஞ் சஞ்சரித்து வருகையில் ஒருநாள் வைகுண்டத்திற்குச் சென்று நாராயணன் எழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் சமீபிக்க வாயலிலிருந்த கருடன் தடுத்து முனியே யுள்ளேபோகற்க, எனது தலைவன் தனது நாயகியோடு சுரதலீலை செய்கின்றனன் என்றது. முனிவன் கேட்டுச் சிவ! சிவ! இதென்ன கொடுமை இப்பொழுது பிரதோஷ சமயமாயிற்றே இவ்வமயம் எத்தகையர்களும் சிவதரிசனார்த்தமாகவும் சிவபூசையதாகவும் இருக்கின்றனரே, இவ்விஷ்ணுமாத்திரங் காமாந்தகாரனாயிருப்பது என்னை! என்று கோபித்து உடனே யவ்விடம் விட்டுப் பெயர்ந்து கைலாயத்தை யடைந்து நந்தியெம்பெருமான் திருவடியில் வீழ்ந்தெழுந்து தோத்தரித்து, சுவாமீ! இப்பிரதோஷகாலத்தி லெவ்வுலகத்தவரும் சிவத்தியானத்துட னிருக்கின்றனர். வைகுண்டத்தில் விஷ்ணுமூர்த்தி மாத்திரம் இலக்குமியுடன் கலவித்தொழிலிலிருக்கின்றான் இவனுக்கு வருங்கதியாது கட்டளையிட்டருள வேண்டுமென்றனர். நந்தியெம்பெருமான் பிருகுவை நோக்கி, முனியே! இத்தகைய தீமையை யியற்றிய நாரணன் மண்ணினில் மனிதனாகப் பிறப்பன் இவன் மனைவியை யொரு விராக்கதன் கொண்டேகுவன். பின்னர் குரங்குகூட்டங்களைக்கொண்டு அசுரனைச்செயித்துப் பிரதோஷவிரதமனுஷ்டித்துச் சிவபூசையியற்றி வைகுண்டஞ் சேர்வனென்றனன். முனிவன் கேட்டுச் சந்தோஷித்துப் போயினன். நாரதர் இக்கதையினைப் பிரமனிடத்திற் றெரிந்துகொண்டு விடைபெற்றுத் திரும்புகையில், என்செய்வேன் இக்காதையினை யுடனே யாரிடத்தும் சொல்லேனாகில் என் தலை வெடித்துவிடுமே யென்று அங்குமிங்குமோடி யலைந்து ஒரு வனத்தில் ஒரு ஆலமரத்தடியில் ஒரு புற்றிருக்கக்கண்டு அதனுள் யாராவதிருப்பரொன்றுன்னி அப்புற்றில் தன் வாயைவைத்துப் பிரமா தனக்குச் சொன்னவற்றை யெல்லாம் சொல்லிவிட்டுப் போயினர்.

புற்றினுக்குள்ளிருந்த வேடன் யாவற்றையுங் கேட்டுணர்ந்து வெளி வருங்கால மெதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் இவ்வேடனது யோகத் தீயின் சுவாலை யெங்கணு மெரிக்கக்கண்டு தேவர்கள் பிரமாவிற்குச்சொல்ல பிரமன் புற்றினை யடைந்து தெய்வத்தச்சனாகிய மயனைக்கொண்டு மராமுத லியவற்றைக் களைந்து வான்மீகமுனியே! வெளிவருகவென்றனர். வேடன் முனிவடிவோடும்வந்து வணங்கக்கண்டு முனியே நாரதர் நினக்குக் கூறிய காதையை யொரு இதிகாசமாக வியற்றுகவென்று கட்டளை யிட்டே கினர். வான்மீகமுனிவ ரங்ஙனமே செய்து பல முனிவரோடும் வாழ்ந்து கொண்டிருக்கையில் ஓர்நாள் அவ்விடத்தில் மார்க்கண்டேயர் வந்தெழுந்தரு ளினர். இவரைக் கண்டவுடன் வான்மீகமுனி சாஷ்டாங்கமாக வீழ்ந்து பணிந்து சமீபத்திருந்து தானியற்றிய இதிகாசத்தினைக் காட்டித் தன் யோக வரலாற்றினைச் சொல்லினர். மார்க்கண்டேய முனியை நோக்கி நீ யென்ன காரியஞ் செய்தனை ; ஆயிரம் வருடமியோகமிருந்ததனாலென்னப் பிரயோ சனம், அனேக மலைகளும் மரங்களும் எத்தனையோ கோடிகால மவுனமாக விருந்து யோகஞ்செய்கின்றன. அவைகண்ட விலாபமென்ன, ஒருநாள் செய்யும் சிவபூசைக்கு இது சமமாமோ : பசுக்களின் கதைக்ளை ஆயிர ஆயிர மாக வியற்றிடினும் பதியாகிய சிவபெருமான் சரித்திரத்தைச் சொல்லுமடி யார்க் குண்டாகிய புண்ணியம் வருமோ, சிவபூசை யொன்றினாலன்றோ சகல புண்ணியத்தினையும் பெறலாம், சிவபூசையில்லாத வீடு புலைச்சேரியா கும் அப்பூசையில்லார் வீட்டினிலுண்பவனும் புலையனாவன் வேதங்கள் கொண்டாடும் விபூதிருத்திராட்சம்பூண்டு சிவபூசையியற்றி மூர்த்திதலந் தீர்த்த முறையாகத்தெரிசிக்கின்ற பெரியோரைக் கண்டவர்களும் புண்ணிய ராவரோ என்றனர்.

இந்தப் பிரகாரஞ் சொல்லிய மார்க்கண்டேயரைப் போற்றி அடியில் வீழ்ந்து அந்தோ! கெட்டேன்! கெட்டேன்! யோகத்தைச் சாதகமென் றெண்ணாது சாத்தியமென் றெண்ணினேன். பதிநூலறியாது பசுநூல் பேசினேன் அடியேன் கதியாது உய்யுமாறு திருவருள் புரிவாய் என்றலும் மார்க்கண்டேயர், முனியே! நீ இந்த வுலகத்தினைப் பிரதட்சணமாக வரு வாயேல் எவ்விடத்து "நானிங்கு இருக்கிறேன்," என்ற அசரீரிகேட்கிறு யோ அதுவே சிறந்ததலமாக வெண்ணி அவ்விடத்துச் சிவபூசை செய்து உய்வாய் என்று கூறிப்போயினர். உடனே வான்மீகமுனிவர் பூமிமுழுவ தினையும் வலமாகச் சுற்றி வருகையில் அசரீரிகேட்டது. கேட்டவுடன் குதுகலித்து ஒன்றுந் தோன்றாது சிறிதுநேர நின்று தெளிந்து அந்தத்தலம் பாலாற்றினுக்கு மேற்குக் கடற்கரைக்குச் சமீபமாக விருக்கக்கண்டு அவ் விடத்திருந்து சிவபூசை முறையே யியற்றிக்கொண்டிருக்கையில் சிவபெரு

மான் ஒரு வன்னி விருட்சத்தின்கீழ்க் காட்சிகொடுத் தெழுந்தருளத் தரிசித்துத் தோத்தரித்து நின்ற முனிவரனைப்பார்த்துச் சுவாமியானவர் அறிஞ! நினக்கு வேண்டும் வரங்களைக் கேட்டிடுதி யென்றனர். வான்மீகர் பணிந்தெழுந்து ஆண்டவ! நின்னைத் தரிசித்த மாத்திரத்து என்பாவமனைத்து மொழிந்தது நான் பூசித்த இச்க்ஷேத்திரத்தினுக்கு என் பெயரால் திருவான்மியூர் என்று வழங்கவேண்டும், தேவரீர் சிரசிலுள்ள கங்கையினின்றுஞ் சிலதீர்த்த மிவ்விடத்துண்டாக வேண்டுமென்றனன். அக்கணமே முதல்வன் தனது சடாபாரத்திலுள்ள கங்கையினின்று நீரைச்சிந்த அது ஐந்து துளிகளாய் பூமியில் வீழ்ந்து கிழக்கில் சன்மநாசனி யென்றும், தெற்கில் காமநாசனி யென்றும், மேற்கில் பாபநாசனி யென்றும், வடக்கில் ஞானதாயினி யென்றும், நடுவில் மோட்சதாயனி யென்றும், ஐந்து தீர்த்தங்களாயின. சிவபெருமான் முனியே நின்விருப்பத்தின்படி ஐந்து தீர்த்தங்களை யுண்டாக்கினோம் நீ இந்த ஞானதாயினியிற் படிந்து சகல ஞானங்களையும் பெற்று வாழக்கடவை! இன்றையதினம் பங்குனிமாதம் பௌர்ணமியாகையால் வருடந்தோறும் இத்தினத்தில் நம்மைத் தரிசித்தார் யாவருக்கு மோட்சந்தருவோம் நீ யெப்போதும் நம்மைத் தரிசித்துக்கொண்டு இவ்வூரில் வாழ்வாயாக வென்று கூறிமறைந்தனர்.

வான்மீகர் பூசித்தபடல முற்றிற்று.

---

## இரட்சசுசென்மநாசப்படலம்.



நான்முகக் கடவுளின் கொட்டாவியிற் குரங்கு ரூபமாய் இரட்சசு என்பவன் பிறந்து, சத்தியலோகத்திற் சஞ்சரித்து வந்தனன். பிரமாவானவர் தனது உலகத்தி னொருபக்கத்தில் கலியாண தீர்த்தமென்று ஒரு தடாகமுண்டாக்கி இதில் யாராவது முழுகுவாரேல் அவர்கள் பெண்ணுருவமடைவரென்று ஆணையிட்டு வைத்தனர். ஒருநாள் இரட்சசு அத்தடாகத்தின் கரையிலுள்ள ஒரு மரத்தின் சமீபம்வந்து அம்மரத்தின்மீது ஒரு கிளியிருக்கக்கண்டு அதனைப் பிடிக்கத் தாவியேறுகையிலது பறந்துபோய் விட்டது, அம்மரத்தினுனியினின்றுங் குளத்தைப் பார்க்க அதனுள் தன்னிழலைக்கண்டு ஓ! ஓ! இதில் என்னைப்போ லொருவனிருக்கிறான் அவனை யிப்போதே கொல்லுவேனென்று அதிற்பாய்ந்து கலக்கி யொருவனையுங் காணமல் கரையேறத் தான் பெண்ணுருவாயிருக்கக்கண்டு வெட்கிச் சமீபத்திருந்த வொரு காளிகோயிலைக்கண்டு வணங்க அத்தேவி வெளிவந்து இரட்சுசே! உனக்கு வாய்ந்த பெண்ணுருவம் நினது தந்தையால்தான் மாறும் அதுவனையில்

ஆறுமாதம் பெண்ணாகவும் ஆறுமாதம் ஆணாகவுமிருப்பா யென்றனள். இரட்சசு அவ்விடம் விட்டுத் திரும்பி, எனது ஆணுருவத்தைக் கிரகித்துக் கொண்டு எனக்குப் பெண்ணுருவத்தைக் கொடுத்தவன் இந்தக் குளத்துக்குள்ளிருந்தவன் தான் அவன் எந்த வுலகத்திலாவது ஒளித்துக்கொண் டிருப்பான் அவனை இப்போதே தேடிக்கண்டு பிடிப்பேன் என்று, இந்திரனுலகஞ் சென்று தேவேந்திரன் சபைக்குப் போனவுடன் அவன் கண்டு மோகித்து இரட்சசையிட்டுக்கொண்டுபோய் தனது மாளிகையிற் புணர வாலி பிறந்தனன். இரட்சசு அவ்விடம் விட்டுத் திரும்ப சூரியன்கண்டு காதலாகித் தனது உலகத்திற்குக் கொண்டுபோய் ஆலிங்கனம் செய்யச் சுக்கிரீவன் பிறந்தனன். பின்னர் இரட்சசு அங்குமிங்கு மலைந்துகொண்டிருக்கையில் வேதன் நாரதமுனிவரை யழைத்து, முனியே! எனது கொட்டாவியிற் பிறந்த இரட்சசு பெண்ணுருவம் வாய்ந்து அலைந்துகொண் டிருக்கிறபடியால் நீ சென்று பிடித்துவந்து நான் பல வரங்கள் பெற்ற தலமாகிய திருவான்மியூரிற்கொண்டுபோய் சென்மநாசனி யென்னுந் தீர்த்தத்தில் மூழ்குவித்துப் பெண் சென்மத்தை நீக்கி என்னுலகம் கொண்டுவருவா யென்றனர். அங்ஙனமே நாரதர் தேடிப்போய் சந்திரனுலகத்திற் கண்டுபிடித்துக் கொணர்ந்து பிரமன் கட்டளைப்படி செய்து சத்தியலோகத்திற் சேர்த்தனர்.

இரட்சசுசென்மநாசப்படல முற்றிற்று.

## பார்த்தசாரதிபாபநாசப்படலம்.



நாராயணமூர்த்தி வடமதுரையிலே வசுதேவனுக்குந் தேவகிக்கும் புத்திரனாய்ப்பிறந்து, ஆயர்பாடியி னந்தனிடத்து மவன் மனைவி யசோதையிடத்தும் வளர்ந்து பலராமனுக்குத் தம்பியாய்க் கிருஷ்ணனென்னும் பெயர் பூண்டு வளருகையில் இவன் மாமன் கஞ்சன் கேள்வியுற்று இவனால் தன்னுயிர் நீங்குமென்று அசரீரியாலுணர்ந்து, இவனைக்கொல்லும்படி பூதகி என்னுமரக்கியை யனுப்பினன். அவள் அழகிய பெண்ணுருவங்கொண்டு குழந்தையை மடிமீது வைத்துப் பாலூட்ட பாலுண்ணுவதுபோல வவளுயிரையுமுண்டனன். தொட்டிலினித்திரை செய்கையிற் காலுதறியழுகையில் அவ்வுதையுண்ட சகடந்தூளாயின. அச்சமயத்து ஒருவன் கண்ணனைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திலெழும்பவு மவன் விழிபிதுங்கத்தாக்கிக் கொன்றனன். தவழ்ந்து விளையாடி மண்ணுண்ணக்கண்ட யசோதை யொரு சிறுகோல் கொண்டோச்ச வாய்திறந்தழ வாரம்பித்தனன். அப்போதவன் வாய்வழியே சர்வாண்டங்களையுங் கண்டு வியப்புற்று உடனே மறந்து எடுத்தணைத்து முத்தமிட்டுக் கீழேவிட்டுத் தயிர்கடையச் சென்றனள். கண்ண

னயலார் வீடுகளிற் சென்று உறியைத்தாவி வெண்ணெய் முதலிய திருடி யுண்ண் தாய் பிடித்துவந்து உரலுடன் சேர்த்துக்கட்டிவைத்தனள். உரலை மெல்லவிழுத்துக் கொண்டு சென்று இரண்டு மருதமரங்களி னடுவிற்றுக்க அம்மரங்கள் முறிந்து வீழ்ந்து பழைய வடிவங்களைப் பெற்றுப் போயின. கண்ணன் பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டிருக்கையில் ஒரு அசுரன் கன்றுருவங்கொண்டுவரலு மதனைத் தூக்கி விளாமரத்தின்மீது வீசிக்கனி யுதிர்த்து அவ்வசுரனுயிரினைப் போக்கினன். மற்றோரசுரன் பட்சியுருக் கொண்டுவந்து கண்ணனை விழுங்குதலு மவன் வாயினுழைந்து இரண்டாகப் பிளந்துவிட்டனன். மலையடிவாரத்தோர் நாள் இராக்கதனொருவன் வாயைத் திறந்துகொண்டிருக்கக் கண்ணன் குகையெனவெண்ணி நுழைந்து உண் மையறிந்து உடனே கொன்று அவன் சாபத்தை நீக்கினன். பிரமாவான வர் பசுக்கூட்டங்களையும் இடையர் பிள்ளைகளையும் கவர்ந்துகொண்டு மறைய உடனே அப்பிரமன் வெட்கமடைய யாவரையுஞ் சிருஷ்டித்துக்கொண் டனன். யமுனை தீரத்தின் சமீபத்துற்ற வோர்மடுவின் விஷநீரை ஆயர் பிள்ளைகளுண்டு மடிய அவர்களை யெழுப்பி அம்மடுவிலிருந்த காளிங்க னென் னும் பாம்புமேலேறிநடித்து அப்பாம்பின் மனைவியர் வேண்ட விடுத்தனன், கண்ணனைப் பார்க்கும்படி வந்துகொண்டிருந்த நந்தனை அக்கினிவளைந்து கொள்ள அவை முழுவதினையும் வாரியுண்டனன். தன்னோடு விளையாடிக் கொண்டிருந்த பிள்ளைகளையுந் தீசூழ அதனையு முண்டனன். இடைப்பெண் கள் தங்கள் ஆடை முதலியவற்றைக் கரைமீது வைத்து மடுவிலிறங்கி ஸ்நானஞ் செய்து கொண்டிருக்கையில் கண்ணன் அவர்கள் வஸ்திரங்களை யெடுத்துக்கொண்டு சமீபத்துற்ற ஒரு புன்னை மரத்திலேறி யிருந்து அவ் வாய்ச்சியர் பலவிதமாகக் கேட்டுங் கொடாமற் வெளியேவந்து நிர்வாணமாய் நின்று அஞ்சலித்தவர்க்கே கொடுத்து யாவருக்குங் காதலையூட்டினன். அவர்கள் மயங்கிக் கண்ணனைச்சூழ்ந்துகொள்ள அவர்களோடும் பற்பலவகை யான லீலைகளைச் செய்தனன். யமுனை தீரத்தொருநாள் வேய்ங்குழலை வாயி னில் வைத்துக் கண்ணன் பாடுதலும் குடத்தியர்கள் கேட்டோடியும் வந்து பரவசராய்வேண்ட அவர்களொவ்வொருவரோடுந் தனித்தனிசையோ கஞ்செய்து சந்தோஷிப்பித்தனன். சரஸ்வதி தீரத்தில் தனது சுற்றத்தி ன ரோடும் பிராமணரோடுஞ் சென்று சிவபெருமானுக்குத் திருவிழாகொண் டாடி மகிழ்ந்தனன். தனது தந்தை நித்திரை செய்கையில் ஒரு பாம்பா னது விழுங்கக்கண்டு அதனைக்கொல்ல அது பழையவரக்கனுருவைவாய்ந்து விடைபெற்றேகின. தான் யமுனைதீரத்திலுலாவி வருகையிற் சங்கசூட னென்பன்வந்து தாக்க அவனைக்கொன்று அவன் கரத்திருந்த மணியை யெடுத்து பலராமற் கீந்தனன். பசுநிரையுள் எருதுருவங் தாங்கிவந்த வோ ரவுணனை யோரறையால் வீழ்த்தினன்.

இத்தகையவரிய செயல்களைக் கஞ்சன் கேள்வியுற்றுக் கேசி யென்பவனைக் குதிரையுருவத்தோடு மனுப்பிக் கண்ணனை மாய்க்க வுத்தரவளித்தனன். அவ்வாறுவந்த குதிரையின்வாயில் கரத்தைக் கொடுத்துத் தூக்கி வீசி யெறிந்தனன். மயன், எச்சன், வியோமனென்பார் கானவர் மக்களைக் கொண்டுபோய் ஒருமலையின் முழையிலடைக்கக் கண்ணனுடனே மீட்டுக் கொண்டனன். கஞ்சனிவையனைத்தையு மறிந்து கோபாவேசத்தனாய், மல்லர்களை யழைத்து இங்குவருங் கண்ணனோடு யுத்தஞ்செய்து அவனையுமவனண்ணனையுங் கொல்லுவீர்களென்று கட்டளையிட்டு அவர்களை யிட்டுக் கொண்டு வரும்படி அக்குரூரனென்பவனை யனுப்பினன். அவன் சென்றழைக்க வவன் பின்னே பலராமனோடு கண்ணன் மதுரைக்குச் சமீபம் வந்து வழியிலெதிர்பட்ட அரசனது வண்ணானைக்கண்டு ஆடைகேட்க அவன் மறுக்கவுமவனைக்கொன்று கலைகளைப் பறித்து யாருக்குமீந்து தானுமுடுத்திக்கொண்டனன். பின்னர் அரசனுக்கு ஆபரணமணிவோன் பல கலன்களோடும் வர வாங்கிப் பூண்டுக்கொண்டனன், கூனியொருவள் பல சுகந்தங் கொணர்ந்து எந்த வேற்று அவள்கூனை நிமிர்த்தி விட்டனன். உடனே யரசனது விற்சாலையினுழைந்து அங்கிருந்த வில்லுகளை முறித்துச் சபையினுழைய வெதிர்த்த குவலயாபீடமென்னும் யானையை வாலைப்பிடித்துச் சுழற்றி மோதிக்கொன்று முன்வந்த மல்லரை வீழ்த்திச் சிங்காசனத்திருந்த கஞ்சன்மீது சிங்கம்போற் பாய்ந்து உயிரைக் குடித்தனன். தேவர்கள் பூமாரி பொழிந்து ஆர்த்தனர்.

பின்னர் கண்ணனும் பலராமனுங் காசிக்ஷேத்திரத்திநுக்குச் சென்று சாந்திபனி முனிவரிடத்து எட்டெட்டுக்கலைகளையு மறுபத்து நான்குதினங்களில் கற்றுத் தேர்ந்து அவருக்குப் பாதகாணிக்கையாக அனேக வருடங்கட்கு முந்தி முதலையாலுண்ட அவர் குமாரனை யெமலோகத்தி னின்றுங் கொணர்ந்துகொடுத்து மீண்டு மதுரையிலேவாழ்கையில், சராசந்தன் எதிர்த்துப் பதினேழுதரந் தோற்றனன். கலவயவ னென்பான் பலசேனையோடு மெதிர்க்க அவனுக்குத் தோற்று விட்டவன்போலு மோடி ஒரு குகையில் தவஞ்செய்துகொண்டிருக்கு முசுகுந்தன் பின்னர் மறைந்தனன், கலவயவன் கண்ணனைக் காணாது முசுகுந்தனை உதைக்க வவன் கண்விழித்தெறித்தனன். பின்னர் அவ்வரசனுக்கு வேண்டிய வரங்களீந்து திரும்புகையில் சராசந்தன் வரக்கண்டோடி யொருமலையின் முழையினுழைந்தனன். சராசந்தன் அம்முழைக்குத் தீவைத்து விட்டேகவுங் கண்ணன் குதித்துவெளி வந்து மதுரையைச் சார்ந்து சமுத்திரத்தின் மத்தியிற் பனிரண்டுயோசனை அகளநீளத்தில் துவரையென வொருபட்டண மூண்டாக்கி வாழ்ந்து வருகையில், யொநந்த நாட்டுச் சுகவிரோதயன் மகளைப் பலராமற்கு விவாவகஞ்செய்வித்து, சிசுபாலனுக்குக் கொடுக்கவேண்டு மென்றிருந்த விதர்ப்ப நா

ட்டு உருக்குமன் தங்கையை அவ்வுருக்குமணியினுளவினாலேசென்றுயுத்தஞ் செய்து கொணர்ந்துதான் விவாகஞ்செய்து, சத்யபாமை, காளிந்தி, சாம்பவதி, மித்திரவிந்தை, சத்தி, இந்துபத்திரை, இலக்ஷணை இவர்களையு மணந்து, பலபுத்திரர்களோடும் வாழ்கையில், சாம்பவதிக்கு மாத்திரம் புத்திரனில்லாக் குறையால் உபமனிய பகவானை யடுத்துச் சிவதீட்சை பெற்றுச் சிவலிங்கப்பூசை செய்து சாம்பனை முதலான குமாரர்களைப்பெற்று இருந்தனன்.

இங்ஙனம் வாழுகையில் அஸ்தினபுரியில் பஞ்சபாண்டவர்கள் துரியோதனனால் நாடிழந்து வனம்வாசஞ் சென்று திரும்பித்தஞ்சமென்று தன்னைச் சாரக்கண்ணன் துரியோதனன்பாற் றூதாகச் சென்று காரியமுடியாததால் பார்த்தனுக்குச்சாரதியாக விருக்கவிசைந்து யுத்தத்திற்குஆரம்பித்துப் போர்க்களத்தில் இரதத்தோடும் வர அருச்சுனன் பகைவரைப்பார்த்து நிதானித்துத் தனது சாரதியை நோக்கிச் சொல்லுவான். மைத்துனா! இங்கிருக்கின்றவர்கள் யாவருஞ் சுற்றத்தார்களாகக் காணப்படுகிறார்கள். இவர்களை யெல்லாம் கொன்றுவிட்டு எத்தனைகால நாம் வாழப்போகிறோம், இதுவரையி லுலகையாண்டவர்க ளொருவரையுங் காணோம், ஆசையினால் இவர்களை யெல்லாங் கொன்றுவிட்டு இந்த மண்ணையாளேன் என்றனன். சாரதி அருச்சுனனை நோக்கிப் பார்த்தனே! இவ்வுலகில் விவகாரத்திற் சத்தியமென்றுசொல்லும் கருமங்களியாவும் பாரமார்த்திகத்திலி யாதொருபயனுமில்லையாய் முடியும். பலகுடங்களிலுள்ள ஆகாயமுற்றும் வானாகாயமே போல சீவகோடிகள்யாவும் பிரமமே யாகும்,இந்த வுண்மையையறியாது அறிவீனத்தால் பேதம் பாராட்டிக் கருமங்களிற் கட்டுண்டழிவர், நானும் பிரமம், நீயும் பிரமம், நின்கையம்பும் பிரமம், பகைவரும் பிரமம், யுத்தமும் பிரமம், ஜெயமும் பிரமம், தோல்வியும் பிரமம், எல்லாம் பிரமமேயாகும், ஏகமாகிய பிரமந்தானே போக ரூபமாக நின்று அப்போகத்தை யாவருக்கு மூட்டுதலினாலே நீயேன் வீணாக மோகமுற்றாய் உடனே யுத்தம் செய்குவா யென்றனன்.

இந்தப்பிரகாரமருட்டவுமருச்சுனன் வீராவேசத்தோடு பதினெட்டுநாள் கண்ணனின் பலதந்திரங்களால் யுத்தஞ்செய்து வெற்றி புனைந்து தனது தமையன் தருமனுக்கு முடிசூட்டினன். இவ்வகையிற் பாரதப்போர்முடியவும் கண்ணன் தனது துவரை நகரைநோக்கிச் செல்லுகையில் வழியிலுபமனியபகவானைக்கண்டு திருவடியில் வீழ்ந்து பற்பலவிதமாகத் தோத்தரித்து வணங்கி எதிரே நிற்க, முனிவர் கூறுவர், பார்த்தசாரதியே! இவ்வுலக நன்மையின் பொருட்டு நீ அவதரித்தாயாயினும் உன் நியமத்தை மறந்து வஞ்சகப்போர் முடிப்பித்ததே யன்றி, நினது தோழனருச்சுனனுக்கு வெற்றியுற அச்சமயத்தி லவனை மருட்டிச் சற்காரியமாகிய சிவபூசை யாதியனமுத்திக்

கேதுவாகவும், அவை விவகாரத்திலுக்கே யென்று கூறினை, வேதவுண்மை நீயறிந்திருந்தும் அவன் மயங்கும் வண்ணம் அச்சமயங் கூறினையாயினும், இதுண்மை யென மற்றையர் நம்பிக் கெடுவதற்கேதுவாயினமையின், நினக்குப்பாவம் வந்தெய்தியது, அதை யொழித்தற்கு வகைதேடுதி யென்றனன். கண்ணன் அந்தோ! என்செய்வேன் விளையாட்டுக்காரியம் வினையாக முடிந்தது, இதையொழித்தற்குத் தேவரீரே உபாயங்கூறவேண்டுமென்ன, முனிவர், கிருஷ்ண! எத்தகைய பாவங்களையும் போக்குவது சிவலிங்க தரிசனமேயல்லாமல் வேறில்லை. இத்தகைய தரிசனமுஞ் சிறந்ததலங்களினேரிடில் மிகப்புண்ணியமாம். ஆதலின் சிறந்த திருவான்மியூர்ச் சென்று பாவநாசத் தீர்த்தத்திற் படிந்து சுத்தனுருக வென்றனன். உடனே விடைபெற்றுத் திரும்பிவான்மியூரடைந்து பாவநாசத்தீர்த்தத்தின் மூழ்கி விபூதியணிந்து உருத்திராக்கப் பூண்டுமருந்தீசனைத் தோத்தரித்தனன். சுவாமி யெதிர்வந்து கண்ண! என்னைத்தவிர வேறு பொருள் இல்லையென்னும் மறையுண்மையைத் தேறாது வேறு விபரீதப்பொருட்படுத்தியருச்சுனனை மயக்குவித்தாயாகலின் நின்னைப்பாவம் பற்றியது. அதைப் பாவநாசத்தீர்த்த நீக்கியது. இன்னுஞ் சின்னாளுக்குள் வைகுண்டமடைதியென்று மறைந்தனன். பார்த்தசாரதி உடனே பலதரம் பூமியில் வீழ்ந்தெழுந்து வான்மியூரை வலம்வந்து மெள்ளத்திரும்பி அவ்வெல்லையினுக் கோர்கடிகைத்தூரத்திலுள்ள ஒரு அல்லிக்கேணிக்குச் சமீபத்திற்றங்கித் தினமும்வாழ்ந்து, இரவுதோறுஞ் சென்று மருந்தீசனை வணங்கி மீள்வன். இவ்வணம் பார்த்தசாரதிப்பெருமாள் தங்கிய இடத்தைத் திருவல்லிக்கேணி யென வின்றும் வழங்கியனேகவடியார்கள் சென்று போற்றிச்செல்வமுதலிய பெறுவர். சிலகாலம் வாயில் கண்ணன் இவண்தங்கி வான்மியூரீசனுக்குப் பலதிருவிழா முதலிய செய்து தரிசித்துத் தனது துவரைநகருக்கேகினன்.

பார்த்தசாரதிபாபநாசப்படல முற்றிற்று.

---

## சந்திரன் காமநாசப்படலம்.



அத்திரிமுனிவர் தனது புத்திரனாகிய சந்திரனைப் பிரகஸ்பதி முனிவரிடத்திற் கல்வி கற்கும்படி விட்டுவைத்தனர். அவனவ்வாறே படித்துவருகையில் அவனழகைக்கண்டு பிரகஸ்பதியின் மனைவியாகிய தாரை மோகங்கொண்டு அவனுக்கு வேண்டிய உபசாரங்கள் பல குறைவற நடத்தி வருகையில், தனது குருமனைவியின் சரசநடையினைக்கண்டு சகியாது தனக்குள்ளே சொல்லுவானாயினன். அந்தோ! என் செய்வேன் என் தந்தை இதைக் கேள்விப்பட்டால் மிகக்கோபிப்பர். இந்திரன் தெரிந்தால் அவமானம் செய்

வனே. ஆனால் இந்தத் தாரையினழகைப்போல மூவுலகத்துங்கண்டதில்லை. இவளைப் படைக்குங் காலத்தில் பிரமன் இவள்மீது மோகியா திருந்ததும் அதிசயமே யாகும். தானாக வலியவந் தணைந்தால் என் ஊழானது மிக்க நல்லதே. இவளைக்காணுந்தோறு மன்மதன் பாணங்களால் வெகு துன்பப் படுகிறேன். இவளோ தனது அங்க முழுவதையும் நன்றாக மூடுகிறதில்லை. நானே அவசரப்பட்டால் என்னதீமை விளையுமோ, இந்த வாசையைத் தடுப்பதற்கு எந்த ஞானம் தலையெடுக்கும், இவள் வீடே குபேரன் வீடு, இவள் தரிசனமே பெரிய தவம், இவள் பெயரைச் சொல்லுதலே மந்திர செபம், இவள் கையோகமே அத்துவிதம். என்று இவ்வாறு இருவரும் சந்தற்பங்கள் கிட்டாமல் வாழ்ந்து வந்தனர்.

இவ்வாறிருக்கையில் இந்திரனானவன் விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தைப்போக்கத் தானியற்றும் அசுவமேத யாகத்தை நடத்துதற்குப் பிரகஸ்பதி பகவானுக்குத் திருமுக மனுப்பினன். இதைக் கண்ணுற்று முனிவன், தனது மனைவி தாரையை நோக்கிப் பெண்ணே! இந்திரன் யாக காரியமாக வென்னை யழைக்கின்றான் போய்வருகிறேன். நீ நமது ஆசிரமத்தில் சாக்கிரதையாக விருக்கக்கடவை, தலையை வாரிக்கொள்ளுதல், வாசனை யெண்ணெய் தடவல், திலதந்திருத்திடுதல், உயர்ந்தவஸ்திர முடுத்திடுதல், வாசனை புட்பஞ் சூடுதல், ஆபரணமணிதல், மிக்க வன்னமுண்டிடுதல் இவை முதலிய, நாயகனில்லாத காலத்திற் கற்புடைய மாதர்கள் செய்யார்கள், நீ இந்தத் தருமங்களை யனுசரித்து வாழ்வதுடன் நினக்கு வேண்டுங் காரியங்களை நமது சந்திரனைக்கொண்டு முடித்துக் கொள்ளுவாய், அவன் வயதிற் சிறியவனாயினும் புத்தியிற் பெரியவனே யாவன். இவனை வேறாக நினையற்க, இல்லற நடத்துவதில் நிபுணன் நின்னை விழியினிமைப்போலக் காப்பன், எனக்கு விடைதருவா யென்றனன்.

தாரை இவ்வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்துத் தலைகுனிந்து, தரையைப் பெருவிரலினாற்கீறிக் கண்ணீர் சிந்த, வலது கரத்தைக் கன்னத்தில் வைத்துக்கொண்டு விம்மி விம்மி யழுது சொல்லுவள். நாயக! நினது விபரீதவார்த்தை போதும், இது உனக்கே யழகாயிருக்கிறது. நின்னைப் பிரிந்து தனியாக வெப்போதாவது நான் வாழ்ந்த துண்டோ? ஏழையின்மீது ஏதாவது கோபமுண்டோ? தங்கட்கு மனந்தா னெப்படி துணிந்ததோ? போய் வருக வென்று எப்படி சொல்வேன் சொல்லேனேல், யாகத்தைத் தடுத்த பாவம் வரும், தேவரீர் தீர்த்த யாத்திரை செய்ததாலும், தீட்சைவகித்துக் கொண்டிருந்ததினாலும், உபாசனை முதலிய விரதங்களினாலும், முனிவர் கூட்டத்துடன் வாழ்ந்ததலினாலும், எனது ருது தினங்களாலும் பலநாள் நமக்கு ஆலிங்கனமில்லாது நாள்கள் கழிந்தன. இருந்த காலத்தும் இத்தகைய

அவதிவாய்க்குமேல் நான் எவ்வாறு சகித்து வாழ்வேன், நின்னைத் தடுப்ப னேல் என் கற்பில் பங்கவரும் ஆயினும் எத்தனை நாளைக்குள் வந்திடுவீரொ ன்பதை யாகிலுஞ் சொல்லுக வென்றனள்.

பெண்ணே! யாக முடிந்தவுடன் வந்து விடுவென், முப்பதுநாள் எப்படி யாகிலுங் கழித்து விடுவாய், போகவிடை தருவாயென்று தேவமந்திரி சென் றனன். சூரியனு மேற்றிசைச் சாய்ந்தனன். குருவினுடன் சந்திரன் வழித் துணையாகச் சிறிது தூரம்போய் வருவதற்குள் தாரை சகியாது அதிசீக்கி ரம் அறுசுவையோடுங் கூடிய அன்னமுதலிய சமைத்துப் பொன் பாத்திரங் களி லமைத்து வைத்து, வாசப்பொடியுடன் வெந்நீர் தயார்செய்து,தெருவா யற்படியில் வந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தனள். வந்த சந்திரனைக்கண்டு பால! நின்குரு தனது மனைவியைப் பாதுகாக்கும்படி சொன்ன சொல்லை மறவாது என் வார்த்தையினையுந் தட்டாது இருக்கக்கடவை, பொழுது போயிற்று எழுந்திருப்பாயென வழைத்துக்கொண்டுபோய் ஒருஆசனத்திருத் தித் தனது கைவளையல் கலகலென்ன முகத்தில் நீரரும்ப முத்துமாலைச் சிக்குண்ண ஆடையைத் துடையளவுத் தூக்கி நன்றாகச் செருகிக்கொண்டு ஸ்நானஞ் செய்வித்துக் கலையாற்றுடைத்துக் குடுமிக்கு வாசனையூட்டி, வஸ் திர முடுத்துப் புட்பமுடித்து அன்னம் படைத்துப் பருப்பிட்டு நெய்வார்த் துப் பலவிதகறிகளுடன் உண்ணச் செய்து விசிறிகொண்டு விசிறி மிருது வான சரசவாத்தைகள் பேசிக்கொண்டிருந்தனள்.

சந்திரன் உண்டபின்பு எழுந்திருந்து தாரை தன்னிடத்து அதிக மோ கமாவிருக்கிறளென்ற குறிப்பறிந்து சமீபத்துள்ள ஒரு நந்தவனத்திற் போ யிருந்தனன். தாரை யுடனே * துவர்விரையோடு ஓமாலிகையிலூறிய நீரிற்கு ளித்து, சரிகைமே கலைபூண்டு, பட்டு இரவிக்கை யணிந்து, வாசனை தடவிப் பலவாபரணந்தரித்து, புட்பஞ்சூடிக்கொண்டு சந்திரன் தங்கு நந்தவனநோக் கிவர வாரம்பித்தனள். சிறிது இரவிக்கையைத் தளர்த்தித் தனஞ் சிறிது பிதுங்க அடிக்கடி கரத்தால் தலையைத்தடவிக் கொண்டு, பக்கத்திருக்கும் செடிகளில் புட்பங்கொய்து, சிறிது வாய்க்கால்களைத்தாண்டி மரத்துனிழ

* துவர்வகைபத்து - பூவம் திரிபலை புணர்வன் சருங்காலி,நாவலொடு நான்மரம். விரைவகை ஐந்து - கொட்டந்துருக்கந்தகரமகிலாரம், ஒட்டிய வைந்தும்விரை - ஓமாலிகைவகை முப்பத்தைந்து - இலவங்கம் பச்சிலைக் கச்சோலமேலம், குலவியநாகணங்கோட்டம் - நிலவிய, நாகமதார்வரிசிதக் கோலநன்னாரி, வேகமில்வெண்கோட்டமேவுசீர் - போகாத, கத்தூரிவேரி விலாமிச்சைக்மரேணுகமாஞ்சியுடன், எண்ணுஞ்சயரோகமின்புகழு - கன்னி யிளம், புன்னைநறுந்தாது புலியுகிர்பூஞ்சரளம், பின்னுதபாலம்பெருவகுளம்- பன்னும், பதுமுகநுண்ணேலம்பைங்கோடுவேரி, கதிர்நகையாயோமாலிகை.

விற்சென்று வண்டுக்கூட்டங்களின் பாட்டுகளுடன் தானும்பாடி,பல சரசத்துடன் சென்றனள். சந்திரன் கண்டு சகிக்கவொண்ணாத பரவசத்தாற் புந்திதிகைத்து ஓ! ஓ! நமது தவமே திரண்டு உருவாவருவதுவோ, என் ஊழின்பெருமை நன்று! நன்று!! மூவுலகத்தும் இத்தகைய வுருவமுமுண்டோ, வச்சிரத்தினாலேயே யமைந்த தேகமோ, இது பிரமன் படைப்பிலடங்கிடுமோ, நட்சத்திரக்கூட்டங்களெல்லாம் இவள்முன் என்னவாகும், இவள்தேகத்திலுற்ற அங்கமொன்றினை இன்னதற்குவமையென மதிப்பவர் ஏழையறிவையுடையவரேயாம். இவள் தேகத்தினழகைக் கவர்ந்து கொண்டு உலகத்திலுள்ள பொருளனைத்தும் பிரகாசிக்கின்றன. இத்தகைய வழகி தனித்து இங்குவருவாளேல் மன்மதனாயினும் சரணமடைய மாட்டானோ, இவளழகின் சாயையால் இந்த நந்தவன முழுவதும் மிகவழகாத் தோன்றுகிறது. என்று இந்தப்பிரகாரம் வியப்புற்றுத் தனக்குள்ளே சிந்தித்துக்கொண்டிருக்கையில் தாரைசமீபித்து வந்து குஞ்சிறிப்புடன் வாசனை கமகமெனக்குந்தித் தனது மனக்குறிப்பைக் காட்டினள்.

சந்திரன் கண்டு பரவசமாகி உடலஞ் சில்லென்ன, தனது காதலையுள்ளடக்கிக் கொண்டு ஆண்மையைவிடாது என் தவம் பலித்துவிட்டது, இவள் தனிமையாயினள் ஆயினுமாதனை நம்பப்படாது இன்னமுந் தப்பேன் இலையேல் குறிப்பின்படி நடப்பேன் என்று எண்ணிக்கூறுவான். தாரையே! நான் தனியாயுள்ள இடத்தில் நீவரலாமோ, வீட்டில் வேலையில்லையோ, நாயகனில்லாதசமயம் இந்தவிதமாக வலங்கரித்துக்கொண்டிருப்பது கற்புடையாருக்கழகாகுமோ,நாமிருவருஞ் சுத்தமாக வதிந்தாலும் அன்னியர்கள் ஏசாரோ? அதிசீக்கிரம் போகவென்றனன். இந்தப் பிரகாரங் கூறிய சோமனைத் தாரைநோக்கி உடுபதியே! நின்னிடத்து நான்வந்தா லுலகமென் சொல்லும், உன்னைக் காணுதற்கே கலன்கள் பூண்டேன்.வீட்டுவேலைகளை யியற்ற வேறு காலமில்லையோ, உன்னைக்காட்டிலும் வேறு செயலென்ன விருக்கிறது. என்னைப்போலுஞ் சகித்தவர்களொருவருமில்லை. பூர்வதவத்தின் நல்வினையால் உன்னைத் தனியே யிங்குக்கண்டேன். உன்னுடைய கட்டழகை எண்ணி எண்ணி மூர்ச்சித்தேன், நினது மார்பைத் தவழ விம்மிய தனங்களை எனதுகரங்களால் அதுக்கி அதுக்கி யாண்டுவந்தேன், மன்மதனாற் பட்ட துன்பத்தைக்கூற என்திறமாமோ, வஞ்ச மில்லாது கூறுவேன், நின்னழகு என்னைக் கொளுத்திவிட்டது, அதனால் நினது சரணடைந்தேன் துரையே! உடனே ஆலிங்கனம் செய்கவென்றாள்.

சந்திரன் கேட்டுத்திகைத்துப் புளகாங்கிதங்கொண்டு கூட்டியதெய்வத்தைக் கொண்டாடி மீட்டுஞ்சொல்லுவன். தாரையே! நீ நல்லமரபிலே பிறந்

தாய் தேவகுருவின் மனைவியானுய், மூன்று லோகத்து மாதருள்ளு மரசி யாயினை, நீயிவ்வாறு நடத்தல் உலகத்திலேச்சன்றோ, நினது நாயகனைவஞ் சிப்பையேல் தேவர் நகையாரோ நாடிய வெனக்கும் பாவமன்றோ, தீராத நோயுளனேனும், தீமையுளனேனும், தரித்திரனேனும், அங்கவீனனேனும் நாயகனுய் வாய்ந்தபின்னர் அவனேடு வாழ்தலே யுத்தமியின் லட்சணம். இதற்கு மாறுபட்டால் தாயுந்தந்தையும் பகைத்திடுவர் மாமனு மாமியும் நீக்கிவிட முயலுவார்கள், சுற்றத்தார் கொன்றுவிட நினைப்பார்கள். ஆகை யால் இந்த வபவாத நமக்கென்னத்திற்கு என்றனன்.

தாரை சந்திரனை நோக்கி அம்புலியே! நீ கூறிய நியாயமனைத்து மெ னக்குந் தெரியும், நீ சொல்லுதல் மீனுக்கு நீந்தக்கற்றுக் கொடுப்பது போ லும், இக்கதைகளை யெல்லா மொருபக்கம் சட்டிவைப்பாய். மாதர்கள் சை யோகமே ஆனந்தம், அவர்களது மலையை யொத்த தனங்களோடு பழகியறி யாத நீ குற்றங்கூறிக் காலத்தை வீணுய்க்கழிக்கின்றுய், விகடமான வார்த் தை யிதுகாறும் போதும், உன் ஆசையை யடக்கிக்கொண்டு வெளியிலே தேதோ பேசுகின்றுய், சரணமென்றடைந்த வென்னை அவமாவிடுதல் பா வமாகும், இந்தத் தேகமுனக்கடிமை என்ன அவமானம் வந்தாலும் எனக் குத் துன்பமில்லை. என்னழகை யெல்லாங் காட்டினிலவாக்கழித்திட் டேன். நின்னதரத்தைத் தந்தால் நினக்கு மிகப்புண்ணியம், சின்னவயது முதல் நானின்னை வளர்த்தேன் பெரியவனுயினபின் என் சொல்லைத் தடுக் கின்றுய், உன்னையணையுமுரிமை யெனக்குண்டு என்பது மறந்தனைபோ லும், நீ படித்தபடிப்பின் சாமார்த்தியத்தை யிங்குக்காட்டவேண்டாம்,நாய கன் சொல்லைத் தடுத்தல் பாவமென்று சொல்லினை, உன்னை நான் நாயகனு கக் கொண்டபின்பு உன் சொல்லைத்தடுத்ததுண்டோ, நாயகனிடத்து மனை விகேட்டுக் கொள்ளும் விருப்பத்தை முடிக்காதிருத்தல் நாயகனுக்கழகாகு மோ ஆகையால் நீயே தவறிவிட்டாய். தாருகாவனத்திலும், ஆயர்பாடியி லும் நடந்த கதை நாமறியேமா, பிரமன் தான் பெற்ற சரஸ்வதியை மனை யாகக்கொண்டான், கண்ணன் தனது அத்தையாகிய ராதையை யணைந்தி ட்டான், கவுதமன் பத்தினியை இந்திரன் புணர்ந்தான், பிருந்தையை விஷ்ணு சேர்ந்தான். இவர்களெல்லாந் தேவரென்று முனிவரென்று இன் னமுமில்லையோ, மாதர்கட்குத் தக்கபடி இன்பத்தைக் கொடுக்க சத்தியில் லாத மெலிந்த முனிவர்கள் தங்கள் மனைவியர் பிறனைநாடிச் சுகத்தையனுப விப்பரென்று பனையோலைகளி லெழுதிப் பயமுறுத்தி வைத்திருப்பதை யுன்னைப்போன்றோர் நம்பி பலனிழந்தார், இது உண்மை. மாதர்கள் சுகத்தை யுணராத முனிவர்கள் தவஞ்செய்து தேகத்தைச் சுமையாத்தாங்கிக் கொ ண்டு காட்டிற்றிரிவர். புதுமணப் பெண்களை யணைந்து வாழ்வதினுங் கல்வி யில் தேர்ந்துள்ள நல்லார் சையோகமே பேரின்பம். இந்த வுண்மையை என்

ணிடத்துத் தேர்ந்திடுவாய். இதனால்வரும் பாவத்தை நானேற்றுக்கொள்ளு வேன். எனக்கு உயிர் பிச்சைகொடுக்கும் புண்ணியத்தை நீயேற்றுக்கொள் ளுவாய், இந்தச்சொல்லை மறுப்பையேல், இனி யொருக்கணமுந் தாளேன். துரையே! யடடா வீணாகக்காலங்கழிப்பதிற் பிரயோசனமில்லை, இதுவரை யில்போதுஞ் சல்லாபம் நின்றேனை வழங்காயென்று அதிசீக்கிரஞ் சந்திரன் மீது விழுந்து அணைந்தனள்.

இருவர்களு மல்கட்டாய்க் கட்டிக்கொண்டு பரவசமாய் மூர்ச்சித்துச் சிறிது நேரம் பேச்சின்றித் தெளிந்து பெருமூச்சிட்டு அதரமுண்டு பலதர முத்தமீந்து கலகலவென்று முத்துமாலைகள் சிக்குண்ண, குழலவிழ காற் சிலம்பு சத்திக்க,வியர்வையரும்ப வலமிடமாகப்புரண்டனர்.பின்னர் தாரை யெழுந்து ஒரு சுற்று ஆடையோடு மற்றைய வாடையைத்தோளின்மீது போட்டுக்கொண்டு அவிழ்ந்து வீழ்ந்த கூந்தலை இடது கரத்திலேந்தி வலது கரத்தாற் சந்திரன் கரத்தைப்பிடித்துக்கொண்டு தன்வீட்டிற்குள்சென்று கட் டிலிலேறியவுடன், சந்திரன் தாரையை யணைத்து அவள் முகத்தில் புன்ன கையரும்ப ஆபரணம் பிரகாசிக்கச் செவ்வாய் துடிதுடிக்க, தனங்கள் விம்ம இரவிக்கையவிழ இடை நடுநடுங்க, சரசசல்லாபங்களோடு, விழிகள் சிவக்க, இரண்டுபேயோதரங்களை வருடி, ஆடையையவிழ்த் தெறிந்து நிதம்பத்தைத் தடவி, கூந்தல் அவிழ்ந்துசோர, கொடிபோலச் சுற்றல், மரத்தைப்போலே றல், எள்ளரிசிபோற் கலத்தல், பால்நீர்போ லொன்றுபடல், தொடையா னெருக்கல், குறிகள் சேர்த்தல், கொங்கை யழுத்தல், நெற்றி பொருத்தல் என்ற எண்வகை ஆலிங்கனங்களை நடாத்தி; நுதலை நீவி, முத்தமிட்டு, உச்சி, கொங்கைகளினடு, சகனம், முதுகு, கன்னம், பிடர், நெற்றி, தொ டை இவ்வெட்டிடங்களில் முறையே கைவிரல் குவித்துத்தட்டல், குட்டு தல், அங்கையாற்றட்டல், பையக்குத்தல், தர்ச்சனியாலூன்றல், தர்ச்சனி யாலு மத்தியமத்தாலு நெருக்கல், மேற்படி விரல்களை மடக்கிப் பற்றுக் குறடுபோலப் பிடித்தல், தர்ச்சனியாற்றுருவுதல் என்ற எண்வகைத்தாட னங்களைச்செய்து; கண், கபோலம், கொங்கை, நெற்றி, கைம்மூலம், நிதம் பம், வாயிதழ், உந்தி என்ற எட்டிடங்களிலினுஞ் சும்பனமியற்றி; கழுத்தி னிடத்துந் தனத்தினிடத்தும் வளைவாகவும், கடிதடத்தில் எதிரெதிராகச் சேர்த்தும், மேற்கூறிய மூன்றிடத்து நுனிவளைவாகவும், கொங்கையினடிப் புறத்தி லொன்று, மேற்புறத்தில் மற்றைய நாலுரேகைகளும், கொங்கைக ளின் முகட்டிடத்து ஐந்தும், கொங்கையின்மீதும் அல்குலினும் பின்பு றத்தினு மூங்கிலிலையைப்போலும் அறுவகையாக நகக்குறிகளையிட்டு; அத ரத்தில் சிவப்புறவும், கபோலத்தும் அதரத்தும் வடுப்படாமலும், கபோ லத்தில் பல்லுமிதழும் பொருந்தவும், அதரத்தில் பல்தைக்கவும், கைம்

மூலம், நெற்றி, மார்பு, தொடை, இவ்விடங்களில் அழுந்தும்படியாகவுந் தந்தக்குறிகளை யமைத்து; பெருவிரல், புறந்தாள், பரடாள், முழந்தாள், அல்குல், நாபி, மார்பு, முலை, கைம்மூலம், கழுத்து, கபோலம், வாய், கண், நெற்றி, உச்சி என்ற பதினைந்திடங்களினும் அமுதநிலை யாராய்ந்து; சங்கு வளையல் நெறியவும், பாதச்சிலம்புகலீரெனவும், கண்கள் சிவப்பேறவும், அதரம் வெளுப்புறவும், வியர்வை யரும்பவும்; கண்டத்தில் மயில், புறா, அன்னம், காடை, வண்டு, குயில், கோழி, செம்போத்து என்கிற எண்வித புட்குரல்களைக்காட்டியும்; கற்பகத்தைப் பின்னியகாமவல்லிக்கொடிபோலப் பின்னிக்கொண்டு; மல்லாத்தல் ஒருக்கணித்தல், உட்காரவைத்தல், நிற்றல், குனித்தல் என்ற ஐவகைக்கரணங்களோடும்; குதிரை,பாம்பு,கோழி, பூனை, புலி முதலிய பலநிலைகளையும் புரிந்து; சிந்தையுடன் சிந்தையாய் ஆவியொடு ஆவியாய் ஒன்றுபட வானந்தக்கடலின் மூழ்கிப் பேரின்ப மெய்தியபோது சூரியன் உதயமாயினன், இருவர்களும் கட்டில்விட் டிறங்கி வெளிவந்து நீராடி வேறுகலையாதி யணிந்து அடிசிலுண்டு நாளுஞ் சுகபோக மனுபவித்து வருகையில் இவர்கட்கு அஷ்டமத்திற் சனியென்ன தேவகுருவும் வந்து சேர்ந்தனர்.

தனது நாயகனைத் தரிசித்த தாரை எதிரோடி வணங்கிக் காலலம்பி அந்நீரைக் கண்ணிலொற்றிப் பீடத்தெழுந்தருளச் செய்து சமீபத்திருந்தனள். கணவன் மனைவியை நோக்கி ஏதாவது குறையுளதோவென்றனர். நீரில்லாத குறையொன்றே யென்றனள். பின்னர் சந்திரன் வந்து வணங்க விபூதியீந்து நீ யெவ்வாறு காலங்கழித்தனை யென்றனர். தேவரீர் வருகையினையே யெதிர்பார்த்துக்கொண்டிருந்து தாரா சந்தோஷிக்க நினது பணி போற்செய்து வந்தனன் என்றான். குருகேட்டுச் சந்தோஷித்து வாழுகையில் இருவருக்கு நடக்குஞ் சல்லாபங்களாற் குறிப்பிற்றேர்ந்துபயமுறுத்திக் கேட்கத் தாரை யுண்மையைச் சொல்லி விட்டனள், உடனே இருவரையும் சபிக்க ஆரம்பித்தனர். தாரை பணிந்து ஐய ! நடுநிலையை நாடுங்காலத்தில் தவறாதவர்கள் ஒருவருமில்லை, எதுவும் ஊழ்வினையின்படியே நடக்கும், குற்றம் செய்தவர்க்கன்றோ பரிகாரமும் ஆகமத்திற் கூறப்பட்டுள்ளது, பிரமன் முதலியோரு மனங்கலங்கினரேல் ஏழை யெம்மாத்திரம், ஏதோ சிறுவர்கள் மயங்கி விட்டோம். மன்னிக்க வேண்டுமென்று வணங்க, தேவகுருவு மனைவியின் குற்றத்தைப் பொறுத்துச் சந்திரனை நோக்கி நீ க்ஷய ரோகத்தால் மெலியக்கடவை யென்று சபித்தனர். சந்திரன் அவ்விடம் விட்டுத் திரும்பித் தன் தந்தையிடஞ் செல்லுகையில் வழியில் நாரதனைக்கண்டு வணங்க, முனிவர் சந்திரனைப் பார்த்து, பால ; என்னகாரியஞ் செய்தாய், காமமே பொய் கொலை களவு முதலிய பலதீமைகளுக்குங் காரணமாகும்,

காமத்தாலிந்திரன் ஆயிரங்கண்கள் பெற்ருன், காமத்தால் குபேர ஞெருகண் ணிழந்தான், காமத்தா ஞரணன் அடைந்த சாபங்கட்கு அளவில, காமத்தா லுண்டாகும் பாவங்கள் பல. ஆகையால் உனக்குக் காமங்காரணமாக உண் டான சயரோகமொழியத் திருவான்மியூர்ச் சென்று காமநாசனித் தீர்த்தத்து மூழ்குவையேல் எல்லாவினையுமொழியும் என்றவுடன், முனிவரிடம் விடை பெற்றுச் சென்று அத்தீர்த்தத்து மூழ்கிச் சொக்கநாயகியுடன் மருத்தீசனைத் தோத்தரித்துத் தனது நோய்நீங்கப் பெற்றுத் திரும்பித் தனது தந்தை அத் திரிமுனிவரிட்ஞ் சென்று வாழ்ந்தனன்.

சந்திரன்காமநாசப்படல முற்றிற்று.

---

## சூரியன்பூசைபுரிந்தபடலம்.

சூரியன் பிரதி தினம் உதயமாகுந்தோறு மந்தேகமென்னுந் தீவி லுள்ள இராக்கதர்கள் அறுபதிஞயிரங்கோடிபேர் வந்து எதிர்த்துயுத்தஞ் செய்துவந்தனர். அதனுற் சூரியன் சகிக்க முடியாது ஒருநாளோட வாரம் பித்தனன் தேவர்கணடுங்கினர். அச்சமயத்திலாகாயத்தில் அசரீரியுண்டாகிச் சூரியனே! ஓடவேண்டாம், சம்புத்தீவிலே பாலாற்றின் வடக்கிலே சமுத்திர தீரத்திலேயுள்ள திருவான்மியூர் க்ஷேத்திரத்தினை நாடி அங்கு எழுந்தருளி யிருக்கு மருந்தீசனை வணங்கில் இராக்கதர் பயமொழியு மென்னச் சொல்லி யது. சூரியன் கேட்டு என்னசெய்வது என்னுடைய தொழிலைவிட்டு எங்ஙு னஞ்செல்வேனென்று துக்கித்துக்கொண்டிருக்கையில், நாரதமுனிவரெழுந் தருளி, சூரியனே! நினது தம்பியாகிய அசனியென்பவனை யழைத்து நினக் குப் பதிலாகத் திருவான்மியூருக் கனுப்புவை யென்று சொல்லிப்போயி னர், அங்ஙனமே சூரியன் அசனியை யழைப்பித்துக்கூற அவனுமங்ஙனமே சென்று திருவான்மியூரடைந்து ஓரிரவினுக்குள் சூரியதீர்த்தமென வொன் றுண்டாக்கி மருந்தீசனை வணங்கிப் பலவரமேற்றுச் சூரியனுக்கு அறிவித் துச் சென்றனன். பின்னர் சூரியன் தன்னுடனெதிர்க்கு மிராக்கதரை எதிர்த் துச்சாடித் தோற்கடித்துச் சுகமே வாழ்ந்தனன். இச்சூரிய தீர்த்தத்திலாடு வோரும் இத்தீர்த்தங்கொண்டு சுவாமிக்கு அபிடேகஞ் செய்விப்பவரும் தேவரேயாவர், எவர்களென்னென்ன விரும்பி முழுகினுமவையாவுமடை வர், மந்திரஞ் செபந் தருப்பணம், மகேசுரபூசை, இத்தடத்தருகிற் செயில் ஒன்றுக்காயிரம் பலனதிகமாகும், இத்தடத்தினருகிலிருக்குந் தருக்களின் மீது இந்நீர்படுதலினுல் அவையுமோட்சத்தையே யடையும், பிரதிதினமும்

அதனுள் மூழ்கித் திருவான்மியூரிலுறைவார் சிவமே யாவார். சூரியன் இரவில் பூசித்த தலமாகலின் சுவாமி இன்றளவுமேற்குமுகமாக விருக்கின்றனர்.

சூரியன்பூசைபுரிந்தபடல முற்றிற்று.

---

## இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

அசுரர்களுக்குள் தலைமையினை வாய்ந்த அகிதவுட்டிரனென்பவன் தவமியற்றிப் பிரமனிடத்துப் பலவரங்களைப் பெற்று உலகங்களை யெல்லாஞ் செயித்து விண்ணுலகிற் சென்று இந்திரனோடு யுத்தஞ்செய்ய ஆரம்பித்தனன். தேவேந்திரன் தன்னாலானவரையில் போர்புரிந்து முடியாமல் அவனுலகத்தைவிட்டு மண்ணுலகத்திலிறங்கி இமயமலையின் சமீபத்திலுள்ள பிருகுவின் பன்னசாலைக்குவந்து சேர்ந்தனன். முனிவர்கண்டு எதிர் வணங்கி அழைத்துக்கொண்டுபோய் ஆசனத்திலெழுந்தருளச் செய்து, நடந்த வரலாற்றினை விசாரித்து வருத்த முற்றுத் தனது ஆசிரமத்திலேயே வைத்துக்கொண்டிருந்தனர். ஒருநாள் பிருகுமுனிவர் புத்திரியினது அழகைக் கண்டு சகியாது இந்திரன் சமீபத்திற்சென்று ஒருமுத்தமீந்தனன். இதைக் கண்ணுற்ற பிருகுமுனிவர் இந்திரா! நீ இராக்கதனுகப் போகக்கடவை யென்று சபித்தனர், அங்ஙனமே வாசவன் இராக்கதனாய்க் காட்டில் வாழ்ந்துகொண்டிருந்தனன். தேவர்கள் தங்கள் தலைவனை யிழந்ததால் ஒருங்கு கூடிப் பூமியிலுள்ள முசுகுந்தனைவேண்டலும் அவன் உடனே விண்ணுலகஞ் சென்று அகிதவுட்டிரனைக் கொன்றுதான் அரசாட்சி செய்து வந்தனன்.

இந்திராணியானவள் தனது நாயகனைப் பிரிந்த துக்கத்தால் சத்தியலோகஞ் சென்று பிரமனிட முறையிட, பிரமன் தேறுதல்கூறி யனுப்பியபின், நாரதனை யழைத்து அதிசீக்கிரஞ் சென்று தேவேந்திரன் கொண்ட இராக்கத உருவைமாற்றிவைப்பா யென்னலும், முனிவர் இசைந்து பலவிடங்கள்தேடி இந்திரனைக்கண்டு பிடித்துத் திருவான்மியூருக் கிட்டுக்கொண்டுபோகவும், எல்லையை மிதிப்பித்தவுடன் இராக்கதவுருவ மொழிந்தது. வாசவன் ஊருட்சென்று சென்மநாசனித் தீர்த்தத்தில் முழுகிச் சுத்தனாகி மருந்தீசனைப் பற்பல விதமாகத் தோத்தரித்து விடைபெற்றுத் தன்னுலகம் சென்று முசுகுந்தச் சக்கிரவர்த்தியைக்கண்டு அரசாட்சி யேற்று வாழ்ந்தனன்.

இந்திரன்சாபந்தீர்ந்தபடல முற்றிற்று.

---

## பிரமன்றிருவிழாச்செய்படலம்.



சற்பமொன்று முடிந்து மறுபடியும் உலகமுற்பத்தியாகையில் நாராயணன் உந்தியினின்றும் பிரமன் பிறந்து தந்தையை வணங்கி நான் செய்ய வேண்டிய பணியைக் கட்டளையிடவேண்டு மென்றனன். விஷ்ணுவானவர் வேதனை நோக்கி மைந்தனே! எனக்கு நினக்கு மற்றையவுயிர்க்குந் தந்தையாய்த் தாயாய்த் தமராய் விளங்கும் பெருமானை நோக்கித் தவம்புரிந்து இந்த வண்டத்திலான்மகோடிகளைப் பழையபடி செய்விப்பா யென்றனர், பிரமன் நாரணனைத் துதித்துப் பிதாவே! வேண்டிய பலனை யதிசீக்கிரத்தில் கொடுக்குந்தானத்தை அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டுமென்ன, நான்முகனே! வேதங்கள் கூடிப் பூசித்த வேதாசலத்திற்கும், நமது அம்மையார் மயிலாகவிருந்து வணங்கிய திருமயிலைக்கு மத்தியிலுள்ள திருவான்மியூரினை நாடுதியென்று தந்தை கூறவு மிசைந்து பிரமாவானவர் அந்தத் தலத்தினை யடைந்து பதினாயிரம்வருடந் தவமுஞற்ற சுவாமி வெளிவந்து பிரம! நினக்கு யாதுவரம் வேண்டுமென்ன,இவ்வுலகத்திலுள்ளஉயிர்வருக்கங்களைப் பழையபடி சிருட்டிக்க வேண்டுமென, அங்ஙனமே தந்தோம் நீ யாவையும் படைத்த பின்னர் இத்தலத்தில் நின்பெயராற்றட முண்டாக்கி எனக்குத் திருவிழா நடத்திவைக்கக் கடவாயென்று சொல்லி மறைந்தனன்.

அந்தணன் அங்ஙனமே எல்லாவற்றையு முண்டாக்கித் திருவான்மியூரில் பிரமதீர்த்தமென வொன்று எடுத்து அந்நீரால் சுவாமிக்குத் திருமஞ்சனஞ் செய்து பின்ன ரொருநாள் அகத்தியராதி முனிவர்களை யழைத்து அவர்களைக் கொண்டு ஆகமங்களை யெல்லா நன்றாக விசாரித்து அவற்றிற் குறித்தபடி திருவிழாச் செய்யத் தொடங்கினன். தேவர்க ளெல்லாரு மொன்றுகூடி மருந்தீசற்குப் பல ஆபரணங்களையும் பல பீதாம்பரங்களையும் அணிந்தனர், மாடவீதியை யலங்கரித்தனர், தேரினைச் சிங்காரித்து வைத்தனர், எங்கணுந்தோரணங்கட்டினர், நவரத்தினங்களிழைத்த தம்பங்களில் வாழை கமுக முதலிய கட்டினர், பூப்பந்தர்கள் சந்திகளில் தூக்கினர், வீதிகடோறுங் கோலமிட்டனர். பங்குனிமாதத்தில் கொடியேற்றிப் பல விழாவாற்றி, முதனாள் முதல் பத்துதினங்கள் வரையில் பலபல வாகனங்களினிலேற்றி ஆனைமுகன் ஆறுமுகன் சண்டேசன் அம்மையாருடன் அரனுக்குத் திருவிழாவாரம்பித்து, காலையில் வீதிவலம் வந்த பின்னர் இரவில் மறையவர் வேதபாராயணம் சொல்லவும் நாரதாதிமுனிவர்கள் யாழ் வாசிக்கவும், " குங்கிலியதூப மெங்கும் வீசவும், அடியார்கள் நாமாவளி

கூறவும், வெண்குடை நிழற்செய்ய, கவரி ஆலவட்டம் சாந்தாற்றி நெருங் கவும், கொடிகள் தாங்கவும், எள்விழுதற்கிடமின்றிப் பலர்சூழ்ந்தனர். சூரியன் சந்திரன் நட்சத்திரம் யானை சிங்கம்போன்றதிவட்டிகள் முன்னும்பின்னுமேந்த, பேரிகை, யாழ், கைப்படகம், பறை, முரசு, குடமுழவு, சின்னம், பூரி, எக்காளம், சங்கம், தாளம், தண்ணுமை முழங்கவும் வெளிவந்தனர். வீதிகடோறும் கும்பம்வைத்தனர், வேதியர்கள் அட்டமங்கலத்துடனே தட்டுகளில் தேங்காய் தாம்பூலம் காசு கற்பூரத்துடனே வந்து தீபாராதனை செய்யவும், சிலவடியார் ஆடவும், சிலவடியார் பாடவும், மறைமுதல்வன் வந்தான், கறைமிடற்றோன் வந்தான், வான்மியூர் மருந்தீசன் வந்தான், என்று பலபலவிதமாகத் தோத்தரிக்கவும். இத்தகைய ஆடம்பரத்துடன் நான்கு வீதியும் வந்து கோபுரவாயலிலடைந்தவுடன் ஆதிசைவர் நிவேதனத்துடன் தீபாராதனைகாட்ட, அரம்பையாதியர் தாளவிசைமருவிய நடனமிட ஆலத்தி சுழற்றி எச்சரிக்கை சோபனம்பாடினர், நந்தியெம்பெருமான் முன்னரேக ஆலயத்துட் பிரவேசித்துப்புண்ணியன் எழுந்தருளினன். இவ்வகையாகப்பத்துதினமும் பலவாகனம் விமானந்தேர்முதலியமீதிற்கொண்டாடிச்சமுத்திரத் தீர்த்தமாடி அடுத்த நாள் மவுனபலிதூவிப் பிறபூசையுமாற்றித் தூக்கியவிடைக் கொடியை யிறக்கினர். மற்றொருகாலத்தில் தெப்பவிழா கொண்டாடினர். இத்திருவிழாக்காலங்களில் பிரமாவானவர் அனேகமானபூதானம், சுவர்ணதானம், அன்னதானமுதலிய செய்து சுவாமியின் சந்நிதானத்தில் வணங்கிநின்றான். மருந்தீசன் வெளிவந்து, பிரமனே! நீநடத்திய திருவிழாவைக் கண்டு மகிழ்ந்தோம் என்னவரம் வேண்டுமென்ன, சுவாமி! இனி இத்தலத்தில் திருவிழாசெய்பவரும், செய்விப்பவரும், தரிசித்தவரும், இயன்றமட்டும் உதவிசெய்தவரும், வேண்டியபணியியற்றினவரும், சகல செல்வங்களுடன் வாழ்ந்து பின்னர் முத்தியடைதல்வேண்டுமென்றனன். அங்ஙனமே யாகுக வெனக்கூறி மறைந்தனன். பின்னர் பிரமன் சத்தியலோகஞ் சென்று வாழ்ந்தனன். மற்றொருகாலத்தில் இந்திரன் விஷ்ணுமுதலியவர்களும் திருவிழாச் செய்து மகிழ்ந்தனர்.

பிரமன்றிருவிழாச்செய்படல முற்றிற்று.

---

## வேதம்பூசைபுரிபடலம்.

சோமுகனென்னு மசுரன் தவமியற்றிப் பலவரங்களை யேற்று எட்டுத் திக்குகளையும் வென்று தன்னை யெதிர்ப்பவரொருவருமின்றி விண்ணுலகிற் சென்று தேவர்களை யெல்லாம் வாட்டிச் சத்தியலோகம் புகுந்து புயங்க

ளைத் தட்டித்திசை முகன்மவுனமுற்றிருக்க அவ்விடத்திருந்த வேதங்களை யெல்லாம் வாரிக்கொண்டுவந்து சமுத்திரத்திலே சேற்றிற் புதைத்துத்தான் கடலிலொளித்துக்கொண்டனன். மறையவன் வருத்தமுற்று விஷ்ணுவினிடத்தில் கூறவும் அவன் மிகுகோபம் வாய்ந்து, பெரியதோர் மீனுருவமெடுத்து கடலிற் பாய்ந்து தேடிச் சோமுகனைக்கண்டு அவனைக் கொன்று வேதங்களைப் பிரமனிடத்தில் கொடுத்துவிட்டனன். மீனுருவம் பெற்ற நாரணன் இத்தகைய அரியகாரியஞ் செய்தார் என்னைக் காட்டிலு வேறொருவருண்டோ வென்று கருவங்கொள்ளத் தான்கொண்டமீனுருவ நீங்காது வெறிகொண்டு சமுத்திரத்தைக் கலக்கி உபத்திரவஞ்செய்யப் பிரமன் முதலியோர் கயிலையையடைந்து முறையிட, கண்ணுதற்கடவுள் கிருபைகூர்ந்து தனது சமீபத்திருந்த சாத்தனுை யழைத்து நீபோய் விஷ்ணுவாகிய மீனின்செருக்கை மாற்றி வருவாயென்றேவலுஞ் சாத்தனுர் போய்க்கடலிற்புகுந்து அம்மீனின் கண்களைப்பிடுங்கி மமதையைகெடுத்து வந்து சிவபெருமான் றிருவடியில் கண்களை வைத்து வணங்கினன். முதல்வன் குஞ்சிரிப்புட னெழுந்தருளி யிருந்தனன். விஷ்ணு தனது மய்க்கமொழிந்தவுடன் தனது மீனுருவத்தை மாற்றச் சமுத்திரவழியே சென்று திருக்கோணமாமலையை யடைந்து பூசித்துத் தனது பழைய வுருவத்தினை யேற்று வைகுண்டஞ்சென்றனன்.

வேதங்கள் பிரமாவை நோக்கி ஐய! நாங்கள் அசுரன் கரத்திற்பட்டதனுலுண்டாகிய பாவத்தைப் போக்கடிக்கத் தவமியற்றவேண்டு மொருதலத்தினைத்தெரிவிக்கவேண்டுமென்றன. நான்முகன் வேதங்களே! உம்மிடத்திலெழுதப்பட்டுள்ள உயர்ந்த தலத்தினை மறந்தீரோ வென்ன, ஆம், ஆம், ஞாபகத்திற்குவந்ததது அந்தத்தலத்தினுக்குப்போய் வருவோமென்றுவிடைபெற்று மனிதவுருவம் வாய்ந்து தென்தேயநாடித் திருவான்மியூருக்குச் சமீபிக்கையில் அரிய சோலை முதலிய சூழ்ந்த இடத்தைக்கண்டு அங்கேயேயிருந்து தவமுஞற்றி அங்குச் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து, திருவான்மியூருக்குச் சென்று தினமுந் தரிசித்துவருகையில் ஒருநாள் சங்கரன் பிரத்தியட்சமாகி உங்களுக்கென்ன வேண்டுமென்ன, பெருமானே! அசுரனுல் எங்கட்குவந்த பாவம் போகவேண்டும். இத்திருவான்மியூர் எல்லையினில் நாங்கள் தவமியற்றிய இடத்திற்கு * வேதசிரேணி யென்றும் இத்தலத்திற்கு வேதபுரியென்றும் வழங்க வேண்டுமென்றன. அங்ஙனமே யாகுகவெனக் கூறிக்கரந்தனன்.

வேதம் பூசைபுரிபடலம் முற்றிற்று.

---

* இக்காலத்தில் இவ்வூர் வேளச்சேரி என்று வழங்குகிறது.

## காமதேனுவருள்பெறு படலம்.



வசிட்டமுனிவர் ஒருகாலத்தில் இந்திரனிடத்திற்குப் போய் தேவேந்திரனே! காசித்தலத் தெழுந்தருளியிருக்கும் விசுவநாதனை ஒருமண்டலமபிடேகித்துப் பூசை செய்ய வெண்ணங்கொண்டேன். நின்னிடத்துள்ள காமதேனுவை யென்பாலனுப்புவையேல், தினம் வேண்டிய பால் பெறுவேனென்றுகூறி அத்தெய்வப் பசுவோடும் வாரணசியடைந்து நாடோறுஞ்சதாசிவத்திற்குப்பாலபிடேகஞ்செய்துவந்தனர். ஓர்நாள் அப்பசு காசியைவிட்டுக் கானகங்களில் மேய்ந்துகொண்டே கயிலைச்சாரலடைந்து ஓர் சோலையினழகினைக்கண்டு ஓர்நாள்முற்று மவ்விடமே யிருந்து மற்றையநாள் காசிவந்து சேர்ந்தது. வசிஷ்டர்கண்டு கோபித்துக் காட்டுப்பசுவாகப் போகக்கடவதென்று சபித்தனர். காமதேனு சாபமேற்றுத் தெற்கு நோக்கி வந்துகொண்டிருக்கையில் திருவான்மியூரெல்லைக்குள் வரலும் தனக்கு நல்லறிவு பிறந்து ஓ! ஓ! ஏதோவதிசய மிவ்விடத்துள்ளதென்று எண்ணி அங்குமிங்குநோக்க ஒரு புதருக்குள் சிவலிங்கப்பெருமா னிருக்கக் கண்டு வியப்புற்றுத் தனது மடியினின்றும் பாலைப் பெருமான் றிருமுடியிற் சொரிந்து தினமு மவ்வெல்லையுள் வாழ்ந்து வந்தது.

இங்ஙன நிகழுகையில் அடுத்த * சைதையென்னு மூராயாண்டு வருபவனுகிய சதயூவென்னு மரசன் தனது ஊரிலுள்ள பயிர்களைக் காட்டுமிருகங்களழித்து வருதலைக் கேள்வியுற்று வேடருடன் சென்று வனத்திலுள்ள விலங்குகளை யெல்லாங் கொன்று திரும்புகையில், சிங்கமொன் றினைக்கண்டு துரத்திக்கொண்டேகையில் அதுவான்மியூர் எல்லைக்குட் சென்றது. அங்குலாவிக் கொண்டிருந்த காமதேனு அந்தச் சிங்கத்தினைக்கண்டு தாவித்தன் கொம்புகளாற் குத்திக் கொன்றுவிட்டுப் புதருக்குணுழைந்து கொண்டது, அரசன்பார்த்து ஆச்சரியமுற்று என்னே! என்னே! சிங்கத்தினைப்பசுவென்றகதையை யான் கேட்டதில்லை, இதனுண்மை யறிவே னென்று புதருக்குச் சமீபித்துப் பசுவைப் பிடிக்க வெண்ணிப்புதரைச்சுற்றிலுஞ்சேனையைச் சூழச்செய்து ஒரு சிறு அம்பைப் புதருள் பிரயோகித்தனன் காமதேனு திடீலென வெழும்பித் தன்குளம்பை விலிங்கத்தின் மேல் வைத்துத் தாண்டி வெளிவந்து யாவரையும் கொன்றுவிட்டுப் பழையபடி யுட்புகுந்து, சுவாமியின் மேனியில் குளம்பு பதிந்திருத்தலைக் கண்டு பயந்து அனேகமானத் தோத்திரங்களைப் புரிந்து நிற்கச் சுவாமி வெளிவந்து தேனுவே! பயப்படற்கநினது அடியை நமது கந்தன் பாதமெனக்கொண்டோம். நமது

* இந்நகரிப்போது சைதாப்பேட்டை யென்று வழங்குகிறது.

மேனியில் வாய்ந்த சுவட்டினைக் காஞ்சியில் காமாட்சிதந்தவளைத் தழும்பு முலைத் தழும்பினைபோற் பெற்றேம். நினது பாலால் நம்மைத்தினமும் அபிடேகித்தனையாகலின் நாம் வெண்மேனி பெற்றுப்பால்வண்ணனென் னும் பெயரைப்பூண்டனம். நீ சுகமாய்ப் பழைய வடிவத்தை வாய்ந்து விண் ணுலகஞ் சார்ந்து வாழுதி என்று கட்டளையிட்டப்பின் இறந்த அரசர் முதலியயோரையுமெழுப்பித்தாமறைந்தனன்.

சதயூவரசனெழுந்து விம்மிதமடைந்து, தன் மந்திரிமுதலியோரை யழைத்து அமைச்சர்களே! நானினி இத்திருவான்மியூரினை விட்டுவருவே னில்லை. எனது புத்திரனுக்குப் பட்டங்கட்டி நீவிரெல்லா மவனுடனிருந்து சைசையினையாளக்கடவீரென்றனுப்பியபின் தான் நீராடிப் பூதிபூசி உருத் திராக்சமணிவடந்தாங்கிப் பால்வண்ண நாதனைப்பணிந்தேத்திப், பலரை யழைத்துப் பொருளீந்து மண்டபங் கோபுரங் கோயில் முதலியகட்டி, வீதி வகுத்துச் சைவர்களைக் குடியேற்றி நகரமுண்டாக்கித் திருவிழா நடத் தித்தரிசித்து வாழ்ந்து ஒருநாள் மோட்சதாயனி என்னுந் தீர்த்தத்து முழுகி கயிலையை யடைந்து சிவகணத்துள் வாழ்ந்தனன்,

காமதேனுவருள்பெறுபடல முற்றிற்று.

---

## இயமன்பழிதீர்படலம்.

வேதாகமங்களை யெல்லா நன்குபடித்துத் தேர்ந்த மிருகண்டுமுனிவர் மருத்துவதி யென்னு மனைவியோடு வாழ்ந்துவருகையில், புத்திரனில்லாக் குறைவால் காசிப்பதியினையடைந்து தவமியற்றி ஒரு புத்திரனைப்பெற்றனர் அப்புத்திரனுக்கு வயது பதினாறு என்று விஸ்வேசனருளியும், கவனியாது புத்திரபாக்கியமடைந்த வொன்றே சிலாக்கியமென வெண்ணி நாளொரு மேனிபாக அப்பாலனை வளர்த்து வருகையில், பதினாறுமாண்டு நெருங்கவுந் தாய் தந்தையர் கவலையின் மூழ்கித் துன்பப்படுகையில் பாலன் மார்க்கண் டன் தாய் தந்தையர்களைப் பணிந்து கூறுவானாயினான். நீவிர் துக்கப்படு வதினா லென்னபயன். அந்த வெமபயமொழிப்பதற்கு முன்னமே யறிந் துள்ளேன். யாவுஞ் சிவாஞ்ஞையின்படியே நடக்கும். எமனுணை யொன்று மென்னைச் செய்யாது விடைக்கொடுப்பீராக வென உத்தரம் பெற்றுத் தென்றிசை நோக்கி நடந்து திருக்கடையூ ரடைந்து பற்பல விதமான அரியபுட்பங்களை யெல்லாங் கொய்து அமுதகண்டீசனை யருச்சனைசெய்து

க்கொண்டிருக்கையில் எமன் அவ்விடஞ் சமீபித்து அழைக்கவும், மார்க்கண்டன் இலட்சியஞ் செய்யாது பூசைசெய்துகொண்டிருந்தனன். நமன் கோபித்துப்பலவிதமாகப் பயங்காட்டியும் பயப்படாமையால் உடனே பாசக்கயிற்றைவீசிப்பிடித்தனன். மார்க்கண்டேயன் சம்போ சங்கரா மகதேவா இரட்சியும் இரட்சியுமென்றலர அக்கணஞ் சிவபெருமான் வெளிவந்தருளி எமனையெட்டியுதைத்து மார்க்கண்டேயன் பயமொழித்துக் கருணைகூர்ந்து மறுபடியு மெமனை யெழுப்பி மறைந்தனன்.

காலனெழுந்து பலதரம் பணிந்து முனிவனை வாழ்த்தி விடைபெற்று வடக்குத்திசையை நோக்கிச்செல்ல, வழியிற் சண்ணுற்ற நாரதரிடத்து நடந்த யாவற்றினையுமுரைக்க அவர் மறலியே அதிசீக்கிரஞ் சென்று இதோ சமீபத்துற்ற திருவான்மியூரடைந்து பூசிப்பையேல் உன்பாவமொழியுமெனக்கூற, அங்ஙனமே அவ்வூர் எல்லைக்குச்சமீபத்திற்சென்று வேதசிரேணி என்னுமிடத்திலடைந்து அவ்விடத்தே தனது காத்துத்தண்டத்தை நிறுத்தி அதனையே சிவலிங்கமாகப் பாவித்துப் பூசித்துத் தடமொன்றுண்டாக்கி இரவுதோறுஞ் சென்று மருந்தீசனை வணங்கிவருவன். ஒருநாள் பால்வண்ணநாதன் வெளிவந்து காட்சிகொடுத்து என்ன வேண்டுமென, சுவாமீ! உன்னடியை வணங்குவோர்க்கு எமபயமில்லையென்பதை யறிந்தேன். மார்க்கண்டேயனால் பட்டபாடு ஜென்மந்தோறுமறவேன். வேதசிரேணியினில் நான் தாபித்த இலிங்கத்திற்குத்தண்டபாணியென வென்பெயர் வழங்கவேண்டும். அச்சிவலிங்கப்பெருமானை வணங்குவார்க்கு மந்தகாசம் வயிற்றுளைவு, மேகம், குட்டம், வாதம், காமாலை முதலிய எல்லா நோய்களு மொழிதல் வேண்டும் என்றனன். உன்விருப்பத்தின்படியாகுக வென்று கூறி மருந்தீசன் ஆலயத்துட் சென்றனன்.

பின்னர் காலன் வேதசிரேணியினிற் றண்டபாணிக்கடவுளுக்குப் பிரமோற்சவமுதலிய பலதிருவிழா நடத்திப் பலவரங்களை யேற்றுத் தன்னுலகஞ் சென்றனன்.

இயமன்பழிதீர்படலமுற்றிற்று.

## இராமன்வரம்பெறுபடலம்.



அயோத்திமாநகரிலே அரசாட்சிசெய்த தசரதசக்ரவர்த்தி தனக்குப் புத்திரனில்லாது வருந்துகையில் தனது குருமுனிவர்கட்டளைப்படி யொரு யாகம் வளர்த்தனன். அவ்வியாகத்தினின்றும் ஒரு பூதமுதித்துக்கொடுத்த ஓதனத்தைத் தனது மனைவிமார்கள் மூவருக்கு மீந்தனன். அம்மூவருக்கு நான்குபுத்திரர்கள் பிறந்தனர். அவருள் மூத்தவன் நாராயணமூர்த்தியினவதாரமாகப் பிறந்தமையால் அவரருமையையெண்ணி இராமனென்று பெயரிட்டனர். இவ்விராமன் றனது தம்பியருடன் வளர்ந்து சகலகலை

களும் பழகி விஸ்வாமித்திரன் பின்னர் சென்று தாடகையைக்கொன்று அம்முனிவர் வேள்வியை நிறைவேற்றி அகலிகையின் சாபத்தை நீக்கி மிதிலியையடைந்து சனகமுனிவர் உத்தேசப்படி அவரிடத்திருந்த வில்லை வளைத்துச் சீதையை மணந்து அயோத்திநோக்கி வருகையில், எதிரில் வந்து வாதுகூறிய பரசுராமன் தனுசினையொடித் தெறிந்து வாழுகையில், இராமனுக்குத் தந்தை மகுடஞ்சூட்ட எண்ணியதைக் கேள்வியுற்று, பரதன் அரசாளவும் இராமன் காட்டிற் கேகவும் கைகேசிகூற, அவ்வார்த்தையைச் சிரமேற்று மனைவியோடுந் தம்பியோடும் தெற்கு நோக்கிக் காசிமுதலிய க்ஷேத்திரங்களைத்தரிசித்துக் கொண்டு தண்டகாருணியம் வந்து வாழ்கையில், அவ்விடத்து வந்த இராவணன் கண்டு மாரீசனை யேவ அவன் பொன்மானுருக்கொண்டு சீதை முன்னுலாவினன். அதைப்பிடித்துக்கொடுக்கும்படி இராமனைவேண்ட. அவன்பின் தொடர்ந்து வெகுதூரஞ் சென்று முடியாது அம்பினலெய்து கொன்றனன், அப்போது அது சீதாவென்று இராமன் ஓசையப்போல் கூவி மாண்டது. சீதைக்கேட்டு இலக்குமணனை யேவுதலும் அவன் போனவுடனே, இராவணன் சந்நியாசி வேடங்கொண்டு வந்து பிச்சைகேட்டுச் சீதையைத் தூக்கிச் சென்றனன். இராமனுந் தம்பியும் வந்து பார்த்துச் சீதையைக் காணாது புலம்பி யொருவாறு தேறிக் கீழ்க்கடலோரமாகப் பிரயாணப்பட்டுச் சீகாளத்தி, திருப்பதி, திருத்தணிகை, திருவிற்கோலம், திருப்பாச்சூர், திருவூறல், திருவொற்றியூர், திருமுல்லைவாயல், திருவலிதாயம், திருமயிலை முதலிய தரிசித்துக்கொண்டு திருவான்மியூரை யடைந்து ஆச்சரியமுற்றுச் சந்தோஷித்து அபிடேகத் திரவியம் பல சேகரித்துத் திருமஞ்சனமாட்டி யருச்சித்துப் போற்றித் தரிசித்தனன். அப்போது ஆகாயத்தில் அசரீரியுண்டாகி, இராம! அஞ்சலை நினக்குத்தக்க வலிமையை யீந்தோம் இராவணனைக் கொன்று சீதையை மீட்டுக்கொண்டு அயோத்தி சேருவா யென்னக்கேட்டு ஆனந்தத்தித்துத் தெற்கு நோக்கி நடந்தனன்.

இராமன்வரம்பெறுபடல முற்றிற்று.

## மருந்தீசப்படலம்.

அகத்தியமுனிவர் இமயமலையினின்றுஞ் சிவபெருமான் கட்டளைப்படி பொதியமலையை நோக்கிச் செல்லுகையில், பல தலங்களைத் தரிசித்துக் கொண்டே தனது மாணுக்கர்கட்குத் திருவான்மியூரருமைகளை யெடுத்துச் சொல்லி நடந்து அந்த க்ஷேத்திரத்தினையடைந்து, பால்வண்ணர் சந்நிதானத்தில் நவநவமாகத் தோத்தரிக்கப் பெருமான் முனங்காட்சி கொடுத்து என்ன வேண்டுமென்ன, சுவாமீ! அடியேனுக்கு இவ்வுலகத்தின்கண்ணுள்ள சகலவித பதார்த்தங்களின் குணமனைத்து மெனக்குத்தோன்றி இன்னது

இன்ன நோயினுக்கு உபயோகமாகு மென்பதையும், அறிவிக்கவேண்டு மென்றனர். அங்ஙனமே யாருகவென்றருளி, மேலுமணிமந்திரம் அவ்டதங் களின் உண்மைகளையுஞ்சில வெடுத்துக்கூறி, நன்கு தெரிவித்தனர். கேட்ட அகத்தியர் சந்தோஷித்துப் பணிந்து சுவாமீ ! அடியேனுக்கு மருந்துக்களி னுண்மையைப் போதித்தமையால் தேவரீருக்கு இன்று முதல் மருந்தீச னென்ற பெயரும், தரிசித்தார் யாவருக்கு நோய் வாராமையுமாகிய வரந்தர வேண்டுமென்றனர். அவ்வாறே கிருபை புரிந்தனன்.

மருந்தீசப்படல முற்றிற்று.

## திருமணக்கோலங்காட்டியபடலம்.

இமயமலையிற் றனக்குப் பெருமான் றந்த வாக்கின்படி திருமணக்கோல காட்சியை நினைக்க அங்ஙனமே அவரெதி ரெழுந்தருளுதலும், அகத்தியர் ஆனந்தித்துப் பற்பல வகையான மடக்கு, யமகம், பதுமபந்தம், அஷ்டநாக பந்தம், இரதபந்தம், கோமூத்திரி, சுழிகுளம், திரிபங்கி, காதைகரப்பு, மாத்திரைச்சுருக்கம், பிறிது படுபாட்டுமுதலிய வற்றால் பாடித் தோத்தரித்து விடைபெற்றுப் பொதியமலைக் கேகினர்.

திருமணக்கோலங்காட்டியபடலமுற்றிற்று.

## பிருங்கிதரிசனஞ்செய்படலம்.

மகா கைலாசத்தின் ஒரு பாங்கர் எழுந்தருளியிருந்த பிருங்கிமுனிவர் ஒரு நாள் தனியேயிருந்து சிந்திக்க வாரம்பித்தனர். பசுக்களைப் பாசகாரியங் களிலாழ்த்தி அவர்க்குரிய போகங்களை யூட்டிப் பரிபாகமுற்ற காலத்துத் தன்னடியின் கீழ்வைக்கும் பெருமா னொருவனேயாம், குணத்தினைவிட்டுக் குணியெப்போதும் பிரிந்திருப்பதில்லை. குணியுங் குணத்தை விடுவதில்லை ஆகையால் குணத்தைக் குணியென்றும் குணியைக் குணமென்றுங் கொள் வதிற் குற்றமில்லை. குணகுணி பேதமுண்டாவது காரியத்தை நோக்கியே யாம். ஆகையால் வேறு வேறாகப் பிரிப்பது தோடமாகும். குணமாகவுங் குணியாகவு நிற்பவன் குணமிலாத சிவமொன்றேயாம். ஆகலின் சிவத்தை யல்லாது வேறொருவனைப்பணிவது கூடாதென்று, தினமுங் கைலாயத்திற் சிவபெருமானை மாத்திரம் வணங்கிக்கொண்டு வந்தனன். ஒரு நாள் அம்மை யார் சுவாமியை நோக்கி நாயக ! பிருங்கி, தேவரீரை மாத்திரம் வணங்கி என்னை வணங்காது, செல்வதற்குக் காரணமென்ன வென்று வினவ, பெண்ணே ! உன்னை யென்னைக்காட்டிலும் வேறாக நினையாது அபேதம் பாராட்டி வணங்குகிறானென்றனர். அங்ஙனமானால் நீர் மாத்திரம் இவ் விடத்திராது உன் பக்கத்து என்னையும் வைத்திருப்பானேன். அபேதமாக

நினைக்கின்றவன் என்னை மாத்திரம் வணங்கி நின்னை வணங்காதிருக்கப் படாதா? அவனுண்மை யறியவேண்டும் என்னை நின் தேகத்துடனே பொருத்திப் பாதியாக்ச் செய்வாயென்னலும் அங்ஙன மிசைந்திருந்தனன். மற்றையநாள் பிருங்கிவந்து தரிசித்து ஒருருவாயிருப்பதைக்கண்டு, ஒரு பாரிசமாக விருந்து சுவாமியை மாத்திரம் வணங்கி வண்டுருவமெடுத்து நடுவிற்றுளைத்துப் பெருமானைப் பிரதட்சணஞ் செய்துகொண்டு போய் விட்டான். அம்மையார் கண்டு கோபித்து அடுத்தநாள் வந்தபோது, அவன் சத்தி யனைத்தினையுங் கவர்ந்து கொண்டனள். உடனே பிருங்கி சத்தி யின்றிச்சாயக் கண்ணுதல் மற்றொருகால் கொடுக்க மூன்றுகாலானின்றனன். அங்ஙனமிருந்த முனிவனைக்கண்டு சுவாமி சொல்லுவார்.

பிருங்கியே! வேதாகமங்களினுண்மையை நீ நன்கறிந்திருந்தும் நமது காரியமாகிய சத்தியின் இரகசியந் தேராது அழகிழந்து அவலனாயினை, கதி ரொளிபோல் காரியகாரணமிருந்தும்,காரணஞ் சூக்குமமாகவுங் காரியந் தூல மாகவுமிருக்கும், காரணத்தினின்றுங் காரியம்வந்திலதேல் உலக நடவாது. காரணத்தை நோக்கிக் காரியத்தைக் கைவிடுதல் கனமன்று. காரியத்தை நாடியே காரணத்தை அறியவேண்டும். எவற்றினையும் விளக்கலாலே காரணத்தினுங் காரியமே வலிது, எல்லா நலங்களையு மடைந்திடற்குக் காரியமே காரணமாம் என்றனர். இவை முதலியவற்றைக் கேட்ட பிருங்கி முனிவர் நன்று! நன்று! அந்தோ இவ்வுண்மைகளை யறியாது சத்தியை வணங்காது சத்தி யிழந்து கெட்டேன். ஊழ்வலி பெரிது! பெரிது! என்று அம்மையப்பரை வணங்கி விடைபெற்றுத் தன்குறையைத் தீர்ப்பதற்குத் தென்றிசையை நாடித் திருவான்மியூருக்குச் சமீபத்தி லரையோசனைத் தூரத்திலுள்ளவொரு மலையைக்கண்டு அதன் வளப்பத்தைநோக்கி யாச்சரிய முற்று மதன்மீசேறி ஒரு பாறையின்மீது குந்திக்கொண்டிருந்தனர். அப் போது அம்மலையின் குகைகளினின்றுஞ் சில முனிவர் வந்து வணங்கினர். அவர்களைப்பார்த்துப் பிருங்கிமுனிவர் நீவிர்யாவரென்ன, நாங்கள் நைமிசார ணியவாசிகள் சூதரிடத்துத் திருவான்மியூர்மகிமைகளைக் கேட்டகாலத்து அத்தலத்தைத் தரிசிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டனம் அங்ஙனமே செய்வீரென்ன விடைகொடுத்து முக்காலோடுங்கூடிய பிருங்கி முனிவர் அவ்விடம் வருகிறவரைக்கும் வாழக்கடவீரென்று கட்டளையிட்டனர் அங்ஙனமே மருந்தீசனை நிதம் வணங்கிக்கொண்டு இம்மலையில் வதிகின்றோ மென்றனர். பிருங்கிமுனிவர் கேட்டு மகிழ்ந்து அம்மலைமீது ஒரு சிவ லிங்கப்பெருமானை பிரதிஷ்டித்து வணங்கிய பின் அம்முனிவரோடும் திருவான்மியூரடைந்து பால்வண்ண நாதரைப் பணிந்து தரிசித்து அனுக் கிரகம் பெற்றுத் திரும்பி * அம்மலையிலேயே சிலகாலந் தங்கியிருந்து பின்னர் கைலாயஞ் சென்றனர்.

## திருவான்மியூர்ப்புராண வசனசுருக்க முற்றிற்று.

---

இவ்வசனசுருக்க மிந்நூலாசிரியர் மாணுக்கருளொருவராலெழுதப்பட்டது.

---

* இம்மலைக்குப் பரங்கிமலை யென்று இக்காலத்தில் வழங்குகிறது.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| அ | கக | சேப்பர் | சேர்ப்பர் |
| உ0 | ச0க | பரத்தியர் | பரத்தையர் |
| உக | உ | தானே | தென்று |
| உஎ | சச | வான்மியூ | வான்மியூர் |
| உஅ | ரு0 | பரத்தியர் | பரத்தையர் |
| ௩0 | கூச | ஒழிக்கினி | ஒழுக்கினி |
| ௩கூ | க0 | சாந்து | சார்ந்து |
| ருச | கூகூ | தமை | தமைப் |
| ,, | க00 | அனைத்துஞ் | அனைத்தும் |
| ருரு | க0ரு | கேத்திர | கேத்திரத்தி |
| ,, | க0கூ | பன்கு | பங்கு. |
| எஎ | கஉ | இந்தை | இந்த |
| அச | கூ0 | ரியற்று | றியற்று |
| அரு | எக | நீளோ | னீளோ |
| அகூ | எஅ | தாரகை | தாரை |
| அஎ | அ௩ | திருதன் | திடுதன் |
| ,, | ,, | தற்றர்சனி | தர்ச்சனி |
| ,, | ,, | தற்தர்ச்சனி | தல்தர்ச்சனி |
| கூகூ | கஅ | ணோங்கி | னோங்கி |
| க0எ | ௩க | இயற்றிடர்க்கங் | இயற்றிடற்கங் |
| க0அ | ௩கூ | இடர்க்கிங் | இடற்கிங் |
| ககஉ | எ | கெணம் | கெனப் |
| ககஎ | எ | நோக்கி | நோக்கிக் |
| ,, | க0 | ஐய் | றைய |
| கஉரு | உஅ | அணிகி | அணுகி |
| கஉச | உச | யலைப்பு | லலைப்பு |
| க௩௩ | கூ | ஞன | ஞான |
| க௩கூ | உ0 | றிசைக | திசைக |
| கசக | கஅ | துவன்றிடு | றுவன்றிடு |
| கச௩ | ௩க | கருணை | கருனை |
| கசச | ௩அ | மொழிதர | மொழிதரச் |
| கரு0 | ச௩ | வீழ்தெ | வீழ்ந்தெ |
| கருக | சச | மென | மெனச் |

